# அன்பே... அருளே...

பரணீதரன்



விகடன்
வெளியீடு

# புனித நினைவாஞ்சலி

முப்பது ஆண்டுகளுக்கு மேலாக ஸ்ரீகாஞ்சி மகானின் தரிசனங்களால் எனக்குக் கிடைத்த பல்வேறு அனுபவங்களையும், அவரது அமுதவாக்கில் பெற்ற பேற்றினையும் அச்சில் ஏற்றாமல் மனத்துக்குள்ளேயே பத்திரப்படுத்தி வைத்திருந்தேன். அவற்றை எழுதி வைக்க வேண்டும் என்ற உந்துதல் இரண்டு, மூன்று வருடங்களாகவே இருந்து வந்தது. கடந்த ஆண்டு பிப்ரவரி மாதம் பெரியவாளிடம் எனது எண்ணத்தை விஞ்ஞாபனம் செய்து கொண்டு எழுதுவதற்கு அவரது அனுமதியையும், ஆசியையும் பெற்றேன்.

என் விருப்பத்தை விகடன் ஆசிரியர் அவர்களிடம் கூறியபோது, விகடனிலேயே அந்த நினைவுகளை ஒரு தொடராக எழுதும் அரிய வாய்ப்பை அவர் ஏற்படுத்தித் தந்தார். கடந்த வருடம் நவம்பர் மாதம் தீபாவளி இதழில் 'அன்பே... அருளே' தொடங்கப் பெற்று, இந்த ஆண்டு ஏப்ரல் மாதம் வரை தொடருவது என்று முடிவாயிற்று. பின்னர் அத்தொகுப்பு நூல் விகடன் பிரசுரமாக வெளியாகி, நூற்றியோராவது ஜன்ம நட்சத்திரத்தன்று பெரியவாளின் தங்கத்திருவடிகளில் சமர்ப்பிக்க வேண்டும் என்ற தமது விருப்பத்தையும் ஆசிரியர் தெரிவித்தார்.

நாமொன்று நினைக்க, தெய்வம் வேறொன்று நினைத்துவிட்டது.

'அன்பே... அருளே...' தொடரின் பத்தாம் பகுதி வெளியான வாரத்தில் பெரியவர் தமது உருவத்தை மறைத்துக் கொண்டுவிட்டார். தற்போது இந்த ஆண்டு மே மாதம் 25-ம் தேதி அனுஷ நட்சத்திரத்தன்று பெரியவாளின் நினைவாஞ்சலி நூலாக இது வெளியிடப்படுகிறது.

இந்நூலில் இடம்பெறும் அத்தனை தரிசனங்களும், அனுபவங்களும் என் நினைவிலிருந்து எழுதப்பட்டவையே. அவற்றைப் பற்றி நான் ஒரு குறிப்புகூட எழுதி வைத்துக் கொள்ளவில்லை. எழுதத் தொடங்கும் முன், ஆறு மாதங்கள் எழுதுவதற்குத் தேவையான நிகழ்ச்சிகள் நடந்திருக்குமா என்ற ஐயப்பாடும், எல்லாம் நினைவுக்கு வர வேண்டுமே என்ற கவலையும்

தோன்றியது. அதனால் 'அன்பே... அருளே...' முதல் கட்டுரை வெளியான விகடன் இதழைப் பெரியவாளிடம் சமர்ப்பித்தபோது, "குறிப்புகள் எதுவுமின்றி எழுதத் தொடங்கியிருக்கிறேன். மறந்து போய்விட்ட நிகழ்ச்சிகள் அனைத்தையும் பெரியவாதான் எனக்கு நினைவுபடுத்த வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டேன்.

பெரியவாளிடம் பிரார்த்தித்துக் கொண்டது பலனளிக்காமல் போகுமோ? தொடரை எழுதிக் கொண்டிருந்தபோது, அந்த வாரத்துக்குத் தேவையான நிகழ்ச்சிகள் திடீரென்று என் நினைவில் பளிச்சிட்டு, அவை பொருத்தமான இடங்களில் வந்து அமர்ந்த அற்புத அனுபவங்களையும் பெற்றேன் நான். அருவமாகிவிட்ட நிலையிலும், பெரியவா உடனிருந்து அன்பும் அருளும் வாரி வாரி வழங்கிக் கொண்டிருப்பதையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

தொடக்கத்தில் ஆறு மாதங்கள் எழுதுவதற்குப் போதுமான நிகழ்ச்சிகள் இருக்குமா என்று ஐயமுற்றேன் அல்லவா? முன்பே திட்டமிட்டபடி 26-வது பகுதியை எழுதி முடித்தபோது, எழுதப்படாமல் மேலும் சில நிகழ்ச்சிகள் நினைவில் நிழலாடிக் கொண்டிருப்பதை உணர்கிறேன். வற்றாத கங்கையாக, குறையாத அட்சயப்பாத்திரமாக 'அன்பும் அருளும்' உள்ளத்தளவில் பொங்கிப் பெருகிக் கொண்டுதான் இருக்கும்.

எனக்கு மட்டும் கிடைத்த அரும்பெரும் பேறாகக் கருதி, தற்பெருமையைப் பறைசாற்றிக் கொள்வதற்காக இதை எழுதியுள்ளதாக யாராவது ஒருவர் நினைத்தால்கூட, அது என் எழுத்தின் குறையேயன்றி, மனத்தின் மாசு ஆகாது. எனக்கு ஏற்பட்ட அனுபவங்களைவிட, மெய்சிலிர்க்க வைக்கும் அற்புதங்களை லட்சோப லட்சம் பக்தர்கள் பெற்றிருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். எனவே, 'எனக்கு ஏற்பட்டது' என்றில்லாமல் **'எனக்கும்'** ஏற்பட்டது என்ற உணர்விலேயே இவற்றை இங்கு நினைவு கூர்ந்திருக்கிறேன்.

இந்நூலை படித்து முடிக்கும்போது 'நான்', 'எனது', 'எனக்கு' என்ற மாயைத் திரைகள் விலகி, 'எழுதியவர்', 'படிப்பவர்' என்ற மாயத்தோற்றங்கள் மறைந்து, அன்பும் அருளும் ஓர் உருவான சத்தியப் பொருளின் விஸ்வரூப தரிசனம் மட்டுமே நிரந்தரமாக நிலைத்து நின்று, அக்கருணைத் தெய்வத்தின் புனித நினைவு மட்டுமே ஒவ்வொருவரின் நெஞ்சிலும் நிறைந்திருக்க வேண்டும் என்று உளமாரப் பிரார்த்திக்கிறேன்.

– **பரணீதரன்**

*28.4.94*

பவ ஆண்டு, சித்திரை மாதம்,

குருவாரம்-அனுஷம்

# அன்பே... அருளே...

ஆனந்த விகடன் *1961*-ம் ஆண்டு தீபாவளி மலர் பணிகள் சுறுசுறுப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. இன்னும் சில ஃபாரங்களே அச்சு ஏற வேண்டும். 'சமர்ப்பண ஃபாரம்' என்று அழைக்கப்படும் முதல் ஃபாரத்துக்கான மேட்டர் தயாராகிக் கொண்டிருந்த நேரம்...

உதவி ஆசிரியர் கோபாலகிருஷ்ணன் என்னை அழைத்து "நீங்கள் இன்று இரவே இளையாத்தங்குடிக்குப் புறப்பட்டுச் சென்று, பெரியவாளிடம் ஆசிச் செய்தி வாங்கிக்கொண்டு வந்து விடுங்கள்" என்றார்.

அறையைவிட்டு வெளியே வந்ததிலிருந்து மனம் சற்று இறுக்கமாக இருந்ததை உணர்ந்தேன். சுவாமிகளின் தரிசனத்துக்கு வாய்ப்புக் கிடைக்கும்போதெல்லாம் துள்ளிக் குதிக்கும் உள்ளத்தில் தற்போது ஒருவிதத் தயக்கம் நெருடியது. நான் தவிர்த்துக் கொண்டிருந்த பயணம் என் மீது திணிக்கப்பட்டுவிட்டது. தட்டிக் கழிக்க முடியாது. அதைரியத்துக்கும் கடமை உணர்வுக்கும் இடையே மனம் சஞ்சலப்பட்டது.

இத்தகைய என் மனநிலைக்குக் காரணம் இருந்தது. நான்கு வாரங்களுக்கு முன் 'மயிலாப்பூரில் லவகுச' என்று விகடனில் நான் எழுதியிருந்த கட்டுரை, வாசகர்களிடையே மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தியிருந்தது. அப்போது உபந்யாசச் சக்கரவர்த்தியாகத் திகழ்ந்து கொண்டிருந்த சேங்காலிபுரம் அனந்தராம தீட்சிதர் பற்றிய விமரிசனக் கட்டுரை அது. மயிலை வித்தியா மந்திரில் அவரும் அவரது சகோதரர் நாராயண தீட்சிதரும் சேர்ந்து ராமாயண உபந்யாசம் செய்ததை ஒரு நாள் கேட்க நேர்ந்தது. அருமையான பிரவசனத்தில் சில அநாவசியங்கள் குறுக்கிட்டு அபஸ்வரமாக ஒலித்தன. அதன் விளைவாக அன்று இரவே உருவானதுதான் அந்த விமரிசனம். புதிய வேகம்... உணர்ச்சித் துடிப்பு... வார்த்தைகள் சற்றுக் கடுமையாக வெளிப்பட்டு விட்டன.

ஆசிரியருக்குக் கண்டனக் கடிதங்கள் குவிந்தன. அத்துடன், தங்கள் மனத்தில் குமுறிக்கொண்டிருந்த எண்ணங்களை எழுத்தில் வடித்து அச்சேற்றியதற்கு

நன்றி தெரிவித்துப் பலரிடமிருந்து பாராட்டுக் கடிதங்களும் வந்தன.

தீட்சிதர் ரசிகர்களின் மனதை நான் புண்படுத்தி விட்டதாக என்னிடம் நேரில் கூறியவர்களும் உண்டு. வேறு சிலரோ ஸ்ரீமடத்தின் தீவிர சீடர்களான பெரும் புள்ளிகள் ஓரிருவர் தீட்சிதரைப் பொறுப்பில்லாமல் விமரிசித்ததன் மூலம் நான் சுவாமிகளின் மனதைப் புண்படுத்தி விட்டதாகவும் அதன் பொருட்டுப் பெரியவர் கோபமடைந்துள்ளதாகவும் அடுத்த முறை தரிசனத்துக்குச் செல்லும்போது, நான் சரியாக வாங்கிக் கட்டிக்கொள்ளப்போவது உறுதியென்றும் கூறி பயமுறுத்தியிருந்தார்கள்.

அசட்டுத் தைரியத்தில், எழுதக் கூடாததை எழுதி அபசாரம் செய்து விட்டேனோ என்று மனதுக்குள்ளேயே புழுங்கிக் கொண்டிருந்தேன். மிக நெருங்கியவர்களிடம்கூட என் தர்மசங்கடத்தைப் பகிர்ந்து கொள்ளவில்லை.

இந்தப் பின்னணியில்தான் சற்றும் எதிர்பாராமல் கடமை என்னை ஸ்ரீமடம் முகாமிட்டிருந்த இளையாத்தங்குடிக்கு விரட்டியது. 'என்றைக்காவது ஒரு நாள் பெரியவாளை நான் தரிசித்து ஆகத்தானே வேண்டும். என் எழுத்தின் விளைவுகளைச் சந்தித்துத்தானே தீரவேண்டும்' இப்படியொரு சுயசமாதானத்தின் அடிப்படையில் மனதைத் திடப்படுத்திக் கொண்டு இரவு புறப்படத் தயாராகி விட்டேன்.

காரைக்குடிக்கு அருகில் இளையாத்தங்குடி இருக்கிறது என்பதையும் அங்கு எப்படிச் செல்ல வேண்டும் என்பதையும் விசாரித்துத் தெரிந்துகொண்டேன்.

எதற்கும் துணை ஒன்று இருந்தால் நல்லது என்று தோன்றியது. விகடன் அலுவலகத்தில் பணிபுரிந்து கொண்டிருந்த நண்பர் எஸ்.எஸ்.கிருஷ்ண மூர்த்தியை அழைத்துக் கொண்டேன். அவர் ஒரு புகைப்படக் கலைஞரும்கூட. 1958-ல் மயிலை சம்ஸ்கிருதக் கல்லூரியில் என்னுடன் இரண்டு மூன்று நாட்கள் தங்கி, சுவாமிகளின் அனுமதியுடன் விடியற்காலை முதல், இரவு ஓய்வுபெறச் செல்லும்வரை தீபாவளி மலருக்காக நிறையப் படங்கள் எடுத்தவர். பெரியவர் மீது அவருக்கு அசைக்க முடியாத நம்பிக்கை... அலட்டிக்கொள்ளாத பக்தி.

இளையாத்தங்குடியில், கோயிலை அடுத்து ஸ்ரீகாஞ்சி மடம் முகாமிட்டிருந்த இடம்... விடியற்காலை ஐந்து மணியிருக்கும். ஸ்ரீசந்திரமௌலீச்வரர் சந்நிதியில் நின்றபடி சுவாமிகள் ஒரு முதியவரிடம் பேசிக் கொண்டிருந்தார். சுற்றிலும் நெய்க் குத்துவிளக்கின் அரைகுறை வெளிச்சம் பரவியிருந்தது. நானும் கிருஷ்ண மூர்த்தியும் சற்று ஒதுங்கி நின்று கொண்டிருந்தோம். பெரியவா எங்களைப் பார்த்தார். அவரது கண்களை நேருக்கு நேர் சந்திப்பதைத் தவிர்த்து, நான் அவசரமாக வந்தனம் பண்ணிவிட்டு எழுந்தேன். கிருஷ்ணமூர்த்தி எனக்கு முன்பே வந்தனம் பண்ணிவிட்டிருந்தார்.

சுவாமிகள் அந்த முதியவரிடம் என்னைக் காட்டி "இவன் யாருன்னு தெரியுமா?" என்று கேட்டார்.

முதியவர் என்னருகில் வந்து நன்றாக உற்றுப் பார்த்துவிட்டு "தெரியும்.. 'ஸ்ரீதர்'ங்கிற பேர்லே ஆனந்த விகடன்லே அரசியல் கார்ட்டூன் போடறார். மெட்ராஸ்லே மடத்துக்கு அடிக்கடி வருவார். பார்த்திருக்கேன்..." என்றார்.

"உனக்கு கார்ட்டூன் போடற ஸ்ரீதரைத்தான் தெரியுமா? இவன் பரணீதரன்ங்கிற பேர்லே ஆர்ட்டிகிள்ஸெல்லாம் கூட எழுதறானே... அது தெரியாதா உனக்கு...?"

சுருக்கென்று என்னுள் திகில் தாக்கியதை உணர்ந்தேன். குபீரென்று வியர்த்தது.

'இந்தப் பெயரை இப்போது ஏன் பெரியவர் சொல்கிறார்? அடுத்து 'மயிலாப்பூர் லவகுச'வுக்காக என்னைக் கடிந்து கொள்ளப் போகிறாரோ..? இங்கே வந்து சரியாக மாட்டிக்கொண்டு விட்டேன். பகவானே... சுவாமிகள் ஏன் மௌனமாயிருக்கார்..? கேட்க வேண்டியதைச் சீக்கிரம் கேட்டுவிடக் கூடாதா..? ஒவ்வொரு நொடியும் ஒரு யுகமாயிருக்கிறதே...'

முதியவர் நிசப்தத்தைக் கலைத்தார். ''இவரோட எழுத்தையெல்லாம் படிச்சிருக்கேன். ஆனா, இவர்தான் அவர்னு தெரியாது...'' – நல்லவேளை முதியவர் அத்துடன் நிறுத்திக் கொண்டுவிட்டார். 'லவகுச'வைப் பற்றி எதுவுமே கூறவில்லை. 'அவர் நூறாயுசு இருக்கட்டும்..!'

பெரியவரின் திருமுக மண்டலத்தையோ, கருணை பொழியும் கண்களையோ நேருக்கு நேர் முழுமையாகத் தரிசிக்கும் தைரியம் இன்னும் வரவில்லை. எந்தக் கணமும் அந்தக் கேள்வி என்னைத் தாக்கக்கூடும்... 'என்ன பதில் சொல்வது... அதை எப்படிச் சொல்வது?' என்ற மனப் பயிற்சியில் ஈடுபட்டிருந்தேன்.

''தரிசனத்துக்கு வந்தேளா?''

– சுவாமிகளின் பரிவான விசாரிப்பு காதில் அமுதமாகப் பாய்ந்தது.

''தீபாவளி மலருக்குப் பெரியவாளோட ஆசிச் செய்தியை வாங்கிண்டு வரச் சொல்லி கோபாலகிருஷ்ணன் அனுப்பினார்...''

சுவாமிகள் மௌனமானார். ஓரிரு நிமிடங்கள் கடந்ததும் முதியவரிடம் ஏதோ ஒரு பணியை ஒப்படைத்துவிட்டு உள்ளே சென்றுவிட்டார்.

என்னுள் சந்தேகங்கள் தலைதூக்கின. 'ஏன் பெரியவர் பதில் சொல்லாமல் போய்விட்டார்...? என் கட்டுரை பற்றிய கோபமா? அதன் தொடர்பான விசாரணையை ஒத்திப் போட்டிருக்கிறாரோ..? இந்த ஆண்டு ஆசிச் செய்தியே கிடைக்காதோ..?'

அகத்தின் 'அழகு' என் முகத்தில் தெரிந்திருக்க வேண்டும். கிருஷ்ணமூர்த்தி உற்சாகமூட்டினார். ''பெரியவா காதிலே வாங்கிண்டுட்டா.. யோசனை பண்ணிண்டிருப்பா.. திடீர்னு கூப்பிட்டு, மெஸேஜை டிக்டேட் பண்ணிடுவா... வேணுமானா பாருங்கோ...''

எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை... காலை எட்டு மணியாகியும் சுவாமிகள் கூப்பிட்டனுப்பவில்லை. மறுபடியும் நினைவுபடுத்தி விடுவது நல்லதென்று எனக்குத் தோன்றியது. ஆசிச் செய்தியைப் பெற்றுக்கொண்டு ஸ்ரீமடத்திலிருந்து சீக்கிரம் புறப்பட்டுவிட வேண்டும் என்ற துடிப்பு எனக்கு.

குளக்கரையில் தரிசனம் அளித்துக் கொண்டிருந்தார் சுவாமிகள். வந்தனம் பண்ணிவிட்டு, ''தீபாவளி மலர் ஆசிச் செய்தி...'' என்று ஆரம்பித்தேன்.

''இந்த வருஷம் நீயே ஏதாவது எழுதிடு.''

எனக்கு ஒன்றுமே புரியவில்லை. 'பெரியவா ஆசிச் செய்தியை நான் எழுதுவதா?' நான் காலையில் நினைத்தது சரிதான். இந்த வருஷம் ஆசிச் செய்தி கிடையாது. அதைத்தான் இப்படிக் கூறுகிறார். நான் செய்த தவற்றுக்குத் தண்டனை இது. சந்தேகமில்லை...

சுவாமிகள் தமக்குக் கைங்கரியம் செய்யும் ஓர் இளைஞரை அழைத்தார்.

''இவா மெட்ராஸ்லேருந்து வந்திருக்கா... கார்த்தாலே காபி குடிக்கிற பழக்கம் இருக்கும். நீங்க குடிக்கிற காபிலே இவாளுக்கும் கொஞ்சம் குடு...'' – அந்த இளைஞர் பதில் பேசாமல், தன்னுடன் வரும்படி குனிந்தபடியே எனக்கு சைகை காட்டிவிட்டுப் போய்விட்டார். பெரியவரின் லௌகீக உபசரிப்பு என்னைத் திக்குமுக்காட வைத்தது.

மறுபடியும் சுவாமிகளிடம் 'ஆசிச் செய்தி' கேட்டுவிடுவது என்ற தீர்மானத்துடன் மாலையில் பெரியவர் முன் போய் நின்றேன்.

''எழுதிட்டியா?'' என்று கேட்டார் சுவாமிகள்.

நான் பேசாமல் நின்றேன்.

''என்ன பேசாம இருக்கே?''

''என்ன எழுதுவது என்று தெரியவில்லை...''

''எதையாவது எழுதிண்டு வா... போ...''

மறுபடியும் பேரிடி... 'அதை' மனதில் வைத்துக்கொண்டுதான் சுவாமிகள் என்னை இப்படி அழ வைக்கிறார். பேசாமல் காலில் விழுந்து 'என்னை மன்னிச்சிடுங்கோ... தீட்சிதரைப் பற்றி நான் அப்படி எழுதினது தப்புதான் என்று கதறிவிடலாமா...?' என்று கூடத் தோன்றியது எனக்கு... சுவாமிகள் ஸ்நானத்துக்குச் சென்று விட்டார்.

முதன்முறையாக கிருஷ்ணமூர்த்தியிடம் தீட்சிதர் கட்டுரை தொடர்பான எனது சந்தேகத்தையும் அச்சத்தையும் பற்றிக் கூறினேன். அவர் சிரித்துக் கொண்டார். ''அதெல்லாம் இருக்காது. ஏன் வீணாகக் கற்பனை செய்து கொண்டு வேதனைப்படுகிறீர்கள்... நீங்க நாலு வரி எழுதிண்டு போய்ப் பெரியவாகிட்டே காட்டுங்களேன்... அதுக்குமேலே என்ன நடக்கிறது என்று பார்ப்போமே..'' என்று கூறினார் கிருஷ்ணமூர்த்தி.

''ஒரு வரிகூட என்னால் எழுத முடியாது. எதையாவது அபத்தமாக எழுதி விட்டு அவமானப்படச் சொல்றயா?''

''வீணா குழம்பாதீங்கோ... பெரியவாளைத் தியானம் பண்ணிண்டு படுத்துக்குவோம்... நாளைக் கார்த்தாலே எல்லாம் சரியாயிடும்னு எனக்குத் தோண்றது...'' – விவாதத்துக்கு முற்றுப்புள்ளி வைத்தார் கிருஷ்ணமூர்த்தி.

**ம**றுநாள் காலை ஸ்நானத்துக்காகத் திருக்குளத்துக்குச் சென்று கொண்டிருந்த சுவாமிகள் என்னைப் பார்த்துவிட்டு நின்றார்.

''எழுதியாச்சா...?'' என்று கேட்டார்.

கொடுத்த பணியைச் செய்யத் தவறிய ஒரு குற்ற உணர்வு மனதை அழுத்தியது. 'இல்லை' என்று சொல்ல வெட்கம் என்னைத் தடுத்தது. சுவாமிகள் விடாப்பிடியாக என்னைச் சோதனையில் ஆழ்த்தியது வேதனையாகவும் இருந்தது. 'தங்கள் சித்தம்தான் என்ன?' என்று ஆழ்மனக் கேள்விக்குறியுடன் பதில் பேசாமல் நின்றிருந்தேன்.

''நேத்து உனக்கு யார்ரா காபி குடுத்தா?''

பெயரைச் சொன்னேன்.

''பக்கத்து மண்டபத்திலே உக்கிராணம் இருக்கு. அங்கே ஒரு பெரிய பிள்ளையார் இருக்கார். அவருக்குப் பின்னாலே மறைஞ்சுண்டு ஒரு கோஷ்டி காபி போடறா... அது ரொம்ப நன்னா இருக்காம். இன்னிக்கு அங்கே போய்க்

குடிச்சுப் பாரு'' என்று கூறிவிட்டு நகர்ந்தார் சுவாமிகள். கனமாயிருந்த என் நெஞ்சு பஞ்சு போல லேசாகியது.

பிள்ளையார் சிலைக்குப் பின்னால் போய்ப் பார்த்தேன். மாயவரம் விசு (தற்போது ராமேச்வரம் விசு) தலைமையில் ஒரு கோஷ்டி காபி தயாரித்துக் கொண்டிருந்தது.

''இங்கே காபி பிரமாதமா இருக்குமாமே... ஒரு கப் குடுக்கறயா?''

''யார் சொன்னா?'' சிரித்துக்கொண்டே கேட்டான் விசு.

''பெரியவா...''

''ஐயையோ... பெரியவாளுக்கு எப்படித் தெரிஞ்சுது?'' சிரிப்பு மறைந்து, முகம் வெளிறிப் போனது.

''பெரியவாளுக்குத் தெரியாம ஏதாவது நடந்துட முடியும்னு நினைக்கிறயா நீ..?''

**கா**பி அருந்திய பின்னர், என் பழைய கவலை என்னைப் பற்றிக் கொண்டது. குளக்கரையில் நானும் கிருஷ்ணமூர்த்தியும் ஆலோசனைக் கூட்டம் நடத்தி னோம்!

கிருஷ்ணமூர்த்தி சொன்னார்.

''சார், பெரியவா மறுபடியும் மறுபடியும் கேட்டுண்டிருக்கார். அதுலே அர்த்தம் இருக்கும். நீங்க யோசிக்காதீங்கோ.. பேசாம ஒரு பேப்பரை எடுத்து எழுத ஆரம்பியுங்கோ... நீங்க எழுதறதா ஏன் நினைச்சுக்கணும்? பெரியவாளை நினைச்சுண்டு எழுதுங்கோ... தானா வரும்..'' கிருஷ்ணமூர்த்தியை உடன் அழைத்து வந்தது வீண்போகவில்லை. அவருடைய நம்பிக்கை என்னையும் பற்றிக் கொண்டது. இருவரும் மானேஜரிடம் சென்றோம். அவரிடம் வெள்ளை முழுத்தாள்கள் மூன்றோ நான்கோ பெற்றுக் கொண்டு அமைதியான ஓரிடம் தேடிச் சென்றோம்.

அருகிலிருந்த அதிஷ்டான மண்டபத்துக்குள் நுழைந்தோம். நிசப்தமான அந்தச் சூழ்நிலை மனதுக்கு இதமாக இருந்தது. ஸ்ரீகாமகோடி பீடத்தின் 65-வது பீடாதிபதிகளான ஸ்ரீமகாதேவேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அதிஷ்டானத்துக்கு நமஸ்காரம் செய்துவிட்டு, பெரியவாளைத் தியானம் செய்தபடி, மண்டபத்தில் அமர்ந்து, பிள்ளையார் சுழி போட்டுவிட்டு எழுதத் தொடங்கினேன்.

**அ**திஷ்டான மண்டபத்தில் அமர்ந்து எழுதத் தொடங்கியதிலிருந்து அங்கு மிங்கும் பார்க்கவில்லை. அடித்தல், திருத்தல் இல்லை. எதிரில் அமர்ந்திருந்த கிருஷ்ணமூர்த்தியிடம் பேச்சுக் கொடுக்கவில்லை. எண்ணங்கள் ஒன்றன்பின் ஒன் றாக ஓடிவர, ஒரே மூச்சில் எழுதி முடித்துவிட்டேன். கையிலிருந்த தாள்களும் முடிந்திருந்தன.

படித்துப் பார்த்தேன். ஆசிச் செய்தியாகத் தொடங்கியது, கட்டுரையாக

விரிந்திருந்தது.

'சுவாமிகள் படித்துவிட்டு என்ன சொல்லப் போகிறாரோ' என்ற அச்ச உணர்வு என்னைப் பற்றிக்கொண்டது.

ஸ்ரீ மடத்துக்குச் சென்று சுவாமிகளை அருகில் தரிசிக்க முயன்றேன். முடிய வில்லை. பிற்பகலிலும் அதற்கான வாய்ப்புக் கிட்டவில்லை. அன்று மாலையே இளையாத்தங்குடியிலிருந்து புறப்பட்டுவிடலாம் என்று நான் திட்டமிட்டிருந் தது நடைபெறாது என்று உணர்ந்தேன். பொறுமையிழந்து அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்தேன். சுவாமிகள் முக்கிய விஷயமாக உள்ளே சிலருடன் விவாதித்துக் கொண்டிருப்பதாகக் கூறினார்கள்.

மணி ஆறரை, ஏழு இருக்கும். சுவாமிகள் தரிசனம் அளித்துக் கொண்டிருப்ப தாகக் கேள்விப்பட்டுக் குளக்கரையில் அமர்ந்திருந்த இருவரும் விரைந்தோம்.

தென்னங்கீற்றினாலான ஓர் அறை. சிறிய குத்துவிளக்கு சின்னதாக ஒளி பரப்பிக் கொண்டிருந்தது. மிகவும் 'ரிலாக்ஸ்டாக' பெரியவா உட்கார்ந்திருக்க, ஒவ்வொருவராகத் தரிசனம் செய்து கொண்டிருந்தனர். ஒவ்வொருவரிடமும் ஓரிரு பேச்சு, விசாரிப்பு, வினாக்கள்.

கையில் மடித்த காகிதங்களுடன் நின்றிருந்த என்னைப் பார்த்தார் சுவாமி கள்.

''எழுதிண்டு வந்திருக்கியா?''

''ஆமா...''

''படி...''

நின்ற இடத்திலேயே பேப்பரைப் பிரித்தபோது விரல்கள் நடுங்கியதை உணர்ந்தேன். பிரித்துப் படிக்கத் தொடங்கியபோது வெளிச்சம் போதாமல், இப்படியும் அப்படியும் 'அட்ஜஸ்ட்' செய்யத் தொடங்கினேன்.

''அங்கே வெளிச்சம் போறாது... இங்கே விளக்குகிட்டே வந்து படி'' என் றார் சுவாமிகள்.

அருகில் சென்றேன். என் நடுக்கம் அதிகமாயிருந்தது. படபடப்பில் வியர்த் தும் கொட்டியது.

சின்னக் குத்துவிளக்கின் சிக்கனமான ஒளி. அதுவும் சீரில்லாமல் சிதறிச் சிந்தி யது. என் எழுத்துக்களே எனக்கு அரைகுறையாகப் புரிந்தன. முதுகைச் சற்று வளைத்து, தக்கதொரு கோணத்தில் பேப்பரைப் பிடித்து, தடங்கலின்றிப் படித்துவிடலாம் என்ற நம்பிக்கை வருவதற்கு ஒரு நிமிடத்துக்குமேல் ஆகி விட்டது. என் இக்கட்டான நிலைமையைப் புரிந்துகொண்ட சுவாமிகள், பொறுமையுடன் காத்திருந்தார்.

படிக்கத் தொடங்கினேன். உடல் நடுக்கத்துடன் என் குரல் உடைந்து, உரு மாறி, கம்மி, கர்ணகடூரமாக மாறிவிட்டிருந்தது. வேறு யாரோ படிப்பது போன்ற ஒரு பிரமை. என் கவனம் குரலின் மீது செல்ல, படிக்கும்போது இடை யிடையே தொண்டைக் கமறலைச் சரிசெய்து கொண்டதில், வார்த்தைகள் சிதைந்து சின்னாபின்னமானதை உணர்ந்து கவலைப்பட்டேன்.

இவை போதாதென்று, என் கவனம் வேறு திசையிலும் திரும்பியது. அப் போது சுவாமிகள் மிகச் சன்னமான த்வனியில் பாடிக் கொண்டிருந்தார். அது ராக ஆலாபனையா அல்லது கீர்த்தனமா, என்ன ராகம், என்ன கீர்த்தனை என் றெல்லாம் இப்போது என்னால் நிச்சயமாக நினைவுகூர முடியவில்லை.

ஆனால், தேவாமிருத கானமாய் இருந்தது. அந்தச் சங்கீத சாகரத்தில் மூழ்கித் திளைத்துக் கொண்டே கட்டுரையைப் படித்துக் கொண்டிருந்தேன்.

அதே நேரத்தில் என் மனதில் ஒரு சஞ்சலம். 'நான் படிப்பதைப் பெரியவா கேட்கிறாரா, இல்லையா? என் கட்டுரை பைசாவுக்குப் பிரயோஜனம் இல்லை போலிருக்கிறது. அதில் கேட்பதற்கு ஒன்றுமில்லை என்பதனால்தான் பெரியவா அதில் சற்றும் கவனம் செலுத்தாமல் பாடிக்கொண்டிருக்கிறாரோ?' இத்தகைய எண்ணங்களூடே, நான் தொடர்ந்து படித்துக் கொண்டிருந்தேன். நாக்குழற, தட்டுத்தடுமாறி எப்படியோ ஒருவழியாகப் படித்து முடித்துவிட்டேன். கடைசி வரி வரும்போது, தலை மீதிருந்த பெரும் சுமை ஒன்றை இறக்கி வைத்துவிட்ட நிம்மதி ஏற்பட்டது.



ஒரு நொடி அங்கு முழுமையான நிசப்தம் குடிகொண்டது. சுவாமிகள் என்ன சொல்லப் போகிறாரோ என்ற 'சஸ்பென்ஸ்' என்னைப் பற்றிக்கொண்டது. அந்த ஒரு நொடி, ஒரு யுகமாக நீடித்தது.

''இதை எங்கே எழுதினே?''

''அதிஷ்டான மண்டபத்தில்...''

''அந்தப் பெரியவாளே உனக்கு எழுதிக் கொடுத்துட்டாப் போலேருக்கு...'' தேனினும் இனிய சொற்கள் செவியை நிரப்ப, கண்களில் நீர் சுரக்க, சிந்தை பரபரக்க, கால்கள் தரையிலிருந்து எழும்ப, உடல் அந்தரத்தில் நிற்பது போன்ற

## அன்பின் சக்தி

நாட்டில் தற்போது ஒற்றுமையைப் பற்றி அதிகமாகப் பேசப்படுகிறது. ஒற்றுமை என்பது வேற்றுமை பாராட்டாமல் இருப்பது அல்ல. வேற்றுமையே கிடையாது என்று தெளிவதுதான் அது. பரம்பொருள் ஒன்றுதான் உண்டு. அதைத் தவிர, வேறு வஸ்து தனியாகக் கிடையாது. அந்தப் பரம்பொருளைப் பற்றிய நினைவு ஒன்றுதான் எல்லோரையும் சேர்த்து வைக்கக்கூடியது. மதமும் பக்தியும் எல்லோரும் ஒன்றாக வாழ்ந்து சந்தோஷமாக இருக்க ஏற்பட்டவை. ஒருவரையொருவர் அடித்துக் கொண்டு துன்பப்பட அல்ல.

பக்திதான் பாரதநாட்டை இணைத்து வைத்த பெரிய சக்தி. வடக்கில் காசியிலிருந்து தெற்கேயுள்ள இராமேசுவரத்துக்கும், தெற்கேயிருந்து வடக்கேயுள்ள க்ஷேத்திரங்களுக்கும் ஜனங்கள் தரிசனம் செய்யப் போய்க் கொண்டேயிருந்தார்கள். இன்றும், எத்தனை மாறுதல்கள் ஏற்பட்டும் அப்பழக்கம் மாத்திரம் விட்டுப் போகவில்லை. பாஷை, ராஜ்ய எல்லைகள், இதர பழக்க வழக்கங்கள் மாறினாலும், இந்த அடிப்படையில்தான் சகலவித ஜனங்களும் மற்ற எல்லாவற்றையும் மறந்து ஒன்று சேருகிறார்கள். அழிவற்ற, ஒரே வஸ்துவால் ஏற்படும் இந்த உண்மையான ஒற்றுமை அழியவே அழியாது.

பக்திக்கு ஆதாரம் அன்பு. ஆண்டவன் கருணைக்கடல். அந்த அன்புக்குக் கட்டுப்படாத ஜீவராசியே கிடையாது. அதேபோல் பக்தனின் அன்புக்குக் கட்டுப்படாத ஆண்டவன் இல்லை. அன்பின் சக்தி மகத்தானது. அன்பு அன்பையே வளர்க்கும். தேச மக்கள் அனைவருமே அன்பு என்னும் வெள்ளத்தில் மூழ்க வேண்டும். அதற்கு உள்ளங்கள் தூய்மையாக வேண்டும். தர்மம் செழித்தால் உள்ளம் சுத்தி பெற்று விடும். நமது வேதம்தான் தர்மத்தின் இருப்பிடம். அது அநாதியானது. உலகத்துக்கே பொதுவான பொக்கிஷம். அது நாடு பூராவும் முழங்க வேண்டும். தர்மசிந்தையும் தெய்வ வழிபாடும் கருணை உள்ளமும் நம் பாரத நாட்டின் சிறப்பான அம்சங்கள். ஒற்றுமையை வளர்க்க வேண்டுமானால் இவற்றை வளர்க்க வேண்டும்.

இது உலகம் பூராவுக்கும் பொருந்தும். அன்பில் விளைவதுதான் உண்மையான சாந்தி. ஒவ்வொருவருக்கும் மனச்சாந்தி ஏற்பட்டுவிட்டால் உலகில் அமைதி தானாக நிலைத்துவிடும். முதலில், வேற்றுமை உண்டு என்ற அறியாமை விலக வேண்டும். இந்த இருள் நீங்கி ஒளி பிறக்கவேண்டும் என்று பிரார்த்தித்துக்கொண்டு இந்த தீபாவளியன்று மங்கள ஸ்நானம் செய்வோமாக.

**– ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள்**

ஓர் அபூர்வ அனுபவம்.

மீண்டும் அமைதி. நான் காகிதங்களை மடிக்கும் சின்னஞ்சிறு ஒலி மட்டும் கேட்டது. உத்தரவுக்காகக் கைகட்டி நின்றிருந்தேன்.

"அட்சர லட்சம் பெறும். ஒரு வார்த்தைகூட மாத்தாமெ இதை அப்படியே என் பெயர்லே தீபாவளி மலர்லே, போட்டுடு."

என் நெஞ்சம் ஆயிரம் கோடி நன்றிகளைக் கூறியது.

"நாளைக் கார்த்தாலே பிரசாதம் வாங்கிண்டு ஊருக்குப் புறப்படலாம்."

மறுநாள் விபூதி, குங்குமப் பிரசாதம் அளித்துவிட்டு உத்தரவு தந்த சுவாமிகள், "உன்னை ஏன் இங்கே ரெண்டு நாள் தங்க வெச்சேன் தெரியுமா? நீ மடத்துக்கு வந்து ரொம்ப நாள் ஆறது... அதனாலேதான்... சௌக்கியமா போயிட்டு வாங்கோ..."

மலர்ந்த மோகனப் புன்னகை வழியனுப்பி வைக்க, சுவாமிகளின் அன்பு நிழலில் மேலும் ஓரிரு நாட்கள் தங்க விடாமல் கடமையுணர்வு என்னை அழைக்க, கிருஷ்ணமூர்த்தியுடன் அங்கிருந்து புறப்பட்டேன். இளையாத்தங்குடிக்கு வரும்போது மனதை அழுத்திக் கொண்டிருந்த அச்சத்துக்கும் திரும்பிச் செல்லும்போது அதில் குடிகொண்டிருந்த அமைதிக்கும் இடையேதான் எத்தனை பெரிய இடைவெளி?

அந்த ஆண்டு விகடன் தீபாவளி மலரில் 'அன்பின் சக்தி' என்ற தலைப்பில் வெளியான சுவாமிகளின் ஆசிச் செய்தியை எதிரே காணலாம்.

தீபாவளி மலருக்காக 1961-ம் ஆண்டு சுவாமிகளிடமிருந்து பெற்று வந்த ஆசிச் செய்தியைக் கொண்டுவந்து கொடுத்த நான், உதவியாசிரியரிடமோ, அலுவலகத்தில் வேறு யாரிடமோ அதை நான் எழுதியதாகக் கூறவில்லை. அங்கு நடந்ததைக் கூறுவது பெரிய அபசாரமாகி விடலாம் என்று அஞ்சினேன். அதனால், அந்த ஆசிச் செய்தியின் முக்கியத்துவம் குறைந்துவிடலாம் என்றும் கருதினேன். ஆசிரியரிடமிருந்து அதுவரை எதையுமே மறைத்தறியாத நான், அவரிடமும் இதைப் பற்றி வாயைத் திறக்கவே இல்லை. நான் அப்படிச் சொல்லாமல் இருந்தது மன்னிக்க முடியாத குற்றம் என்று மனசாட்சி மட்டும் உறுத்திக் கொண்டே இருந்தது.

ஆனால் வருடங்கள் ஓட ஓட, என் எழுத்து எல்லாமே அந்தப் பேரருட்சக்தியின் சங்கல்பமே என்று உணர உணர, இளையாத்தங்குடி அதிஷ்டானத்தில் அமர்ந்து நான்தான் எழுதினேன் என்று கருதியதும், அதனால் அதைப் பிறரிடமிருந்து மறைத்ததும் எத்தகைய அஞ்ஞானம் என்று புரியத் தொடங்கியது.

இப்போது நினைத்துப் பார்க்கும்போது, 'நான் அதை மறைக்கவில்லை... அதுவும் பெரியவா அருளாசிதான்' என்று உணருகிறேன். 'நான்' எழுதாததை, நான் எழுதியதாக அப்போது கூறியிருந்தால், அது எவ்வளவு பெரிய 'பொய்'யாக இருந்திருக்கும்? அதிலிருந்தும் என்னை அப்போது காத்ததும், சுவாமிகளின் சங்கல்பம்தான் என்பதில் என்ன சந்தேகம்?

இளையாத்தங்குடியில் 1962-ம் ஆண்டு ஆகம, சில்ப சாஸ்திரங்கள் மற்றும் புராதனக் கலைகளின் முதல் மாநாடு நடைபெற்றது. ஸ்ரீகாஞ்சிப் பெரியவரின் சிந்தனையில் உதித்து, அவரது முன்னிலையில் அவரது அருளாசியால் மிக வெற்றிகரமாக நடைபெற்றது அது. இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் பல்வேறு துறைகளைச் சார்ந்த கலைஞர்களும் பண்டிதர்களும் விற்பன்னர்களும் ஆன்மீகப் பெரியவர்களும் அதில் பங்கு கொண்டு சிறப்பித்தார்கள். சுவாமிகளின் பல புரட்சிகரமான திட்டங்களில் இது அபூர்வமானதாகவும் முக்கியமானதாகவும் விளங்கியது. அந்தப் பிரமாண்ட சதஸுக்குச் செல்ல முடியாமல் போனது எனக்குப் பெரும் குறை.

அடுத்த ஆண்டு மதுரையையடுத்த நாராயணபுரத்தில் நடைபெற்ற இரண்டாவது சதஸுக்குப் போன நான் அங்கு ஓரிரு நாட்கள்தான் தங்க முடிந்தது. எனவே அதற்கு அடுத்த ஆண்டு – 1964-ல் காஞ்சியில் நடைபெற்ற சதஸுக்குச் சென்று தொடக்கம் முதல் இறுதி வரை எல்லா விவாதங்களிலும் கலை நிகழ்ச்சிகளிலும் கலந்துகொண்டு பயன்பெற வேண்டுமென்பதில் நான் மிகத் தீவிரமாக இருந்தேன். ஒரு வாரத்துக்கான பணிகளை முன்னதாகவே முடித்துவிட்டு ஆசிரியரிடம் தெரிவித்துவிட்டுக் காஞ்சீபுரத்துக்குச் சென்றேன்.

ஆனால், நான் நினைத்தது ஒன்று. நடந்தது வேறொன்று.

தொடக்க நாள் விழா மிகக் கோலாகலமாக நடந்தேறியது. மாநாட்டைத் திறந்து வைத்து, மைசூர் மகாராஜா ஜெயசாமராஜ உடையார் அருமையானதோர் உரையாற்றினார். சுவாமிகள், சதஸின் நோக்கங்களையும் நம் புராதனக் கலைச்செல்வங்களின் மேன்மைகளையும் நடைபெறவிருக்கும் கலை நிகழ்ச்சிகளின் தன்மைகளையும் பற்றி விரிவான சொற்பொழிவாற்றினார்.

மறுநாள் நான் வந்தனம் செய்யச் சென்றபோது சுவாமிகள், "நேத்து மகாராஜா ஸ்பீச்சைக் கேட்டியா?" என்று கேட்டார்.

"கேட்டேன்..."

"அதுலே Prepared Text-லே இல்லாம புதுசா நாலு வரி சேர்த்துப் பேசினாரே அதைக் கேட்டியோ?"

"கவனிக்கலே..."

"ரெண்டு மூணு பேரைக் கேட்டுப் பார்த்துட்டேன். ஒருத்தருமே கவனிக்கலேன்னுட்டா... ஒண்ணு பண்ணு, கையிலே பிரிண்டட் ஸ்பீச்சை வெச்சுண்டு டேப் ரிக்கார்டைப் போட்டுக் கேளு. இரண்டையும் கம்ப்பேர் பண்ணி, அந்த நாலு வரி என்னன்னு கண்டுபிடி. இப்பவே போய்க் கேட்டுட்டு வந்து எனக்குச் சொல்லு" என்று கூறி எனக்கொரு அவசரப் பணி கொடுத்து அனுப்பிவிட்டார்.

நான் அப்பணியைச் செய்து முடித்தபோது, மணி பன்னிரண்டு ஆகிவிட்டது. மாநாட்டின் முற்பகல் நிகழ்ச்சிகள் முடிந்துவிட்டிருந்தன. எல்லா சொற்பொழிவுகளையும் எல்லா விவாதங்களையும் ஒரு வரிகூட விடாமல் கேட்க வேண்டும் என்ற உறுதியோடு வந்திருந்த எனக்குப் பெரும் ஏமாற்றம். இருப்பினும் பெரியவா கொடுத்த பணியைச் செய்ய முடிந்ததே என்ற திருப்தி.

பூஜை முடிந்து, சுவாமிகளின் பிட்சை ஆன பின்னர், மைசூர் மகாராஜா பேசிய அந்த நான்கைந்து 'எக்ஸ்டெம்ப்போர்' வரிகளைப் படித்துக் காட்டினேன். இரண்டு, மூன்று முக்கியமான நபர்களை அழைத்துவரச் சொல்லி, மீண்டும் படித்துக்காட்டச் சொன்னார்.

பின்னர், வந்தனம் செய்துவிட்டுப் புறப்பட்டேன்.

"இங்கே வா..."

நின்றேன்.

"நீ எனக்கு இன்னொண்ணு பண்ணணுமே..."

உத்தரவுக்காகக் காத்து நின்றேன்.

"நேத்து நான் வளவளன்னு ரொம்ப நாழி பேசிட்டேன்... நீ முழுக்கக் கேட்டியோ...?"

"கேட்டேன்..."

"அதை பிரிண்ட் பண்ணிக் கடைசி நாள் விநியோகிக்கணுமாம்... அப்படியே போட்டா ரொம்ப பெரிசா இருக்கும்... சொன்னதையே சொல்லியிருப்பேன்... சொல்ல வேண்டியதுக்கு மேலே கொஞ்சம் அதிகப்படியாவே சொல்லியிருப்பேன். நீ அதை 'எடிட்' பண்ணிக் குடு... பிரிண்ட் பண்ண சௌகரியமாயிருக்கும்."

பெரிய கேள்விக்குறியுடன் பேசாமல் நின்றிருந்தேன்.

"அதை எப்படிப் பண்றதுன்னு பிரமிப்பா இருக்கா... டேப் ரிக்கார்டுலே போட்டுக் கேளு... உனக்கு முக்கியமாப் படறதையெல்லாம் எழுதிண்டே வா... ரிப்பெட்டிஷன் வந்தா விட்டுடு... மொத்த ஸ்பீச்சையும் மூணுலே ஒரு பங்கா குறைச்சுடு... போ, பண்ணிண்டு வா" என்று கூறிவிட்டு, கண்ணனை அழைத்து, யார் தொந்தரவுமில்லாத ஒரு தனி இடமா பார்த்து, இந்தப் பணியைச் செய்ய எனக்கு எல்லாச் சௌகரியங்களும் செய்து தரும்படி உத்தரவிட்டார்.

சுவாமிகள் மிக எளிதாகக் கூறிவிட்டார். அவர் சொற்பொழிவை நான் 'எடிட்' செய்வதா? மூன்றில் ஒரு பங்காகக் குறைப்பதா? என்னால் ஆகக்கூடிய காரியமா இது? கல்லூரியில் 'ப்ரஸி ரைட்டிங்' பயிற்சி பெற்றது உண்மைதான். அதைப் போன்ற பணியா இது?! முதலாவது, சப்ஜெக்ட் புரிய வேண்டும். பெரியவா கருத்துக்களின் ஆழத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். அவற்றில் எதை வைத்துக் கொள்வது, எதை விடுவது என்று தீர்மானிக்கும் யோக்கியதை எனக்கு இருக்கிறதா? எடிட்டிங்கில் எத்தனை தவறுகள் இருக்குமோ.. அர்த்தமே மாறிப் போனாலும் போகும்... அது அபசாரமாக ஆகிவிடாதா?

மலை போன்ற பணியை நினைத்து நினைத்து மலைத்துப் போனேன்.

காஞ்சிபுரம் வந்ததும், ஏழெட்டு நாள் தங்குவதற்காக நான் இடம் கேட்ட போது, "எல்லாம் 'புக்' ஆகிவிட்டது, ஜாண் இடம்கூட இல்லை" என்று நிர்த்தாட்சண்யமாக மறுத்துவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டு போன மாயவரம் ராமமூர்த்தி, 'பெரியவா உத்தரவு' என்றதும் ஒரு வீட்டு மாடியில் தனியறையொன்றை எனக்கு ஒழித்துக்கொடுத்துவிட்டு, "இங்கே யாரும் வந்து தொந்தரவு பண்ணமாட்டா... பெரியவா ஓர்க் முடிஞ்சப்புறம்கூட நீங்க இங்கேயே தங்கிக்கலாம்" என்று மிகப் பரிவுடனும் பண்புடனும் கூறிவிட்டுப் போனார்.

அன்று மாலையே அந்த அறையில் குடியேறினேன். ஜே.எஸ். என்ற ஜே.சடகோபன் டேப் ரிக்கார்டருடன் வந்தார். கூப்பிட்ட குரலுக்குக் கண்ணன் வந்து போனார். அவ்வப்போது டன்லப் கிருஷ்ணனும் உதவி புரிந்தார். நான் எழுதிக் கொண்டிருந்தேன்.

இரண்டு நாட்கள் உண்மையாகவே 'இரவும் பகலும்' அந்தப் பணியில் ஈடு

பட்டிருந்தேன். முதலில் கற்பனை செய்ததைவிடக் கடினமாக இருந்தது. Rewind செய்து செய்து கேட்டேன். சரியாகப் பதிவு ஆகாத இடங்களில் 'என்ன வார்த்தை' என்று கண்டுபிடிக்க முடியாமல் மூன்று பேரும் குழம்பிப் போவோம். எனக்குத் தலையை வலிக்கும். முதுகு வலிக்கும். சற்றுப் படுத்துக் கொள்வேன்.

முதல் நாள் ஒருவர் வந்து எட்டிப் பார்த்தார். ''யாரது?'' என்று கேட்ட போது, ''நீங்க எழுதிண்டிருக்கேளான்னு பெரியவா பார்த்துட்டு வரச் சொன்னா'' என்றார். உடனே எழுந்து உட்கார்ந்து கொண்டேன். அன்று இரவு இரண்டு மணிக்கோ, மூன்று மணிக்கோதான் படுத்துக் கொண்டேன்.

மறுநாள் முழுவதும் கேட்டுக் கேட்டு எழுதிக்கொண்டிருந்தேன். காபி, டிபன், சாப்பாட்டுக்குக்கூட எழுந்து வெளியே செல்லவில்லை. சதஸ் பந்தல் பக்கமே போகவில்லை. யார் என்ன பேசினார்கள் என்பதை அறிவதற்கு வாய்ப்பில்லை. வருத்தமாக இருக்கும். பின்னர் 'பெரியவா சொன்னதைத்தானே செய்து கொண் டிருக்கிறேன்' என்று எண்ணிச் சமாதானம் அடைவேன்.

அதுமட்டுமல்ல... பெரியவாளுடைய பேச்சைத் திருப்பித் திருப்பிக் கேட்டுக் கொண்டிருந்ததன் பலனாக, சதஸின் பல்வேறு நோக்கங்களும் பயன்களும் ஆலய, ஆன்மீக, சமுதாய லட்சியங்களும் என் மனதில் ஆழப்பதிந்தன.

இரண்டு இரவுகள் கண்விழித்துக் கிட்டத்தட்ட முக்கால் சொற்பொழிவைக் கேட்டு, பத்து முழுப் பக்கங்களுக்குள் சுருக்கி எழுதிவிட்டிருந்தேன். இருப்பினும் முழுத்திருப்தி ஏற்படவில்லை. எழுதியதை ஒரு முறை படித்துப் பார்த்து Cogency இருக்கிறதா எனப் பார்த்துவிட வேண்டும் என்று முடிவு செய்திருந் தேன்.

இந்த நிலையில் மூன்றாவது நாள் காலையிலிருந்தே அவ்வப்போது யாரா வது வந்து 'எந்த அளவு முடிந்திருக்கிறது?' என்று விசாரித்துக்கொண்டு போய்க் கொண்டிருந்தார்கள். சுவாமிகள் அனுப்பித்தான் அவர்கள் வந்து போனார்கள். ''இன்னும் ஓரிரு மணி நேரத்தில் முடிந்துவிடும்'' என்று பதில் கூறி, அவர்களை அனுப்பிக் கொண்டிருந்தேன் நான்.

பெரியவா இப்படி அவசரப்படுத்தியதைக் கண்டு நான் நெர்வஸாகிவிட் டேன். இந்தப் பணியைச் செய்வதற்குத் தேவைக்குமேல் நேரம் எடுத்துக் கொண்டுவிட்டேனோ என்ற குற்றவுணர்வும் சேர்ந்துகொள்ள, என் வேகம் குறைந்தது.

அரை மணிக்கெல்லாம் சுவாமிகளிடமிருந்து வேறு ஒருவர் வந்தார்.

''எழுதினதை எடுத்துண்டு பெரியவா உங்களை உடனே மடத்துக்கு வரச் சொன்னா...''

''இன்னும் முடியலே... பத்து நிமிஷத்துலே ஆயிடும்... நீங்க போங்கோ... நான் கொண்டு வந்துடறேன்...''

''அதெல்லாம் முடியாது... பிரிண்ட் பண்ணப் போறவா ரொம்ப நேரமா காத்துண்டிருக்காளாம். எழுதினவரைக்கும் போறும்னு சொல்லி, கையோட உங்களை அழைச்சுண்டு வரச்சொல்லி உத்தரவு... புறப்படுங்கோ...''

அதற்குமேல் நான் என்ன செய்ய முடியும்...? மளமளவென்று கடைசி வாக்கி யத்தை எழுதிக் கட்டுரையை முடித்துவிட்டு, வந்தவருடன் புறப்பட்டுச் சென் றேன்.

ஸ்ரீ மடத்தில் பெரியவா எதிரில் நின்றிருந்த இருவருடன் பேசிக்கொண்டிருந்தார். என்னைப் பார்த்துவிட்டு ''ஒருவழியா முடிச்சுட்டியா... அதை இவா கையிலே குடுத்துடு... நீ வரத்துக்காகத்தான் இவா காத்திண்டிருக்கா...''

நான் தயங்கினேன்.

''என்ன?'' என்று கேட்டார் சுவாமிகள்.

''பெரியவாகிட்டே ஒரு தரம் படிச்சுக் காட்டிடறேனே...''

''வேண்டாம் வேண்டாம்... நாழியாறது... அவாகிட்டே அதைக் குடுத்துடு...''

''சரியா வந்திருக்கான்னு தெரியலே... நான் ஒரு தரம்கூடப் படிச்சுப் பார்க்கலே... இப்படியே பிரிண்ட் பண்ணிட்டு அப்புறம் தப்பு இருந்துன்னா...''

''எல்லாம் சரியாயிருக்கும்... குடுத்துடு...''

''வேகமா படிச்சுடறேன்...''

''முழுக்கப் படிக்க வேண்டாம்.. உன் ஆசைக்கு ஏதாவது ஒரு பக்கத்தைப் புரட்டிப் படி...''

புரட்டினேன்... ஏதோ ஒரு பக்கத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கினேன்.

ஒரு தவற்றைக் குறிப்பிட்டுப் பெரியவா கரெக்ட் பண்ணச் சொன்னார். திருத்திக் கொண்டேன்.

''இன்னொரு பேஜை எடுத்துப் படி...''

மீண்டும் புரட்டினேன்... கடைசியில் ஒரு பக்கத்தைப் படித்துக் காட்டினேன். ஒரிஸ்ஸா கிராமியக் கலையொன்றின் பெயர் மாறுபட்டிருந்தது. அதைச் சரியாக உச்சரித்து மாற்றச் சொன்னார். மாற்றினேன் ('பாலாகதா' என்பதை 'பாலகதா' என்று எழுதிவிட்டிருந்தேன்).

''இந்த ரெண்டு சின்னத் தப்புதான். மத்ததெல்லாம் சரியாயிருக்கும்... அப்படியே குடுத்துடு... இவாளுக்குப் போகணும்... நாழியாறது.''

கட்டுரையை ஒருவரிடம் கொடுத்தேன். பெற்றுக் கொண்டார். பிரபலமான அந்த இருவரும் யார் என்று எனக்குத் தெரியவில்லை என்பதைத் தெரிந்து கொண்ட சுவாமிகள் கேட்டார்:

''இவா யார் தெரியுமோ?''

''தெரியலே...''

''இவர் இந்தியன் எக்ஸ்பிரஸ் ராம்நாத் கோயங்கா... இவர் 'கலைமகள்' ராமரத்தினம்.. என் ஸ்பீச் சுருக்கத்தை நாளன்னிக்கு சதஸ்லே டிஸ்ட்ரிப்யூட் பண்றதுக்காக, இவாதான் பிரிண்ட் பண்ணிக் குடுக்கப்போறா...''

அவ்விருவருக்கும் வணக்கம் செலுத்தினேன்.

சென்னையிலிருந்து தினமணியின் சிறப்பு நிருபராக கே.எம். ரங்கசாமி காஞ்சிபுரம் சதஸுக்கு வந்தது எனக்கு மிகவும் சௌகரியமாக இருந்தது. திட்ட மிட்டிருந்தபடி எல்லா நாட்களும் நான் மாநாட்டுக்குப் போக முடியாவிட்டா லும், சதஸ் நடவடிக்கைகளைப் பற்றிய விவரங்களையெல்லாம் அவரிடமிருந்து கேட்டறிந்து மகிழ்ந்தேன். பெரும் பயனும் அடைந்தேன்.

மாநாடு முடிவடைய ஓரிரு நாட்களே இருந்தன. பந்தலுக்குச் செல்லும் முன்பு சுவாமிகளைத் தரிசிக்கச் சென்றேன். அதிகக் கூட்டமின்றி சாவகாசமாக அமர்ந்திருந்தார்.

''பெரியவாகிட்டே ஒரு விஷயம் சொல்லணும்னு தோண்றது...''

''சொல்லு...''

''ஏகாம்பரேச்வரர் கோயிலுக்குப் போயிருந்தேன். அங்கே ஒரு போர்டில் 'உள்ளே சென்று சுவாமியைத் தரிசிப்பதற்குப் பத்துக் காசு கட்டணம் செலுத்த வேண்டும்' என்று போட்டிருந்தது. அதைப் படிச்சப்ப மனசுக்கு ரொம்பக் கஷ்டமாயிருந்தது. அபிஷேகம் பண்ண பணம், அர்ச்சனை பண்ண டிக்கெட் டுன்னு இருக்கிறது போறாதா..? சுவாமியைத் தரிசனம் பண்ணக்கூட இந்து சமய அறநிலையத்தார் பணம் வசூலிக்கிறது ரொம்பத் தப்புன்னு எனக்குத் தோண்றது..''

''அப்படியா போர்டு போட்டிருக்கா?''

''ஆமா, அதைவிட அக்கிரமம் இன்னொண்ணு... துவஜஸ்தம்பத்துக்கிட்டே ஒரு ஸ்கிரீன் வெச்சு மறைச்சிருந்தது. இது எதுக்குன்னு விசாரிச்சேன். பத்துக் காசு கொடுக்காமலே சில பேர் வெளியிலே நின்னபடியே உள்ளே தரிசனம் பண்ணிடறாளாம். அதைத் தடுக்கத்தானாம் இந்த ஏற்பாடு! ஜனங்ககிட்டே பக்தி வளரணும்... ஆலய வழிபாடு சிறக்கணும்னு சொல்லிண்டே இப்படியெல் லாம் பண்றது...''

''ரொம்ப ரொம்பத் தப்புதான்...''

மறுநாள் சதஸில் இந்துசமய அறநிலைய இலாகாவைச் சேர்ந்த நிர்வாக அதிகாரிகளின் கூட்டம் நடந்தது. தமிழகத்தின் பல்வேறு கோயில்களிலிருந்து அவர்கள் வந்திருந்தார்கள். அவர்களுக்கு ஆசி கூறி, சில அறிவுரைகளும் வழங்கி, சுவாமிகள் பேசினார். தமது உரையின் முடிவில், ''முக்கியமா ஒரு விஷ யத்தைப் பத்தி நான் இப்பப் பேசியாகணும். ஏகாம்பரேச்வரர் கோயில்லே பத்துக் காசு குடுத்துட்டுத்தான் சுவாமியைத் தரிசனம் பண்ணலாம்னு ஒரு போர்டு இருக்கிறதைப் பார்த்துட்டு ஒரு பையன் பதைபதைச்சுப் போய் நேத்து என்கிட்டே வந்து ரொம்பத் துயரத்தோடு குறைப்பட்டுண்டான். காசு குடுக்காம உள்ளே பார்க்கக் கூடாதுன்னு துவஜஸ்தம்பத்துக்கிட்டே ஒரு ஸ்க்ரீன் வேறே போட்டு மறைச்சு வெச்சிருக்காம்... இது யார் போட்ட உத்தரவோ எனக்குத் தெரியாது. இதை உடனே ரத்து பண்ணியாகணும். இந்தக்

கோயில்லே மட்டும் இல்லே, எங்கெல்லாம் இப்படியொரு போர்டு போட்டிருக்காளோ அது எல்லாத்தையும் இன்னிக்கே எடுத்துடணும்... காசு குடுக்கிறவா தான் சுவாமி தரிசனம் பண்ணலாம்னு சொல்றது மகாபாவம்...''

அன்று மாலையே ஏகாம்பரேச்வரர் கோயிலிலிருந்து அந்த போர்டும் ஸ்கிரீனும் அகற்றப்பட்டு விட்டன.

சதஸ் முடிந்து, சென்னைக்குப் புறப்படும் முன் விபூதி குங்குமப் பிரசாதம்



பெறுவதற்குச் சென்றபோது, அதிகப்பிரசங்கித்தனமாகப் பெரியவாளிடம் ஒரு வேண்டுகோள் விடுத்தேன்.

''அடுத்த வருஷம் சதஸைப் பெரியவா மெட்ராஸ்லே நடத்தணும்.''

சுவாமிகள் பதில் கூறவில்லை. புன்னகை புரிந்தார்.

1957-ம் ஆண்டு இறுதியில் சென்னைக்கு வருகை தந்து, 1959-ம் ஆண்டு தொடக்கத்தில் நகரைவிட்டுப் புறப்பட்டுச் சென்ற சுவாமிகள், மீண்டும் 1965-ல் சென்னைக்கு விஜயம் செய்தார். அப்போது முக்கியமானவர்களையெல்லாம் அழைத்து சென்னையில் ஆகம, சில்பசதஸ் நடத்துவது குறித்து சுவாமிகள் ஆலோசனை நடத்தினார். அதில் சதஸ் கமிட்டியொன்று அமைக்கப்பட்டு, காரியதரிசிகளின் பெயர்களும் முடிவு செய்யப்படப் போவதாகக் கூறப் பட்டது.

கூட்டம் முடிந்ததும், வெளியே நின்றிருந்த எனக்கு உத்தரவு ஆவதாக அறிவிக்கப்பட்டது. சென்று சுவாமிகளுக்கு வந்தனம் செய்துவிட்டு உள்ளே நின்றேன்.

சதஸ் கமிட்டியினரைப் பார்த்து சுவாமிகள், ''இப்ப நாம போட்டிருக்கிற காரியதரிசிகளோட இவனையும் சேர்த்துக்கோங்கோ... போன வருஷம் காஞ்சீபுரத்துலே சதஸ் முடிந்த கையோட எங்கிட்டே வந்து 'அடுத்த சதஸை மெட்ராஸ்லே வெச்சுக்கணும்'னு இவன் கேட்டுண்டான். உங்க எல்லாருக்கும் முன்னால இவன்தான் என்னை அழைச்சான்... அதனாலே இவனுக்கும் கொஞ்சம் பொறுப்புக் குடுக்கலாம்னு நினைக்கிறேன்'' என்றார்.

கண்ணீரை என்னால் அடக்க முடியவில்லை. இது நான் கனவிலும் எதிர்பாராத பாக்கியம். ஓராண்டுக்கு முன்னால் நான் அழைத்ததை நினைவில் வைத்துக்கொண்டு, முக்கியஸ்தர்கள் முன்னிலையில் அதை நினைவுகூர்ந்து, பிரபலமானவர்களோடு சேர்ந்து பணியாற்றும் அரும்பெரும் வாய்ப்பை எனக்கு நல்கிய நிகழ்ச்சி சாதாரணமானதா?

மயிலாப்பூர் ஸ்ரீகற்பகாம்பாள் கல்யாண மண்டபத்தில் சதஸை நடத்துவது என்று முடிவாயிற்று. அதற்குச் சௌகரியமாக ஸ்ரீமடம், மயிலை சம்ஸ்கிருதக் கல்லூரியில் முகாமிட்டிருந்தது.

சதஸ் தொடங்க இரண்டு நாட்கள் இருந்தன. பெரியவா என்னை அழைத் தார்.

''சதஸ்லே உனக்கு ரெண்டு வேலை குடுக்கப் போறேன்... தினம் ரெண்டு வேளையும் புதுப் பெரியவாளை இங்கேருந்து சதஸ் மண்டபத்துக்கு அழைச்சுண்டு போய் மறுபடியும் கொண்டு விடறது உன் முக்கியப் பொறுப்பு. அப்புறம், சாயந்தரம் யார் யார் எதைப் பத்திப் பேசப்போறான்னு கேட்டுத் தெரிஞ்சுண்டு, அவா அவாளுக்கு நேரம் ஒதுக்கி, மீட்டிங்கை ஒழுங்கா நடத்தி முடிக்கணும். ஒருத்தரே ரொம்ப நாழி பேசிண்டு போனா மத்தவாளுக்கு டயம் இருக்காது. அரைமணியோ முக்காமணியோ, குடுத்திருக்கிற நேரத்தை அவா ளுக்கு நாசூக்கா ஞாபகப்படுத்தி, ரொம்பச் சாமர்த்தியமா நடந்துக்கணும்... கஷ்டமான வேலைதான்... எப்படிப் பண்றேன்னு பார்க்கப் போறேன்...'' என்று கூறிவிட்டுச் சிரித்தார்.

அந்தச் சிரிப்பு, 'அடுத்த சதஸை மெட்ராஸ்லே நடத்தணும்னு சுலபமா சொல்லிட்டியே... அதுலே நீயும் கொஞ்சம் பொறுப்பு எடுத்துண்டு உன்னா லான ஒத்தாசையைப் பண்ணு' என்று சுவாமிகள் கட்டளையிட்டதாகவே எனக்

குத் தோன்றியது.

ஒரு நாள் புதுப்பெரியவா முன்னிலையில சதஸில் பஞ்சாங்கம் கணிப்புப் பற்றி விவாதம் நடைபெற்றது. அதில் வானசாஸ்திரமும் கணிதசாஸ்திரமும் நுண்ணிய கணக்குவழக்கங்களும் பிரமாதமாக அலசப்பட்டன. வெளிமாநிலங் களிலிருந்து வந்திருந்த பஞ்சாங்க வல்லுநர்களும் ஆராய்ச்சியாளர்களும் தங்கள் மொழியிலேயே பேசி, விளக்கங்கள் அளித்துக்கொண்டும் ஆட்சேபங்கள் எழுப்பிக் கொண்டுமிருந்தனர். வங்காளத்திலிருந்து வந்திருந்த மேதை ஸ்ரீலஹரி என்பவர் அவ்வப்போது குறுக்கிட்டுத் தமது கருத்துகளை ஆணித்தரமாக எடுத் துரைத்து வாதாடிக் கொண்டிருந்தார். விவாதம் சூடுபிடித்து, முடிவில்லாமல் நடைபெற்றுக் கொண்டிருந்தது. கருத்தொற்றுமை கண்ணுக்கே தெரியவில்லை.

புதுப்பெரியவா என்னை அழைத்தார். ''நீ உடனே போய்ப் பெரியவாளை இங்கு அழைச்சுண்டு வா. அவா வந்துதான் இந்த விவாதத்துக்கு ஒரு தீர்வு காண முடியும். சீக்கிரம் போ'' என்று அவசரப்படுத்தினார்.

ஏதோ ஒரு காரை எடுத்துக்கொண்டு சம்ஸ்கிருதக் கல்லூரிக்குச் சென்று பெரியவாளிடம் புதுப்பெரியவா சொல்லியனுப்பிய செய்தியைக் கூறினேன்.

''நீ போய் நான் வரேன்னு புதுப்பெரியவாகிட்டே சொல்லு'' என்று பெரியவா கூறவே, அதே காரில் வேகமாகத் திரும்பி வந்து செய்தியைக் கூறி னேன். புதுப்பெரியவரின் முகம் மலர்ந்தது.

பத்து நிமிடங்களுக்கெல்லாம் பெரியவர் மேனாவில் எழுந்தருளியதும் பந்த லில் ஒரு நம்பிக்கையும் விவரிக்க முடியாத மகிழ்ச்சியும் பளிச்சிட்டதைக் காண முடிந்தது.

சுவாமிகள் பண்டிதர்களிடம் இரண்டு மூன்று கேள்விகள் கேட்டார். அவரவர் தங்கள் கையிலிருந்த புத்தகங்களைப் புரட்டத் தொடங்கினார்கள். ஆனால், ஒருவராலும் கேள்விகளுக்குத் தக்க பதில் கூற முடியவில்லை.

பின்னர் சுவாமிகள் தமது கேள்விகளுக்குத் தாமே பதிலையும் கூறி, அங்கு எழுப்பப்பட்ட பிரச்னைகளுக்கு விளக்கங்கள் அளித்து, நீண்ட நேர சர்ச்சையை முடித்து வைத்தார். அறிஞர்கள் அத்தனை பேரும் சமாதானம் அடைந்தார்கள்.

என்னைப் பொறுத்தவரையில் சென்னை சதஸின்போது நடைபெற்ற மற் றொரு நிகழ்ச்சி மறக்க முடியாததாகும்.

ஒரு நாள், திருப்பதிக்குச் செல்லும் வழியில் உள்ள நாகலாபுரம் சென்று அங்குள்ள வேதநாராயணப் பெருமாள் ஆலயத்தைத் தரிசித்து வரும்படி சுவாமிகள் எனக்கு அன்புக்கட்டளையிட்டுவிட்டு, கருவறை விமானத்தில் தெற்குக் கோஷ்டத்திலுள்ள வீணா தட்சிணாமூர்த்தியை மறக்காமல் பார்க்கும் படி கூறினார். சதஸுக்கு வந்திருந்த அல்லூர் விசுவநாத குருக்கள், திருவாடானை ஐயாமணி சிவாசாரியார், ஸ்ரீவில்லிபுத்தூர் அலங்காரப்பட்டாச் சாரியார், கணபதி ஸ்தபதியார் ஆகிய நால்வருடன் புகைப்படக்காரர் ஜே.சடகோபனும் கண்ணனும் என்னுடன் சென்று வரும்படி உத்தரவாயிற்று.

சுவாமிகள் உத்தரவுப்படி, இத்தனை பேரும் சௌகரியமாகச் சென்று வர கலைமகள் ராமரத்தினம் படகு போன்ற ஒரு காரை ஏற்பாடு செய்து தந்தார்.

1958-ல் சுவாமிகள் என்னை ஓவியர் 'சில்பி'யுடன் ஸ்ரீ மாங்காடு காமாட்சி யைத் தரிசித்துவிட்டு வரும்படி அனுப்பி வைத்தார். ஆனால் இம்முறை, ஒரு கோயிலை எவ்வாறு முறையாகத் தரிசனம் செய்து பயன்பெற வேண்டும் என்று பயிற்சி அளிப்பதற்காகத்தான், ஆகம, சில்ப வல்லுநர்களையும் என்னுடன்

அனுப்பி வைத்தார் என்று சில வருட அனுபவங்களுக்குப் பின்னர் புரிந்தது.

சென்னைக்குத் திரும்பியதும், நாகலாபுரம் ஆலயத்தை மிக நுணுக்கமாக ஆராய்ந்து, அதன் வரலாற்றுச் சிறப்புக்களையும் தலபுராணச் செய்திகளையும் அறிந்து கொண்ட விவரங்களைச் சுவாமிகளிடம் தெரிவித்துவிட்டு, ''நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டேன். சுவாமிகள் ஒன்றும் கூறவில்லை. இரண்டு மூன்று நாட்கள் கடந்த பிறகு மீண்டும் ஒரு முறை நினைவுபடுத்தி னேன். மௌனம்தான் பதிலாய் அமைந்தது.

பின்னர், அடுத்த ஆண்டு தொடக்கத்தில் ''தீபாவளி மலரில் ஸ்ரீ வேத நாராயணப் பெருமாள் கோயிலைப் பற்றி எழுதட்டுமா?'' என்று கேட்டேன். 'சரி' என்று மௌனமாகவே தலையசைத்து, திருக்கரம் உயர்த்தி ஆசி வழங்கி னார்.

இந்தத் தொடக்கம்தான் பின்னர், பல ஆண்டுகள் பல புண்ணியத் தலங்க ளுக்கு யாத்திரை செல்லவும் பல்வேறு புனித ஆலயங்களைப் பற்றி விகடனில் தொடர்ந்து எழுதுவதற்கும் எனக்கு அருளாசியாகத் துணை நின்றது!

ஆர்.கே. நாராயணனின் 'The Guide' நாவலைத் தமிழாக்கம் செய்து தந்த தற்கு அன்பளிப்பாக சாகித்ய அகாடமியிடமிருந்து நான் பெற்ற ஆயிரம் ரூபாய், எனக்குப் புதியதோர் அனுபவம் பெறுவதற்குக் காரணமாக அமைந்தது.

அப்போது சுவாமிகள் சென்னையில் எழுந்தருளியிருந்தார். என் எழுத்துப் பணியில் முதன்முறையாக நான் ஈட்டிய இந்தப் 'பெரும்' பணத்தில் ஒரு சிறு பகுதியைச் சுவாமிகளுக்குச் சமர்ப்பிக்க வேண்டும் என்று விரும்பினேன். சுவாமி களின் அனுஷ ஜன்ம நட்சத்திர தரிசனத்தன்று அவருக்கு மலர் மாலை ஒன்று அளித்து நூற்றியோரு ரூபாய் காணிக்கையாகச் செலுத்துவது என முடிவு செய் தேன். அதுவரை மலர்மாலையுடனோ, பூ பழங்களோடோ, காணிக்கை யோடோ நான் தரிசனத்துக்குச் சென்றதில்லை.

நூற்றியோரு ரூபாய்க்கு நாணயங்களாக மாற்றிக்கொண்டேன். அந்தக் கால பத்து ரூபாய் மதிப்புக்கு, நெருக்கமாகத் தொடுத்த பெரிய மல்லிகைப்பூ மாலை யொன்றை வாங்கிக் கொண்டேன். இவற்றுடன் ஓர் இரவு ஸ்ரீமடம் சென்றேன்.

மறுநாள் பெரியவாளின் ஜன்ம நட்சத்திரம். விடியற்காலை விச்வரூப தரிச னத்தின்போது மலர்மாலையுடன் காணிக்கையைச் சமர்ப்பிக்க வேண்டும் என்பது என் திட்டம்.

இரவு பூஜை முடிந்து, பக்தர்களுக்குத் தரிசனம் அளித்துவிட்டு சுவாமிகள் ஓய்வுபெறும் அறைக்குள் சென்றுவிட்டார். கதவுகளும் சாத்தப்பட்டுவிட்டன. இரவு மணி பத்து இருக்கும்.

அந்த அறைக்கு எதிரே, இருபது அடி தொலைவில் ஒரு பவழமல்லி மரம். அதனடியில் அமர்ந்து கொண்டேன். என் எதிரில் ஒரு மூங்கில் தட்டில் நூற்றி யோரு வெள்ளி நாணயங்கள். அவற்றின் மீது நறுமணம் வீசிய மல்லிகைப்பூ

மாலை. உள்ளத்தில், இரவு முழுவதும் தூங்காமல் உட்கார்ந்திருப்பது என்ற திடவைராக்கிய முடிவு.

அப்போது, 'பெரியவா எப்போது எழுந்து வந்தாலும் – இரண்டரைக்கோ, மூன்றுக்கோ, நாலுக்கோ – நான் தயார் நிலையில் இருக்க வேண்டும். முதலில் அளிக்கப்படுவது என் மலர்மாலையாக இருக்க வேண்டும். பெரியவா கண் விழித்ததும் நான் கொண்டு வந்துள்ள மலர்மாலையை முதலில் அங்கீகரித்துக் கொண்டால், என் பக்தி தூய்மையானது என்று கருதிக் கொள்வேன். அவருடைய ஆசி பரிபூரணமானது என்ற நம்பிக்கை ஏற்படும்' என்று என்னை நானே ஒரு சோதனைக்குள்ளாக்கிக் கொண்டேன். அவ்வாறு நேராவிட்டால் என் உள்ளம் எவ்வாறு பாதிக்கப்படும் என்று சற்றும் சிந்திக்காமலே இந்த அக்னிப் பரீட்சையில் என்னை ஈடுபடுத்திக் கொண்டேன். 'ஹர ஹர சங்கரா... ஜய ஜய சங்கரா...' என்ற மாமந்திர ஜபத்தில் ஆழ்ந்து போனேன்.

சின்னஞ்சிறு ஒலி கேட்டால்கூட, சுவாமிகள் எழுந்துவிட்டாரோ என்று மூங்கில் தட்டை எடுத்துக்கொண்டு அறையை நோக்கி விரைவேன். கதவு திறக்காததைக் கண்டு, மீண்டும் மரத்தடியில் வந்து அமர்ந்து கொள்வேன்.

நான்கு மணி நெருங்கிக் கொண்டிருக்க வேண்டும். அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காகங்கள் கரைய, சின்னஞ்சிறு பறவைகள் 'கீச்'சிடும் ஒலி கேட்டது. மலர்ந்து, மணம் பரப்பிய பவழமல்லிப் புஷ்பங்கள் ஒன்றிரண்டு என் மீது உதிர்ந்தன.

அக்கணம், நான் கண்குத்திப் பாம்பாகப் பார்த்துக் கொண்டிருந்த கதவருகே ஒரு சுமங்கலி வந்து நின்றார். அவர் வழக்கமாக 'விச்வரூப தரிசன'த்துக்கு வருபவர். சுவாமிகள் துயில் எழுந்ததும், நடுங்கும் குரலில் பாட்டுப் பாடிக் கொண்டே கற்பூராரத்தி எடுக்கும் பெண்டிரில் ஒருவர்.

அவரையடுத்து மேலும் இரண்டு மூன்று சுமங்கலிகள், கைகளில் மலர் தட்டுகளுடனும் கற்பூரத் துண்டுகளுடனும் வந்தனர். சற்றைக்கெல்லாம் உதிரிப்பூக்களுடன் உரத்த குரலில் மங்கள சுலோகங்கள் சொல்லிக் கொண்டு இரண்டு மாதர்கள்... அத்தனை பேரும் கதவை மறைத்துக்கொண்டு நின்றுவிட்டார்கள்.

மெள்ள மெள்ள நான் நம்பிக்கை இழக்கத் தொடங்கினேன். 'எனது 'முதல் மலர்மாலை' எண்ணம் ஈடேறாது போலிருக்கிறதே...' என்று சஞ்சலப்பட்டேன். 'இவர்களை மீறி நான் எப்படிச் சுவாமிகளை நெருங்குவது? முண்டியடித்துக் கொண்டு போய் தரிசனம் செய்து பழக்கமில்லையே...' என்ற சிந்தனையில் ஆழ்ந்து சிறிது துயருற்றேன். 'விடியவிடிய விழித்திருந்தும் ஏமாந்து விட்டேனே.. சோதனையில் எனக்குத் தோல்விதானா?' மனம் குமுறியது.

'நடக்கிறபடி நடக்கும்' என்ற மனநிலையோடு எழுந்து, அந்தப் பெண்மணிகளுக்குப் பின்னால் போய் நின்று பொறுமையுடன் காத்திருந்தேன்.

கதவு திறந்தது. சுவாமிகள் திருவதனம், உறக்கத்தின் அறிகுறி சிறிதுமின்றி திவ்யதேஜஸுடன் தரிசனமாயிற்று. கற்பூர ஒளியில் திருமேனி ஜோதி சொரூபமாய் ஒளிர்ந்தது. அந்த ஆனந்தபரவசத்திலும், என் 'சங்கல்ப சோதனை'யின் நினைவு அடிமனத்தில் எதிரொலித்துக் கொண்டே இருந்தது.

அடுத்த நொடி சுவாமிகளின் வலக்கரம், யானைமுகனின் துதிக்கையைப் போல் எழும்பி, நீண்டு என் கையிலிருந்த மல்லிகைப்பூ மாலையை நோக்கி வந்தது. சிலிர்த்துப்போய் ஓரடி முன்னால் நகர்ந்தேன். மாலையை லாகவமாய் எடுத்து, மெல்லிய புன்னகை இழையோடியவாறே அதை அங்கீகரித்துக்

கொண்டார் ஆசாரிய சீலர். இந்தக் காட்சியை வியப்புடன் பார்த்த சுமங்கலிகள், 'பின்னால் நிற்பது யார்?' என்று அறியும் ஆவலில் என் பக்கம் திரும்பினர். அந்தச் சலசலப்பில், முன்னால் எனக்குச் சிறிது இடம் கிடைத்தது. ஒரே தாவலில் முன்சென்று, வெள்ளி நாணயங்களைத் தங்கத் திருப்பாதங்களில் சேர்த்து விட்டு, பனித்த கண்களுடன் தரையில் விழுந்து எழுந்தேன்.

**ம**ற்றொரு ஜன்ம நட்சத்திரத் திருநாளன்று எனக்கு வேறோர் அனுபவம் கிட்டிற்று.

புத்தூரிலிருந்து சித்தூர் செல்லும் பாதையில் இருக்கும் 'கார்வேட் நகரம்' என்ற சிற்றூரில் திருக்குளக்கரையில் அமைந்திருந்த அருண்மயானதோர் ஆச்ரமத்தில் சுவாமிகள் தங்கியிருந்த நேரம்...

நண்பர்கள் இருவருடன் இம்முறையும் அனுஷ நட்சத்திரத்துக்கு முதல் நாள் இரவே கார்வேட் நகர் சென்றுவிட்டேன். தரிசனத்தின்போது சுவாமிகளிடம் நூறு ரூபாய் சமர்ப்பித்து, ''பெரியவா ஜன்ம நட்சத்திரச் செலவில் இந்தச் சொற்பத் தொகையையும் சேர்த்துக்கணும்...'' என்று கூறி அங்கிருந்த மரத்தட்டில் பணிவுடன் வைத்தேன்.

ஒரு நிமிடம் சிந்தனையில் ஆழ்ந்தார் பெரியவா.

''நீங்க எப்படி வந்தேள்?''

''கார்லேதான்...''

''டிரைவர் வந்திருக்கானா?''

''வந்திருக்கார்...''

''இந்த நூறு ரூபாயை அவங்கிட்டே குடுத்து, பக்கத்துல இருக்கிற புத்தூருக்குப் போய் தயிர் வாங்கிண்டு வரச்சொல்லு. இங்கேருந்து ஒரு பையனைத் துணைக்கு அனுப்பறேன். நீங்கள்லாம் போக வேண்டாம், இங்கேயே இருங்கோ...'' என்று உத்தரவாயிற்று.

செய்தி அறிந்ததும் காரோட்டி பழநிக்கு நிலைகொள்ளாத மகிழ்ச்சி. பெரியவா மீது எல்லையற்ற பக்தி அவருக்கு. 'சுவாமிகள் தன்னிடம் இந்தப் பணியை ஒப்படைத்திருக்கிறாரே...' என்று தலைகால் புரியுவில்லை. ஆச்ரமப் பையனுடனும் சில பாத்திரங்களுடனும் புத்தூருக்குப் புறப்பட்டு விட்டார் பழநி.

நாங்கள் மூவரும் 'நூறு ரூபாய்க்கு எதுக்கு தயிர்?' என்று ஆளுக்கொருவிதமான காரணத்தைக் கண்டுபிடித்து, அதைப் பற்றி விமரிசனத்தில் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தோம்.

பத்து மணிக்கு, தயிர் இல்லாமல் கார் திரும்பி வந்தது. கேட்டபோது பழநி சொன்னார்:

''புத்தூர்லே தயிரே கெடைக்கலே... அலைஞ்சு விசாரிச்சப்ப அஞ்சு படி, பத்து படிதான் கிடைக்கும்னாங்க... நான் வேணாம்னு வந்துட்டேன். திருப்பதிக்குப் போனா நிறையத் தயிர் கிடைக்கும்னு சொல்றாங்க... நான் போய் வந்துடட்டுமா?''

''உன்னாலே முடியுமா?''

''பெரியவங்க சொல்லியாச்சுல்லே... எங்கேருந்தாலும் வாங்கிக்கிட்டு வந்துட வேண்டியதுதானே... முடியுமாங்கிற கேள்விக்கே இடமில்லே... பெரிய

வங்க சொன்னா அது நடந்த மாதிரிதான்...'' என்று கூறிவிட்டு, பெட்ரோலுக்கும் கைச்செலவுக்கும் பணம் வாங்கிக் கொண்டு திருப்பதிக்குப் புறப்பட்டு விட்டார் பழநி.

நான் இரண்டு, மூன்று முறை எழுந்து பார்த்தேன். கார் வந்திருக்கவில்லை. கடைசியாகப் பார்த்தபோது மணி மூன்றரையிருக்கும். அப்போதும் வரவில்லை. நாலரை மணி சுமாருக்குப் பழநி வந்தார், நூறு ரூபாய் தயிருடன்!

விச்வரூபத் தரிசனத்துக்குச் சென்றபோது, தயிர் வாங்கி வந்த செய்தியைப் பெரியவாளிடம் தெரிவித்துவிட்டு, பழநி, திருப்பதிக்குச் சென்று சற்று முன்னே திரும்பி வந்ததைப் பற்றியும் சொன்னேன். மகிழ்ச்சியடைந்தார். பின்னர் சொன்னார்:

''இந்தத் தயிர் எதுக்குத் தெரியுமா? இன்னிக்கு வெளியூர்லேருந்தெல்லாம் நிறையப் பேர் தரிசனத்துக்கு வருவா. இங்கே சாதம் மட்டும் வடிக்கச் சொல்றேன். இந்தத் தயிரைக் கலந்து மாங்கா, பச்சைமிளகாய், இஞ்சி எல்லாம் போட்டு வரவாளுக்கெல்லாம் உன் கையாலேயே தயிர் சாதம் குடு. இந்த வெயில் வேளைக்குப் பரம சுகமாயிருக்கும், எல்லாரும் திருப்தியா சாப்பிடட்டும்...'' என்றார் (அப்போது சுவாமிகள் மட்டுமே கார்வேட் நகரில் தங்கியிருந்தார். பூஜையுடன் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் வேறோர் ஊரில் முகாமிட்டிருந்தார்).

சுவாமிகள் ஆணையிட்டிருந்தபடியே நிறைய சாதம் வடித்து, அண்டா அண்டாவாகத் தயிர் சாதம் தயாரிக்கப்பட்டது. கடும் வெயில். வெளியூர்களிலிருந்து நிறையப் பேர் தரிசனத்துக்காக வந்திருந்தனர். அத்தனை பேருக்கும் மதியம் ஒரு மணி முதல் நானும் என்னுடன் வந்திருந்த இரு நண்பர்களும் மற்றும் பிறரும் விநியோகம் செய்தோம்.

மாலை நான்கு மணிக்குப் பெரியவாளிடம் விடைபெறச் சென்றோம்.

''எல்லாரும் வயிறு நிரம்ப திருப்தியா சாப்பிட்டாளா?''

''சாப்பிட்டா...''

''வசதி இல்லாத இந்த இடத்திலே, இந்த வைகாசிக் காய்ச்சலுக்கு, நீ குடுத்த நூறு ரூபாய்லே தயாரான தயிர் சாதம் அவாளுக்கு அமிர்தமா இருந்திருக்கும், இல்லியா? உனக்கும் திருப்தியாச்சா?''

''பெரியவா அனுக்ரஹம்...''

''கார்லே நீங்க எத்தனை பேர் வந்திருக்கேள்?''

''மூணு பேர்...''

''டிரைவரைச் சேர்க்காமத்தானே...''

''ஆமா...''

''உன் கார்லே பின்னாலே மூணு பேர் உட்காரலாம், இல்லியா?''

''உட்காரலாம்...''

''முன்னாலே எத்தனை பேர் உட்காரலாம்?''

''டிரைவரைத் தவிர, ரெண்டு பேர் உட்காரலாம்...''

''ஒருத்தர் உட்கார்ந்தா தாராளமா இடம் இருக்குமில்லியா?''

''இருக்கும்...''

''இங்கே நாகலட்சுமின்னு ஒரு அம்மா வந்திருக்கா... அவ நாளைக் கார்த்தாலே ரயில்லே பம்பாய் போயாகணும். உங்களோட மெட்ராஸுக்கு அனுப்பறேன்... அவ முன்னாலே உட்காரட்டும். நீங்க மூணு பேரும் பின் 'சீட்'லே உட்கார்ந்துக்கோங்கோ... அவளை ராத்திரி அவா ஆத்துலே இறக்கி விட்டுட்டுப் போ... சௌக்கியமா போயிட்டு வாங்கோ...''

நானாகவே சுவாமிகளுக்குச் சிறுகாணிக்கை சமர்ப்பித்த இரு நிகழ்ச்சிகளை நினைவுகூர்ந்தேன். தரிசனத்துக்குச் சென்றபோது என் கையில் காசு இல்லாத நிலையில் அன்புக் கைங்கர்யம் செய்ய வைத்த இரு நிகழ்ச்சிகள் தற்போது நினைவுக்கு வருகின்றன.

ஒரு தீபாவளித் திருநாள். கங்காஸ்நானம் செய்துவிட்டு நுங்கம்பாக்கத்திலிருந்து அதிகாலையில் தரிசனத்துக்காக காஞ்சீபுரம் சென்ற கோஷ்டியில் நானும் சேர்ந்து கொண்டேன். அதில் முக்கியமாக தத்தாஜியும் 'ஜயம் அண்ட் கோ' மணியும் இடம் பெற்றிருந்தனர்.

அன்று வேறு பேட்டைகளிலிருந்தும் ஏழெட்டுப் பேர் அந்த விடியற்காலை நேரத்தில் தரிசனத்துக்காக வந்திருந்தார்கள். எல்லோரும் பழக்கமானவர்கள்தான். சுவாமிகள் என்னிடம் ''தீபாவளிக்காக என்னோட இருக்கிற அஞ்சாறு பசங்களுக்கு வேஷ்டி துண்டு வாங்கிக் குடுக்கறயா?'' என்று கேட்டார்.

''நான் கைலே பணம் கொண்டுவரலியே...''

''பரவாயில்லே... இங்கே யார்கிட்டேயாவது கைமாத்தா பணம் வாங்கிண்டு ஒத்தை வேஷ்டியும் துண்டும் வாங்கிண்டு வா!''

தத்தாஜி என்னைத் தனியா அழைத்து, '' 'வாங்கித் தரேன்'னு பெரியவாகிட்டே சொல்லிடு. நான் பணம் தரேன்'' என்றார்.

நான் பெரியவாளிடம் தத்தாஜி கூறியதைக் கூறினேன்.

''அப்புறம் அவர்கிட்டே மறக்காம அந்தப் பணத்தைத் திருப்பிக் குடுத்துடணும்.''

''சரி..''

''ஏன் நின்னுண்டிருக்கே? பணத்தை வாங்கிண்டு கடைக்குப் போய் வாங்கிண்டு வா!''

''மணி ஆறுதான் ஆறது. துணிக்கடை இப்ப திறந்திருக்காது. எட்டு மணிக்கு மேலே போய் வாங்கிக் குடுத்துட்டு ஊருக்குப் போறேன்'' என்றேன் நான்.

''எனக்கு இப்பவே வேணும்... நீ ஒண்ணு பண்ணு. மடம் இருக்கிற வரிசையிலேயே, பத்தடி நடந்தா ஒரு துணிக்கடை இருக்கு. அது மூடியிருக்கும். கடை முதலாளிக்குப் பின்னாலேதான் வீடு. கதவைத் தட்டி எழுப்பி, அவர்கிட்டே நான் வாங்கிண்டு வரச் சொன்னேன்னு சொல்லு''



என்று சுவாமிகள் கட்டளையிடவே, தத்தாஜியிடம் 100 ரூபாய் பெற்றுக் கொண்டு விரைந்து சென்று, கடையைக் கண்டுபிடித்து, திறக்கச் சொல்லி, வேட்டிகளும் துவாலைகளும் வாங்கிக் கொண்டு வந்து பெரியவாளிடம் சமர்ப்பித்தேன். யார் யாருக்குக் கொடுக்க வேண்டும் என்று கூறி, அவர்களை வரச் சொல்லி என் கையாலேயே அவற்றைக் கொடுக்கச் சொன்னார்.

எனக்கு ஆச்சரியமாயிருந்தது. சுவாமிகள் தரிசனத்துக்கு வந்திருந்த எல்லோரும் பெரும் செல்வந்தர்கள். ஓரிருவர் துணிக்கடையையே விலை பேசக்கூடிய லட்சாதிபதிகள். மணிபர்ஸில் கத்தை 100 ரூபாய் நோட்டுக்கள் இல்லாமல் வெளியே புறப்படாதவர்கள். அவர்களையெல்லாம் விட்டுவிட்டு, கடன் வாங்கிக்கொண்டு போயாவது கைங்கர்யம் செய்யும்

படி என்னைப் பணித்ததன் காரணம் என்னவோ? சுவாமிகளுக்கு மட்டுமே வெளிச்சம்.

ஒரு சமயம் நண்பர்களுடன் கலவைக்குச் சென்றிருந்தேன். மணி எட்டு இருக்கும். தரிசனம் முடிந்து நாங்கள் வந்தனம் செய்து விடை பெற்றபோது சுவாமிகள் என்னிடம், ''எனக்கு ஒரு பெஞ்சு பண்ணிக் குடுத்துட்டுப்போறயா?'' என்று கேட்டார்.

காஞ்சீபுர தீபாவளித் தரிசன அனுபவம் இருந்ததால் தயங்காமல், சாக்குப் போக்கு சொல்லாமல், 'சரி' என்று கூறினேன். பெரியவர் உள்ளே சென்று விட்டார்.

விந்தை என்னவென்றால், அன்றும் என்னிடம் பணமில்லை. என் நண்பர் களிடமும் இல்லை. காஞ்சீபுரம் காமாட்சியம்மன் கோயில் ஸ்ரீகார்யம் ஜானகிராமய்யா இருந்தார். அவரிடம் சென்று பெரியவா உத்தரவைக் கூறி னேன்.

''நீ ஏம்ப்பா கவலைப்படறே? எங்கிட்டே மடத்துப் பணம் இருக்கு. எவ் வளவு வேணுமோ கேளு, தரேன்'' என்றார் ஜானகிராமய்யா.

''மடத்துப் பணத்துலே நான் 'பெஞ்சு' பண்ணித் தரக்கூடாது. நீங்க கைமாத்தா குடுங்கோ, நான் திருப்பிக் குடுத்துடறேன்'' என்று கூறிவிட்டு தீபாவளிக்கு வேட்டி வாங்கித் தந்த நிகழ்ச்சியை அவரிடம் விவரித்தேன்.

''சரி, உன் இஷ்டப்படியே செய்.''

''யார் 'பெஞ்சு' செஞ்சு குடுப்பா..? தச்சர் வீடு எங்கேயிருக்குன்னு யாரைக் கேட்டா தெரியும்?''

''யாரையும் கேட்க வேண்டாம். பக்கத்துலேயே தச்சுப் பட்டறை இருக்கு. பெரியவா உனக்குச் சௌகரியமாத்தான் சொல்லியிருக்கா... கடையை மூடிட் டாரோ என்னவோ, போய்ப் பாரு... சீக்கிரம் போ'' என்று அவசரப்படுத்தி னார்.

ஸ்ரீமடத்தை அடுத்து ஒரு தச்சுப் பட்டறை இருந்தது மட்டும் ஆச்சரிய மில்லை. நாங்கள் சற்று நேரம் கடத்தியிருந்தால் அவர் கடையைப் பூட்டிக் கொண்டு வீட்டுக்குப் போயிருப்பார்!

சுவாமிகளின் உத்தரவு என்று சொன்னதும், 'பெஞ்சு' செய்து கொடுப்பதற்கு உடனே ஒப்புக்கொண்டார். தேவையான மரத்தைச் சேர்த்து மொத்தமாக ரூ. 100 ஆகும் என்று அவர் கூறினார்! என்ன மரம் எத்தனை அடி வேண்டும் என்பதையெல்லாம் குறித்துக் கொடுத்து, அடுத்துள்ள ஆரணிக்குச் சென்று மரம் வாங்கி வரும்படியும், அதற்குள் ஆகாரத்தை முடித்துக்கொண்டு வந்து விடுவதாகவும் கூறிச் சென்றார் அவர்.

இரவு பத்து மணி சுமாருக்கு 'பெஞ்சு' செய்யும் பணி தொடங்கியது. தச்ச னாருடன் பேச்சுக் கொடுத்தபடி நாங்களும் பட்டறையிலேயே அமர்ந்து கொண்டிருந்தோம். அன்று இரவு 'டீ'தான் எங்களுக்கு ஆகாரம்.

விடியற்காலை நான்கு மணிக்கு 'பெஞ்சு' செய்து முடித்து எங்களிடம் ஒப்படைத்தார் தச்சர். அதை நாங்கள் எடுத்து வந்து, மடத்தில் வைத்த அதே தருணத்தில் சுவாமிகள் வெளியே வந்தார்.

'' 'பெஞ்சு' பண்ணியாச்சா?'' என்று வினவினார்.

''இப்பத்தான் முடிஞ்சது, இதோ கொண்டு வந்து வெச்சிருக்கோம்.''

''யார் பண்ணினா?''

''பக்கத்துலேயே ஒரு தச்சுப் பட்டறை இருக்கு. அவர் செஞ்சு குடுத்தார்.''

''நீங்களும் விடிய விடிய முழிச்சுண்டு இருந்தேளா?''

''ஆமாம்..''

மலர்ந்த மந்தஹாசம் மனத்தைக் குளிர்வித்தது. 'சரி, ஊருக்குப் போயிட்டு வாங்கோ' என்று அன்புக் கரம் உயர்த்தி, ஆசி வழங்கினார் சுவாமிகள்.

இப்போது இவ்விரு நிகழ்ச்சிகளையும், முன்னர் நடந்த இரு நிகழ்ச்சிகளையும் எண்ணிப் பார்க்கிறேன். என் முதல் காணிக்கையாக சென்னையில் சுவாமிகளின் திருப்பாதங்களில் ரூ. 101 சமர்ப்பித்தேன். பின்னர், ஜன்ம நட்சத்திரத்துக்காக கார்வேட் நகரில் ரூ. 100 வைத்தேன். காஞ்சியில் தீபாவளியன்று, ரூ. 100-க்கு வேட்டி, துவாலை வாங்கினேன். கலவையில் 100 ரூபாய்க்கு ஒரு 'பெஞ்சு' செய்து கொடுத்தேன். முன்னிரண்டும் நான் கையில் எடுத்துச் சென்ற 100 ரூபாய். பின்னிரண்டும் நான் கடன் வாங்கிச் செலவழித்த 100 ரூபாய்.

தேனம்பாக்கம் சிவாஸ்தானத்தில், வெளியே வராமல், தொண்டுபுரியும் பையன்களும் அருகே செல்ல முடியாமல், அறைக்குள் இருந்தபடியே தம் தேவைகளைத் தாமே கவனித்துக் கொண்டு சுவாமிகள் சில மாதங்கள் தங்கியிருந்தார். ஜன்னலுக்கு வெளியே இருந்துதான் தரிசனம் செய்ய வேண்டும். 'கௌண்ட்டர்' வழியாகத்தான் பிட்சை.

இந்தக் கடுந்தவம் முடிந்து சில நாட்கள் கடந்த பின்னர், சுவாமிகளுக்கு நான் கையடக்கமாக 'பாக்கெட்' டிரான்ஸிஸ்டர் ஒன்றைக் காணிக்கையாக்கியிருந்தேன். அதன் விலை 100 ரூபாய்! அதை மகிழ்ச்சியோடு பெற்றுக்கொண்டு தினமும் செய்திகள், சொற்பொழிவுகள், சங்கீத நிகழ்ச்சிகள் எல்லாவற்றையும் சுவாமிகள் கேட்டுக் கொண்டிருப்பது வழக்கம்.

ஒரு நாள் நான் தரிசனத்துக்குச் சென்றபோது, ''நீ எனக்கு ப்ரசென்ட் பண்ணினே பாரு, அந்த ரேடியோவை வேதபுரி மாப்பிள்ளைக்குக் கல்யாணப் ப்ரசென்ட்டா குடுத்துட்டேன்'' என்று சிரித்துக்கொண்டே கூறினார்.

என் பாக்கியத்தைவிட வேதபுரியின் மாப்பிள்ளை செய்த பாக்கியம் மிகமிகப் பெரியது அன்றோ?

இந்நிகழ்ச்சிகளையெல்லாம் ஒரு நாள் சாவகாசமாய் அசை போட்டுக் கொண்டிருந்தேன். 'இது என்ன எல்லாவற்றிலும் 100 ரூபாய் கணக்கு?' என்று வியப்பு மேலிட்டபோது, எனக்கும் நூறு ரூபாய்க்கும் உள்ள தொடர்பு இவற்றுடன் முற்றுப் பெற்றுவிடவில்லை என்பது நினைவுக்கு வந்தது. மற்றொரு மறக்க முடியாத நிகழ்ச்சியின் தொடர்பாக சுவாமிகள் 100 ரூபாய் மூலம் ஆசிரியர் அமரர் வாசன் அவர்களையும் என்னையும் சம்பந்தப்படுத்திய ஓர் அதிசயத்தையும், அதன் பலனும் பயனும் இன்றும் தொடர்ந்து வருவதையும் கூறுகிறேன். அதற்கு முன்னுரையாக, சுவாமிகளின் அருகாமையும் அன்பும் அருளும் எனக்குக் கிட்ட காரணமாயிருந்த ஆசிரியர் வாசனுக்கு நன்றிக்கடன் பட்டிருப்பதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

வணிகவியலில் பட்டம் பெற்று, கல்லூரியை விட்டு வெளிவந்த என்னை விகடனில் பணிபுரிய அழைத்து, கார்ட்டூனிஸ்டாகவும் பத்திரிகையாளனாகவும் எழுத்தாளனாகவும் ஆவதற்கு எனக்கு உற்சாகமும் பயிற்சியும் அளித்தவர் ஆசிரியர் வாசன். 1957-ல் சுவாமிகள் சென்னை சம்ஸ்கிருதக் கல்லூரியில்

ஆற்றிய பேருரைகளின் சுருக்கத்தை வாராவாரம் விகடனில் எழுதும்படி அவர்தான் என்னைப் பணித்தார். 'சென்னையில் பொன்மாரி' என்ற தலைப்பில் வெளியான அவ்வமுதமொழிகள் தொடர்பாகத்தான் முதன்முதலாக நான் பெரியவாளை நேரில் தரிசிக்கும் பேறு பெற்றேன். விகடனில் சேர்ந்திராவிட்டால், சுவாமிகளின் கருத்துக்களை விகடனில் எழுதும்படி ஆசிரியர் வாசன் என்னைப் பணித்திராவிட்டால், வாழ்க்கையில் கிடைத்தற்கரிய பல்வேறு அனுபவங்கள் ஏற்பட்டிருக்குமா? இப்படியொரு தொடரை எழுதும் நல்வாய்ப்பும் நற்பேறும்தான் கிட்டியிருக்குமா?

காளஹஸ்தியில் 1966-ம் ஆண்டு நடைபெற்ற வியாச பாரத, ஆகம, சில்ப, புராணக் கலைகள் சதஸுக்குச் சென்றிருந்தேன். ஒரு நாள் சுவாமிகள் என்னை அழைத்து "நீ கூப்பிட்டா வாசன் இங்கே வருவாரா?" என்று படுகாஷுவலாகக் கேட்டார். என்ன பதில் சொல்வதென்றே ஒரு கணம் எனக்குப் புரியவில்லை. பின்னர் "போய் 'பெரியவா வரச்சொன்னா'ன்னு சொல்றேன்" என்றேன்.

"இப்பவே மெட்ராஸ் போய் இங்கே வந்துட்டுப் போகச் சொன்னேன்னு வாசன்கிட்டே சொல்லு" என்றார் சுவாமிகள்.

அன்று மாலையே சென்னைக்குத் திரும்பி, ஆசிரியர் வாசனைச் சந்தித்து, சுவாமிகள் சொன்னதைக் கூறினேன். ஓர் இன்ப அதிர்ச்சி அவர் முகத்தில் படரக் கண்டேன்.

"என்ன விஷயமாக என்னை வரச் சொல்லியிருக்கிறார் என்று உனக்குத் தெரியுமா?"

"தெரியாது. 'வரச்சொல்' என்று மட்டும்தான் சொன்னார்."

"எப்போ வரணும்னு சொன்னார்?"

"அதுவும் சொல்லலே... உங்களுக்கு எப்ப சௌகரியமோ..."

"நோ... நோ... என் சௌகரியம் இல்லே, பெரியவா சௌகரியம்தான் முக்கியம். நீ ஒண்ணு பண்ணு... நாளை கார்த்தாலே காளஹஸ்திக்குப் போய் பெரியவா சௌகரியத்தைக் கேட்டு எனக்கு போன் பண்ணு. நான் புறப்பட்டு வரேன்.." என்று ஆசிரியர் கூறினார்.

அதிகாலையில் புறப்பட்டு காளஹஸ்தி சென்று, பெரியவாளிடம் ஆசிரியர் எப்போது வர வேண்டும் என்று கேட்டதற்கு, 'இன்னி சாயந்தரம் வரச் சொல்லு' என்று உத்தரவாயிற்று. உடனே ஆசிரியருக்குத் தெரிவித்தேன். "சரி, வருகிறேன். நீ அங்கேயே இரு" என்று அவர் கூறினார்.

மாலை ஐந்து மணி சுமாருக்கு ஆசிரியர் வந்து சேர்ந்தபோது, பெரியவா சதஸில் அமர்ந்திருந்தார். நான் சென்று ஆசிரியர் வந்துவிட்ட விவரத்தை விஞ்ஞாபனம் செய்து கொண்டேன். கண்ணனை அழைத்து ஒரிடத்தைக் குறிப்பிட்டுச் சொல்லி, "அங்கே வாசனை உட்கார வை, வருகிறேன்" என்றார்.

அது ஒரு சிறு ஓலைக்குடில். அதற்கு வெளிப்புறம் வைக்கோலைப் பரப்பி, அதன் மீது சாக்குப்பைகளைப் போர்த்தி மெத்தென்ற ஆசனம் ஒன்று அமைத்தார் கண்ணன். அங்கு சென்று ஆசிரியர் அமர்ந்தார். பத்து நிமிடங்கள் கழித்து சுவாமிகள் வந்தார். ஆசிரியர் எழுந்து நமஸ்காரம் செய்தார். அவரை அமரச் சொல்லிவிட்டு, சுவாமிகள் எதிரில் அமர்ந்து கொண்டார். பின்னர், என்னையும் கண்ணனையும் அங்கிருந்து போகும்படி சைகையாலேயே உத்தரவிட்டார். நாங்கள் பத்தடி விலகி நின்றோம். 'இன்னும் தள்ளிப் போய் நில்லுங்கள்' என்று மீண்டும் சைகையாலேயே கூறவே, அவர்கள் இருவரும் பேசிக் கொள்வது எங்கள் காதில் விழ முடியாத தொலைவில் போய் நின்று கொண்டோம்.

இருவரும் சுமார் முக்கால் மணி நேரம் உரையாடிக் கொண்டிருந்தனர். பெரும்பாலும் சுவாமிகள்தான் பேசினார். ஆசிரியர் மிகுந்த ஈடுபாட்டுடன்



கேட்டுக் கொண்டிருந்தார். இறுதியில் சுவாமிகள் என்னை அருகில் வரச்சொன்னார். சென்றேன். அப்போது ஆசிரியர் ''பெரியவா என்ன சொல்றாளோ, அப்படியே செய்யறேன்'' என்று பணிவுடன் கூறியதைக் கேட்டேன்.

''எனக்கு என்ன வேணுங்கிறது இவனுக்குத் தெரியும். இவன் என்ன சொல்றானோ அப்படிச் செய்'' என்று சுவாமிகள் கூறிவிட்டு ஆசிரியருக்குப் பிரசாதம் அளித்தார்.

பின்னர், சுவாமிகள் முன்னே நடந்து செல்ல, ஆசிரியர் சற்றுப் பின்னால் தொடர, நாங்கள் பத்தடி இடைவெளி விட்டு நடந்து சென்றோம்.

ஸ்ரீ மணிகண்டேச்வரர் ஆலய கோபுரமண்டபத்தில் நின்ற சுவாமிகள், சுவரில் பொறிக்கப்பட்டிருந்த சுலோகம் ஒன்றை ஆசிரியருக்குச் சுட்டிக் காட்டினார்.

''நீ சம்ஸ்கிருதம் படிச்சிருக்கியோ?'' என்று குழந்தைச் சிரிப்புடன் கேட்டார்.

''சின்ன வயசுலே அம்மா கொஞ்சம் சொல்லிக் குடுத்தா...'' என்றார் ஆசிரியர்.

''சரி, இதைப் படிச்சுச் சொல்றேன்'' என்று கூறிவிட்டு, சுவாமிகள் அந்தச் சுலோகத்தை நிதானமாக, வார்த்தை வார்த்தையாகப் படித்துக்காட்டி, அதன் பொருளையும் எளிமையாக விளக்கினார்.

(இது 12-வது நூற்றாண்டின் சோழர்காலக் கல்வெட்டு என்று தொல்பொருள் ஆராய்ச்சி வல்லுநர் டாக்டர் நாகசாமியிடமிருந்து பின்னர் அறிந்தேன். தனது கண்களை ஈச்வரனுக்கு அர்ப்பணித்த வேடர் தலைவனான கண்ணப்ப நாயனார் பக்திப் பெருக்கால் செய்த ஆசாரம் மீறிய நைவேத்திய பூஜையை பரமேச்வரன் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டதை முதல் சுலோகத்தில் கூறிவிட்டு, இந்த சுலோகத்தில், அவன் தன்வாயில் கொண்டுவந்து பக்தியுடன் அபிஷேகம் செய்த எச்சில் நீரையும் ஈச்வரன் புனித நீராட்டாகக் கருதினார் என்றும் கவி வர்ணிக்கிறார்.)

மண்டபத்திலிருந்து புறப்பட்ட சுவாமிகள், பின்னர், 'சௌக்கியமாகப் போய் வாருங்கள்' என்பதுபோல் மௌனமாக ஆசி வழங்கி உத்தரவு தந்துவிட்டு மெள்ள நடக்கத் தொடங்கினார்.

மறுநாள் காலையில்தான் நான் சென்னை திரும்பினேன். வழக்கமாக மதியம் இரண்டு மணிக்கு அலுவலகத்துக்கு வரும் ஆசிரியர், வந்ததும் என்னைக் கூப்பிட்டனுப்பினார்.

''நேத்து உங்கிட்டே சுவாமிகள் கேட்கச் சொன்னாரே, நான் என்ன செய்யணும் சொல்லு'' என்றார்.

என்ன பதில் சொல்வது என்று புரியாமல் பேசாமல் இருந்தேன்.

''என்ன பேசாம இருக்கே..?''

''நேத்து திடீரென்று பெரியவா உங்களிடம் அப்படிச் சொல்லி விட்டதைப் பற்றி பிறகு அவரிடம் நான் எதுவும் பேசவில்லை. இன்று காலை பிரசாதம் வாங்கிக் கொண்டபோதுகூட, இதைப் பற்றிக் கேட்க வேண்டும் என்று தோன்றவில்லை. சுவாமிகளும் எதுவும் கூறவில்லை. அதனால் உங்கள் கேள்விக்கு என்ன பதில் சொல்வதென்றே தெரியவில்லை'' என்றேன் நான்.

''சுவாமிகள் உங்கிட்டே கேட்டுக்கோங்கறார். நீயோ, எனக்கு ஒண்ணும் தெரியாதுங்கறே... என்ன பண்றதுன்னு எனக்கும் புரியலையே'' என்றார் ஆசிரியர் சிரித்துக்கொண்டே.

''மறுபடியும் காளஹஸ்திக்குப் போய் பெரியவாகிட்டே விவரமா கேட்டுக் கொண்டு வரேன்'' என்று நான் கூறியதும் ''அப்படியே செய்'' என்றார் ஆசிரியர்.

நான் மறுபடியும் சுவாமிகளிடம் சென்று நடந்தது எல்லாவற்றையும் கூறி, ''எடிட்டர் என்ன செய்யணும்னு கேக்கறார். என்ன கேக்கறது, எவ்வளவு கேக்கறதுன்னு எனக்கு ஒண்ணும் தெரியலே.. பெரியவாளுக்கு வேணுங்கிறது என்னன்னு எனக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டேன். சுவாமிகள் சிரித்துக் கொண்டே ''உனக்குத் தோண்றது எதையாவது கேளேன்'' என்றார். நான் பேசாமல் நின்றேன்.

''உனக்கு ஒண்ணுமே கேட்கத் தோணலையா?''

''இல்லே..''

சற்று யோசித்துவிட்டு பெரியவா, ''ஒண்ணு பண்ணு, மானேஜர்கிட்டே போய், மடத்துலேருந்து ·தர்மப் பிரசாரத்துக்காக ஃப்ரீயா சின்னச் சின்ன புஸ்தகங்கள் அனுப்பிச்சிண்டிருக்காளே, அதுக்கு மாசாமாசம் எத்தனை ரூபாய்க்கு ஸ்டாம்ப் செலவாறதுன்னு கேட்டுண்டுவா'' என்றார்.

மானேஜரிடம் சென்று கேட்டேன். அவர் லெட்ஜரைப் புரட்டிப் பார்த்து விட்டு ''ஸ்டாம்ப்புக்காக உத்தேசமா மாசம் நூறு ரூபாய் செலவாகும்'' என்று சொல்ல, சுவாமிகளிடம் வந்து அதைக் கூறினேன்.

''சரி, அப்படின்னா அந்த நூறு ரூபாயை மாசாமாசம் வாசனைக் குடுக்கச் சொல்லு'' என்று அருளாணையிட்டார் சுவாமிகள்.

சுவாமிகள் கூறியதை ஆசிரியரிடம் தெரிவித்தபோது அவர் ஆச்சரியப் பட்டார். ''பெரியவா லட்ச ரூபாயாவது கேட்பார் என்று நினைத்துக் கொண்டிருந்தேன். அதற்கு ஏற்பாடும் செய்து வைத்திருக்கிறேன். மாசம் நூறு ரூபாய் குடுக்கச் சொன்னார்ங்கறயேப்பா... சரி, நாளை கார்த்தாலே ஜெமினி ஹவுஸுக்கு (அவரது இல்லம்) வா'' என்று கூறவே, மறுநாள் சென்றேன். துணைவியார் திருமதி பட்டம்மாளை அழைத்து, ''ஸ்ரீதரிடம் மாசம் முதல் தேதியன்று நூறு ரூபாய் குடுத்துடு, அதை அவர் மடத்திலே கொண்டுபோய்க் குடுத்துடுவார்'' என்றார்.

*1966*-ம் ஆண்டு அக்டோபர் மாதம் தொடங்கிய இந்த மாதாந்திரக் காணிக்கை இன்றுவரை தொடர்ந்து கொண்டிருக்கிறது.

தந்தையை காளஹஸ்திக்கு வரும்படி என்னிடம் சொல்லியனுப்பிய சுவாமிகள், அதற்கு எட்டு ஆண்டுகளுக்கு முன், *1958*-ம் ஆண்டு, மகன் பாலசுப்ரமணியனைத் தரிசனத்துக்கு அழைத்து வரும்படி என்னைப் பணித்தார்.

அப்போது மயிலைச் சித்திரக்குளம் தெரு சங்கராலயத்தில் தங்கியிருந்தார் சுவாமிகள். தீபாவளியன்று காலை ஏழு மணியிருக்கும்... உத்தரவானதும் நான் ஜெமினி ஹவுஸுக்கு விரைந்தேன். ஜே.எம்.டி. (அப்போது நாங்கள் இப்படித் தான் குறிப்பிடுவோம்) பட்டாஸ் வெடித்துக் கொண்டிருந்தார். சுவாமிகள் அழைத்து வரும்படி கூறியதைச் சொன்னதும், தன்னை எதற்கு அழைக்கிறார் என்று வியப்பு மேலிட, தாயாரிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டு வந்தார்.

பெரியவா ஒரு சிறு அறையில் ஒரு மூலையில் சுவரில் சாய்ந்தபடி அமர்ந்திருந்தார். அதிக வெளிச்சம்கூட இல்லை. எதிரில் ஆஞ்சநேய சுவாமிகள் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீ அனந்தானந்த சுவாமிகள் அமர்ந்து பெரியவாளுக்கு ஏதோ ஒரு கடிதத்தைப் படித்துக் காட்டிக் கொண்டிருந்தார்.

வெளிச்சத்திலிருந்து சட்டென்று உள்ளே நுழைந்த ஜே.எம்.டி., மங்கலான அரைகுறை வெளிச்சத்தில், பெரியவாதான் அமர்ந்திருக்கிறார் என்று நினைத்து அனந்தானந்த சுவாமிகளுக்குச் சட்டென்று நமஸ்காரம் செய்துவிட்டார்.

''டேய், நான் இங்கே இருக்கேண்டா'' என்று சுவாமிகள் சிரித்துக் கொண்டே கூறினார்.

அந்தச் சின்னஞ்சிறு அறைக்குள் நுழைந்தபோது, ஜே.எம்.டி-யின் மன இறுக்கத்தை அவர் முகத்தில் காண முடிந்தது. முதன்முறையாக, அதுவும் அத்தனை அருகில் சுவாமிகளைத் தரிசனம் செய்வதும், அவர் கண்களை நேருக்கு நேர் சந்திப்பதும், அவர் கேட்கும் கேள்விகளுக்குத் தெளிவாகப் பதில் சொல்வதும் எத்தனை டென்ஷனான நிமிடங்கள் என்பது அத்தகைய அனுபவத்தைப் பெற்றவர்களுக்கு நன்கு புரியும்!

சூழ்நிலையின் இறுக்கத்தை ஒருநிலைப்படுத்தி, இயல்புக்குக் கொண்டுவரும் பொருட்டு சுவாமிகள் அமுதமொழியில் அன்பைக் குழைத்துப் பேசத் தொடங்கினார்.

பாலசுப்ரமணியனிடம் ஆனந்தவிகடனைப் பற்றிப் பொதுவாக இரண்டொரு கேள்விகள் கேட்டுவிட்டு, அவரது அப்போதைய அலுவலகப் பணிகள் குறித்து விசாரித்தார் சுவாமிகள். பின்னர், அவரது தந்தையார் வாசன் முன்பு தரிசனத்துக்கு வந்திருந்த பழைய நிகழ்ச்சிகளை நினைவுகூர்ந்தார். இளவயதில் ஓரிருமுறை அப்பா அம்மாவுடன் பாலசுப்ரமணியன் தரிசனத்துக்கு வந்து உள்ளதை நினைவுபடுத்திவிட்டு, ''உனக்கு ஞாபகம் இருக்கோ?'' என்று பெரியவாளுக்கே உரிய வாஞ்சையுடன் அவரிடம் வினவினார்.

எதிர்காலத்தில் விகடனின் ஆசிரியர் பொறுப்பை ஏற்றுக்கொண்டு பணிபுரிய வேண்டிய நல்வாய்ப்பு வரும்போது, அதை எதிர்கொள்வதற்கான மனவளத்தையும் மதிநுட்பத்தையும் மனப்பண்பையும் இப்போதிருந்தே வளர்த்துக் கொள்ள வேண்டியதற்கான அவசியத்தைச் சுவாமிகள் வலியுறுத்தினார். நல்லது - கெட்டதையும் தர்ம நியாயங்களையும் நம் பண்டையச் சிறப்புப் பண்புகளையும் அறிந்துகொள்ளும் பொருட்டு 'ஹிதோபதேசக் கதைகள்', 'நீதி சாரம்', 'நன்னெறி நூல்கள்' போன்றவற்றைக் கற்றுணரும்படி அறிவுரை வழங்கினார்.

இறுதியாகச் சுவாமிகள் பாலசுப்ரமண்யனிடம் கூறியது மனதைத் தொடுவதாக அமைந்தது.

''என் பக்தாள்லே ரொம்ப பேர் ஆனந்தவிகடனைப் படிக்கிறா. அவாள்லாம் நல்ல சிந்தனைகளோட இருக்கணும்னு நான் ஆசைப்படறேன். அவா நல்லவாளா இருக்கணும்னா, அவா படிக்கிற பத்திரிகை நல்லதா இருக்கணும். பத்திரிகை நல்லதா இருக்கணும்னா, அதை நடத்தறவன் நல்லது – கெட்டது தெரிஞ்ச, பொறுப்புள்ளவனாயிருக்கணும். அதனாலேதான் தீபாவளி அன்னிக்கு உன்னைக் கூப்பிட்டுண்டு வரச்சொல்லி இத்தனையும் சொன்னேன்... க்ஷேமமா இருப்பா...''

தீபாவளி மலருக்கு ஆண்டுதோறும் ஆசிச்செய்தி தந்தருளும் பேரொளி, அப்புனித தினத்தில் அதன் வருங்கால ஆசிரியருக்குத் தனிப்பட்ட முறையில் அருளாசி வழங்கியது, அந்தப் பத்திரிகை பெற்ற கிடைத்தற்கரிய நற்பேறாகும். அருள் நிறைந்த இந்த மூலதனம்தான், பாலசுப்ரமணியனுக்குத் தார்மிகத் துணையாக நின்று, அவரையும் விகடன் குடும்பத்தையும் காத்து வருகிறது என்று திடமாக நம்புகிறேன். அதிகார அச்சுறுத்தலுக்கு அடிபணியாமல், மன்னிப்புக் கேட்க மறுத்துத் தலைநிமிர்ந்து நின்று, பத்திரிகைச் சுதந்திரத்தைக் காப்பதற்காகச் சிறைத்தண்டனையை ஏற்றுக்கொள்ளும் மனத்திண்மையை அவருக்குத் தந்து, அச்சோதனையில் உறுதுணையாக நின்றது, அந்தத் தார்மிகப் பலம்தான் என்பது என் தாழ்மையான கருத்து.

ஆனந்தவிகடன் மீதும் வாசன் அவர்கள்மீதும் பெரியவா பொழிந்த கருணையையும், ஆசிரியரும் சுவாமிகளின் அருட்கட்டளைகளைச் சிரமேற் கொண்டு தயங்காமல் நிறைவேற்றிய தன்மையையும் நேரில் அறியும் வாய்ப்புப் பெற்றிருந்தேன். அதேபோன்று பாலசுப்ரமணியன்மீதும் விகடன் மீதும் சுவாமிகள் தொடர்ந்து காட்டி வரும் நல்லெண்ணத்தையும் அன்பையும் பல சந்தர்ப்பங்களில் உடனிருந்து அறியும் வாய்ப்புக் கிடைக்கப் பெற்றுள்ளேன். இந்த அன்புப் பிணைப்பில் என்னையும் இணைத்து, பத்திரிகையோடு மட்டுமின்றி, ஆசிரியர் குடும்பத்தோடும் உள்ளத்தால் ஒன்றச்செய்து, நான் ஓய்வுபெற்ற பின்னரும், அந்தத் தொடர்பு விட்டுப்போகாமல் இருக்க அடித்தளங்கள் அமைத்துக்கொடுத்து, நேசமும் பாசமும் வளருவதற்கான நேரங்களை உருவாக்கி, 'உப்பிட்டவரை உள்ளளவும்' நினைக்கும் உயர் பண்பை உணர்த்தி, என் வாழ்வை உய்விக்கும் உத்தம குருவின் அன்புப் பிரவாகத்தை எவ்வாறு விவரிப்பேன்... அந்த அருட்பிரசாதத்தை எவ்வாறு விளக்குவேன்...

ஆசிரியர் வாசன் மறைவதற்கு மூன்றாண்டுகளுக்கு முன்னர், ஒரு நூறு ரூபாயின் மூலம் அவரது குடும்பத்தினர் மடத்துடன் கொண்டுள்ள தொடர்பை நிரந்தரமாக்கி, அந்தப் பணியில் எனக்கும் ஒரு அணிற் பங்கு அளித்தருளியதை முன்பு கூறியிருந்தேன். அடுத்து, பாலசுப்ரமணியனை ஆண்டுக்கு ஒரு முறையாவது நிச்சயமாகத் தரிசனத்துக்கு வருமாறு அமைத்துத் தந்த அற்புதத்தையும் இதிலும் என்னை ஒரு கருவியாக்கிக் கொண்ட அருட்கருணையையும் கூற விரும்புகிறேன்.

1969-ல் விகடனின் ஆசிரியர் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பாலசுப்ரமணியன் ஏறத்தாழ எட்டாண்டுக் காலம், தமது முழுக் கவனத்தையும் நேரத்தையும் விகடனுக்காகச் செலவழிக்க முடியாமல் நேர்ந்து விட்டது. அதற்குக் காரணம், தந்தையார் விட்டுச் சென்ற திரைப்படத்துறையையும் அவர் கவனிக்க வேண்டியிருந்ததுதான். ஆசிரியர் இலாகாவினருக்கு அவரது தலைமையும் வழிகாட்டலும் மிகத் தேவைப்பட்டதாக கருதிய நான், அவரைச் சந்திக்கும் போதெல்லாம், "தினமும் சிறிது நேரமாவது விகடன் அலுவலகத்துக்கு வந்து கவனிக்க வேண்டும்" என்று கேட்டுக் கொள்வேன். "சினிமா கடமைகளை முடித்துக்கொண்டு, சீக்கிரமாகவே முழுநேர ஆசிரியராக வந்து அமருகிறேன்" என்று அவரும் உறுதியளிப்பது வழக்கம்.

அந்தச் சந்திப்புகளின்போதெல்லாம், எனது ஆலயப் பயணங்களின் தொடர்பாகச் சுவாமிகளைத் தரிசித்த அனுபவங்களை எம்.டி-யிடம் (ஆசிரியர் பாலசுப்ரமணியனை அப்படித்தான் குறிப்பிடுவோம்) பகிர்ந்துகொள்வேன். விகடனைப் பற்றியும் அவரைப் பற்றியும் பெரியவா அவ்வப்போது விசாரிக்கும் செய்திகளைக் கூறுவேன். "முடிந்தபோது நீங்கள் ஒருமுறை வந்து பெரியவாளைத் தரிசித்தால் நலமாயிருக்கும்" என்று அழைப்பேன். அதற்கு அவர்,

''எனக்கும் அப்படித் தோன்றிக் கொண்டிருக்கிறது. சீக்கிரமே போய்விட்டு வருவோம்'' என்று கூறுவார். ஆனால், அந்த நன்னாள் தள்ளிக்கொண்டே போயிற்று. எல்லாவற்றையும் போன்று, பெரியவா தரிசனத்துக்கும் வேளை வந்தாக வேண்டுமே!

1977-ம் ஆண்டு ஜுன் மாதத்தில், 'எம்.டி-க்காக அலுவலகத்தில் ஓர் அறை தயாராகிக் கொண்டிருக்கிறது' என்று காதில் விழுந்த செய்தி தேனாக இனித்தது. ஜுலை மாதம் 4-ம் நாள் – அமெரிக்கா சுதந்திரம் பெற்ற தினத்தன்று – விகடன் அலுவலகத்தில் தமது நாற்காலியில் மீண்டும் வந்து அமர்ந்தார் ஆசிரியர். அன்று முதல் அலுவலகத்தில் புதியதோர் பரபரப்பும் புத்தம்புது நம்பிக்கையும் புதுப்புது லட்சியங்களும் குடியேறின. பத்திரிகையில் பல புதுமை மாற்றங்களும் தோன்ற ஆரம்பித்தன.

சில நாட்கள் கடந்ததும், சுவாமிகளைத் தரிசிக்கச் செல்வதைப் பற்றி நான் எம்.டி-யுடன் பேச்சுக் கொடுக்கத் தொடங்கினேன். இரண்டு மூன்று முறை நாட்கள் குறிக்கப்பட்டும் பயணம் தடைபட்டுப் போயிற்று.

1978-ம் ஆண்டு ஒரு நாள் என்னிடம் ''ஸ்ரீதர் சார், என்னிக்குக் காஞ்சீபுரம் போகலாம் சொல்லுங்கள். நான் அதற்கு ஏற்றமாதிரி என் 'ஓர்க்'கை அட்ஜஸ்ட் பண்ணிக்கொள்கிறேன். இந்த முறை நிச்சயம் போய்த் தரிசனம் செய்துவிட்டு வரலாம்'' என்று கூறினார்.

நான் சொன்னேன்: ''பெரியவா இப்போ காஞ்சீபுரத்திலே இல்லே. ஏப்ரல் மாசம் தமிழ்ப் புத்தாண்டு தினத்தன்று திடீரென்று யாத்திரை புறப்பட்டு விட்டார். எந்த வழியாகப் போகப் போகிறார், எங்கே போகிறார் என்பது யாருக்கும் தெரியவில்லையாம்...''

''அதனால் என்ன... ஒரு நாளை முடிவு செய்யுங்கள். அன்றைக்குப் பெரியவா எங்கே இருக்காளோ, அங்கேயே போய்த் தரிசனம் செய்துவிட்டு வந்து விடுவோம்'' என்றார் எம்.டி.

இரண்டு நாட்கள் கழித்து, எம்.டி-யுடன் பேசிக்கொண்டிருந்தபோது, ''சார், நாம ஜனவரி முதல் தேதி பெரியவாளைத் தரிசிப்போம். மனத்தில் அந்தப் பயணத்தை ஒரு லட்சியமாக வைத்துக்கொண்டு, ஒரு 'விரத'மாகவே இருந்து, அன்று தவறாமல் தரிசனம் செய்துவிட்டுவருவோம்'' என்றேன் நான்.

''ஓகே, ஜனவரி முதல் தேதி பெரியவா எந்த ஊரில் இருந்தாலும், அது எத்தனை மைல் தொலைவில் இருந்தாலும் நிச்சயமாகத் தரிசனத்துக்குப் போகிறோம்'' என்றார் எம்.டி. மிக உற்சாகத்துடன்.

**சு**வாமிகள் 1978-ம் ஆண்டு காஞ்சீபுரத்திலிருந்து பாதயாத்திரையாகப் புறப்பட்டுச் சென்று, ஆந்திரப் பிரதேசத்தின் வழியாக, வருட இறுதியில் கர்நாடக மாநிலத்தில் யாத்திரை செய்து கொண்டிருப்பதாகச் செய்தி வந்தது. மேலும் விசாரித்ததில், அவர் விஜயநகர சாம்ராஜ்யத்தின் தலைநகராக விளங்

கிய ஹம்பியில் முகாமிட்டிருப்பதாகவும், ஜனவரி முதல் தேதி நிச்சயமாக அங்குதான் இருப்பார் என்றும் அறிந்தேன். எம்.டி-யிடம் செய்தியைத் தெரிவித்தேன். முன்பே முடிவு செய்து, மனத்தளவில் அதற்கான 'விரதம்' ஏற்றிருந்தபடி, பயணம் மேற்கொண்டோம். டிசம்பர் 31-ம் தேதி இரவே ஹம்பிக்குச் சென்று விட்டோம்.

நல்ல மார்கழிக் குளிரில் ஆங்கிலப் புத்தாண்டு இனிதே பிறந்தது. ஹம்பியில் உறையும் அன்னை பவானிதேவி அருளும் பொருளும் வாரிவழங்க, அவற்றின் உதவி கொண்டு, விஜயநகர சாம்ராஜ்யத்தை நிறுவிய ஸ்ரீவித்யாரண்யரின் மடத்தில் எழுந்தருளியிருந்த பெரியவாளைத் தரிசிக்கக் காத்திருந்தோம். அதிகக் கூட்டமில்லை.

மௌனவிரதம் ஏற்று, சாந்தசொரூபியாக, கருணையே வடிவாக, ஞானசூரியனாக காட்சியளித்த சுவாமிகள் ஒரு கணம் தரிசனம் அளித்துவிட்டு அசாதாரண வேகத்துடன் 'விர்'ரென்று நடந்து சென்றுவிட்டார். தொண்டு



புரியும் தோழர்கள் பின்னால் ஓடவேண்டியிருந்தது. ஏதும் புரியாமல் அங்கேயே நின்றிருந்தோம்.

அடுத்த கணம், சென்ற வேகத்திலேயே திரும்பி, வேங்கையொன்று கம்பீரப் பாய்ச்சல் பழகுவது போல் ஒரு குகைக்குள் நுழைந்து, நுழைந்த சடுதியிலேயே மின்னலெனத் திரும்பி, சிங்கமென தோள் நிமிர்த்தி நின்றருளினார் சுவாமிகள்.

ஸ்ரீவித்யாரண்யர் தவமியற்றிய அந்தக் குகையின் வாயிலில் அசையாமல், ஆடாமல் சிலையென நின்ற ஆச்சாரிய சுவாமிகளின் திவ்விய வடிவம், குகையின் இருள் கப்பிய பின்னணியில், குகை முகப்பே ஃப்ரேமாக அமைய, ரவிவர்மா தீட்டிய வண்ண ஓவியமாகத் திகழ்ந்தது.

அதுவரை. நான் கண்டிராத தோற்றம். மௌனவிரதத்தில் பல்வேறு முகபாவங்களில் முனிபுங்கவரின் தரிசனம் அருளப் பெற்றிருந்தாலும், அன்று அந்த வடிவழகு அற்புதமானது, ஆனந்தமானது, வர்ணனைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டது.

ஈரேழு பிறவிகள் எடுப்பினும், ஈரேழு லோகங்களில் அலைந்து திரிந்தாலும் காணக்கிடைக்காத ஈடிணையற்ற தரிசனம் அது.

இருகரம் குவித்து, சிறு குரலெழுப்புவதும் குற்றமோவென அஞ்சி நாங்களும் ஆடாமல் அசையாமல், கருணைக்கங்கை பொங்கும் கண்களின் காந்த சக்தியில் கட்டுண்டு நின்றோம். பிரபஞ்சமே சலனம் மறந்து செயலிழந்து ஸ்தம்பித்துவிட்டது போன்ற பிரமை. அமைதி... அமைதி... அமைதி...

பிரபஞ்சம் மீண்டும் உயிர்த் துடிப்புடன் இயங்கத் தொடங்கியது. விண்வெளியில் சூரிய சந்திரர்கள் சஞ்சரிக்கத் தொடங்கினர். உயிரினங்கள் நடமாடத் தொடங்கின. எங்கும் பேச்சொலி கேட்டது. நானும் பேசினேன்:

''பெரியவா தரிசனத்துக்காக பாலசுப்ரமணியன் பல மாதங்கள் முயன்று, முடியாமல் கடைசியில் ஜனவரி முதல் தேதி எப்படியும் வந்துவிடுவது என்று முடிவு செய்து வந்தோம். அவருக்குப் பெரியவா அனுக்கிரகம் எப்போதும் இருக்க வேண்டும்..''

எம்.டி. ஒன்றும் பேசவில்லை. அவர் உள்ளம் பேசியது; அது சுவாமிகளுக் குக் கேட்டிருக்கும்.

உன்னத தரிசனம் உள்ளத்தை நிறைக்க, ஸ்ரீகண்டன் அளித்த சூடான, சுவை யான மார்கழிப் பொங்கல் வயிற்றை நிரப்ப, நாங்கள் உத்தரவு பெற்றுக் கொண்டோம்.

சென்னை திரும்பியதும், எம்.டி-யிடமிருந்து இல்லத்துக்கு போன் வந்தது. சாதாரணமாக நிதானத்துடன் பேசும் அவரது குரலில் முதன் முறையாக ஓர் உணர்ச்சிப் பூரிப்பைக் கேட்டேன்.

''ஸ்ரீதர் சார், ஒரு அதிசயம் நடந்திருக்கு... ஊருக்கு வந்ததும் அம்மாவிடம் ஹம்பியில் நடந்ததையெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தேன். அம்மா குறுக்கிட்டு, 'நீ புறப்பட்டுப் போனப்புறம் காலண்டரைப் பார்த்துக் கொண் டிருந்தேன். ஜனவரி ஒண்ணாந்தேதி உன் நட்சத்திரம். மார்கழிலேதானே பிறந்தே. உன் ஜன்ம நட்சத்திரத்தன்னிக்குப் பெரியவா தரிசனம் கிடைச்சது ரொம்ப விசேஷம்..'னு சொன்னா. இது பிரமாத Coincidence இல்லியா... நினைச்சா த்ரில்லிங்கா இருக்கு..'' என்று மகிழ்ச்சியும் ஆச்சரியமும் பொங்கக் கூறினார்.

அன்று அலுவலகத்திலும் இந்த அற்புத நிகழ்ச்சியைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தோம். புத்தாண்டு நல்லபடியாகத் தொடங்கட்டுமே என்று ஜனவரி முதல் தேதி செல்வதென நான் முடிவு செய்ய, அந்த நாள் எம்.டி. பிறந்த நட்சத்திரமாக அமைந்துவிட்டதைச் சாதாரண ஒரு Coincidence-ஆக எண்ணுவது இயல்புதான். இருப்பினும் இதில் ஓர் அனுக்கிரக உட்பொருள் புதைந்துள்ளதை எம்.டி-யின் உள்மனம் உணர்த்தியிருக்க வேண்டும்.

''இனி ஒவ்வொரு மார்கழி மாசமும் ஜன்ம நட்சத்திரத்தன்று பெரியவா எங்கிருந்தாலும் போய்த் தரிசித்துவிட்டு வரவேண்டும் என்று எனக்குத் தோன்றிவிட்டது. வேறு எந்த முக்கியப் பணியாயிருந்தாலும் ஒதுக்கி வைத்து விட்டு, இந்தத் தரிசனத்துக்கு முன்னுரிமை அளிப்பது என்று முடிவு செய்துவிட்டேன். நீங்களும் என்னுடன் வரவேண்டும்'' என்றார் எம்.டி.. அந்த உணர்ச்சிப் பெருக்கில் என் கண்கள் கலங்கின.

நம் உள்ளங்களை நாம் அறியாமலே மாற்றியமைத்து, நம்மை நல்வழியில் அழைத்துச் செல்லும் அருட்கருணையைவிட வியப்புக்குரிய அற்புதம் வேறு இருக்க முடியுமா?

1979 ஜனவரி முதல் தேதி தொடங்கிய ஜன்ம நட்சத்திரத் தரிசனம், ஆவலுடன் எதிர்பார்த்து ஆர்வத்துடன் பயணம் மேற்கொள்ளும் புண்ணியமிகு வருடாந்திர நிகழ்ச்சியாகிவிட்டது. ஹம்பியில் தொடங்கியது பெல்காம், உகார், சதாரா, துல்ஜாப்பூர், குல்பர்கா, ராயச்சோட்டி என்று சுவாமிகள் யாத்திரை சென்ற இடங்களெல்லாம் தொடர்ந்தது. 1984-ம் ஆண்டு சுவாமிகள் மீண்டும் காஞ்சீபுரம் திரும்பியது முதல், இந்த வருடாந்திர தரிசனம் விடாமல் நடந்தேறி வருகிறது. (ஓராண்டு, என்னால் உடன் செல்ல முடியாமற் போயிற்று. ஓராண்டு, உடல்நிலை காரணமாக எம்.டி-யால் வர இயலவில்லை. அந்த நாளன்று திருமதி பாலசுப்ரமணியனையும், குமாரர் சீனிவாசனையும் தரிசனத்துக்கு அழைத்துச் செல்லுமாறு என்னைப் பணித்தார்.)

பொதுவாக ஜன்ம நட்சத்திர தரிசனங்கள் மௌனமாகவே நடைபெறுவது வழக்கம். எடுத்துச் செல்லும் காணிக்கைகளை சுவாமிகளின் பாதங்களில் சமர்ப்பித்துவிட்டு, நமஸ்கரித்து எழுந்து கைகூப்பி நிற்பார் எம்.டி. எதுவும் பேச மாட்டார். அவராகவே எதுவும் கேட்கவும் மாட்டார். பெரியவா ஏதாவது கேட்டால் பதில் சொல்லுவார்.

வெளியூர்களில் தரிசித்தபோது, ஓரிரு இடங்களில் பொது விஷயங்கள் பற்றிச் சுவாமிகள் பேசியதுண்டு. ஒருசமயம், இந்திராகாந்தி தேனம்பாக்கத்தில் தம்மைத் தரிசிக்க வந்ததைப் பற்றி எங்களிடம் விரிவாக எடுத்துரைத்தார். பத்திரிகைகளில் வந்த செய்திகளைப் பற்றி முதலில் எங்களிடம் விசாரித்து விட்டு, காதில் விழுந்த செய்திகளையும் கேட்டுத் தெரிந்து கொண்டுவிட்டு, கடைசியில் அன்று என்ன நடந்தது என்பதை விடியோ படம் பார்ப்பது போல் அப்படியே விவரித்துவிட்டு, ''இதுதான் நடந்தது. உங்களுக்குத் தெரிந்திருக்கட்டும் என்று சொன்னேன்'' என்று கூறியருளினார்.

ஒரு வருஷம் காஞ்சீபுர தரிசனத்தின்போது, ''எத்தனை வருஷமா வந்திண்டிருக்கே?'' என்று எம்.டி-யிடம் கேட்டார் சுவாமிகள். கணக்குச் சற்றுத் தவறிய போது, அதைத் திருத்திச் சொல்லி, எந்தெந்த ஊர்களுக்கு வந்து தரிசனம் செய்தார் என்பதையும் நினைவுபடுத்தினார் சுவாமிகள்.

1989-ம் ஆண்டு தரிசனத்தின்போதுதான் நான் உடன் செல்ல முடியவில்லை. அந்த ஆண்டு தமக்கு மிகப் புதுமையான அனுபவம் ஏற்பட்டதாக காஞ்சீபுரத்

திலிருந்து வந்ததும் என்னிடம் பரவசத்துடன் விவரித்தார் எம்.டி.

பெரியவா தள்ளாடித் தள்ளாடி நடந்து வந்து, ஸ்ரீசந்திரமௌலீச்வரர் சந்நிதி மண்டபத்தில் அமர்ந்து, எம்.டி-யையும் குடும்பத்தினரையும் அருகில் வரச்சொல்லி பத்துப் பதினைந்து நிமிடங்களுக்கு மேல் பேசிக் கொண்டிருந்தாராம். அச்சமயம், தமக்கு உடல்நிலை சரியில்லையென்றும், பார்வை மங்கி வருவதாகவும், காது மந்தமாகி வருவதாகவும் கூறினாராம். இறுதியில் ஒரு பழத்தைப் பிரசாதமாகக் கொடுத்து அபய ஹஸ்தத்தை உயர்த்தி 'க்ஷேமமா இருங்கோ' என்று ஆசி வழங்கியதாக நா தழுதழுக்க விவரித்தார். அதுவரை எந்த ஆண்டும் இப்படி விடைகொடுத்து அனுப்பாதவர் இம்முறை இவ்வாறு உத்தரவு கொடுத்ததற்கு உட்பொருள் ஏதாவது இருக்குமோ என்ற கேள்வி அவர் உள்ளத்தை நெருடிக் கொண்டிருந்ததை மிகுந்த வேதனையுடன் கூறினார்.

அடுத்த ஆண்டு தரிசனத்துக்குச் சென்றபோது, சுவாமிகள் மோனத்தவத்தில் நிலைத்து, ஞானப்பழமாக, மௌன குருவாக, பரப்பிரும்மமாக, நடப்பவற்றுக் கெல்லாம் ஒரு சாட்சி பூதமாக அமர்ந்து தரிசனம்தந்து கொண்டிருந்தார். 'கடந்த ஆண்டு எம்.டி. உள்ளத்தில் எழுந்த கேள்விக்குறிக்கு மாறிய இந்த நிலைதான் விடையாயிருக்குமோ' என்று நான் நினைத்துக் கொண்டேன்.

தந்தையை காளஹஸ்திக்கு வரும்படி என்னிடம் சொல்லியனுப்பினார். மகனை ஒரு தீபாவளியன்று அழைத்து வரும்படி என்னைப் பணித்தார். பேரப்பிள்ளையை நானே பெரியவாளிடம் அழைத்துச் சென்றேன்.

*1991*-ம் ஆண்டு ஏப்ரலில் ஒருநாள் எம்.டி. தொலைபேசியில், ''ஸ்ரீமடத்தின் சார்பில் காஞ்சீபுரத்தின் அருகிலுள்ள ஏனாத்தூரில் தொடங்கப்பட்டிருக்கும் ஸ்ரீசந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகள் விஸ்வ மகாவித்யாலயாவுக்கு வாசன் அறக்கட்டளையிலிருந்து ஒரு லட்ச ரூபாய் நன்கொடை கொடுக்க முடிவு செய்திருக்கிறேன். அதற்கான ட்ராஃப்ட்டை ராஜாவிடம் (தற்போது ஜே.எம்.டி-யாக இருக்கும் மகன் சீனிவாசன்) கொடுத்து உங்களிடம் அனுப்பு கிறேன். அவரை அழைத்துக்கொண்டு காஞ்சீபுரம் சென்று அதை ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளிடம் சேர்ப்பித்துவிடுங்கள்'' என்று கூறினார்.

சென்றோம். ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளிடம் சமர்ப்பித்தோம். மகிழ்ச்சி பொங்க, சீனிவாசனுக்கு சால்வை போர்த்தச் செய்து ஆசீர்வதித்தார்.

''சீனிவாசனை அழைத்துச் சென்று ட்ராஃப்ட்டைப் பெரியவாளிடமும் சமர்ப்பிக்க விரும்புகிறேன்...'' என்றேன்.

''அவசியம், இப்பவே போங்கள். பெரியவா தரிசனம் கொடுத்துண் டிருக்கா.''

பெரியவா அங்க அசைவுகளற்ற காஷ்ட மௌன நிலையில் இருக்கையில் அமர்ந்திருந்தார்.

''வாசன் பேரன் சீனிவாசன், ஏனாத்தூர் மகாவித்யாலயத்துக்கு லட்ச ரூபாய் நன்கொடை கொண்டு வந்திருக்கார். அப்பாவின் அறக்கட்டளையி லிருந்து பாலசுப்ரமணியன் கொடுத்து அனுப்பி இருக்கார்'' என்று கூறி, அந்த ட்ராஃப்ட்டைக் கொடுத்து அனுப்பினேன்.

பெரியவா அதை வாங்கிப் பார்த்தார். உள்ளத்தில் பூரித்த மகிழ்ச்சி, ஆனந் தச் சிரிப்பாய் மலர்ந்து மங்கலமாய் விரிய, திருக்கரங்கள் உயர்த்தி வாரி வாரி வழங்கும் வள்ளலாய் வாழ்த்தியருளினார்.

என் உள்ளத்தில் எண்ணம் ஒன்று எதிரொலித்தது. 'இருபத்தைந்து ஆண்டு

களுக்கு முன் காளஹஸ்தியில் தரிசனம் செய்து திரும்பிய வாசன் அவர்கள், 'பெரியவா லட்ச ரூபாய் கேட்பார் என்று எதிர்பார்த்தேன்' என்று என்னிடம் கூறினாரே, அன்று வாசன் அவர்கள் எதிர்பார்த்தபடி, இப்போது வாசன் அறக்கட்டளையிலிருந்தே, பேரன் மூலமாகவே பெரியவா அந்த லட்ச ரூபாயை ஏற்றுக்கொண்டு விட்டாரே!'

மூப்பத்தைந்து வருடங்களுக்கு முன் மயிலை சம்ஸ்கிருதக் கல்லூரியில் பெரியவா தங்கியிருந்த நாட்கள் நினைக்க நினைக்க இனிப்பவை. நெஞ்சம் மறவா நிமிடங்கள் பலப்பல...

பாட்டனார் அன்புடன் அரவணைத்து, பாசத்தைப் பொழிந்துகூறும் பழைய நிகழ்ச்சிகளைக் கேட்டு மகிழும் வாய்ப்பைப் பெறாமலே வளர்ந்தவன் நான். அந்தக் குறையைப் போக்குவதைப் போல், பெரியவா அவ்வப்போது பழைய நிகழ்ச்சிகளை எனக்கு எடுத்துக் கூறுவார். சிலவற்றை 'உனக்கு இதெல் லாம் தெரிந்திருக்காது. என்ன நடந்ததுன்னு சொல்றேன்' என்ற முன்னுரை யோடு கூறுவார். சிலவற்றைக் கூறிமுடித்துவிட்டு, 'இதெல்லாம் உனக்குத் தெரிந் திருக்கட்டும்னு சொன்னேன்' என்பார்.

சிலவற்றைக் கூறும்போது முன்னுரையும் இருக்காது, பின்னுரையும் இருக்காது. திடீரென்று தொடங்குவார். 'இதை எதற்காக நம்மிடம் கூறுகிறார்?' என்று யோசித்துக் கொண்டிருக்கும்போதே யாராவது குறுக்கிடுவார்கள். கவனம் திசை மாறும். அதன் தொடர்பான பேச்சில் ஈடுபட்டு விடுவார். தொடங்கிய 'டாப்பிக்' பாதியில் நின்றுவிடும். 'அன்றைக்கு அவ்வளவுதான் பிராப்தம்' என்று நான் சமாதானம் அடைவேன்.

சம்ஸ்கிருதக் கல்லூரியில் மட்டுமல்ல, சென்னையில் பெரியவா தங்கிய பேட்டைகளிலெல்லாம் இரவில் ஸ்ரீமடத்தில்தான் எனக்கு வாசம். அலுவலகத்தி லிருந்து மாலை ஸ்ரீமடத்துக்கு வந்துவிட்டால், மறுநாள் காலைதான் வீடு திரும்புவேன். காலை பத்து மணி முதல் மாலை வரையில் விகடன் அலுவலகம். அங்கிருந்து நேரே ஸ்ரீமடம். பெரியவாளுடன் வீதிவலம். திரும்பி ஸ்ரீமடத்துக்கு வந்ததும், பூஜையை அரைகுறையாகப் பார்ப்பது. தொலைவில், தென்னை மரத்தடியில் அமர்ந்து ஸ்ரீமடத்தில் தொண்டு புரியும் அன்பர்களிடம், பெரியவாளைப் பற்றிய பழைய நிகழ்ச்சிகளைக் கேட்டு அறிந்து கொள்வது. நடுவில் ஊர்க்கதை, பாலிட்டிக்ஸ், சுவையான வம்புப்பேச்சும் இருக்கும். பூஜைக்குப் பின்னர், பெரியவா உபந்யாசத்தைக் கவனமாகக் கேட்பது. அது முடிந்த பின்னர், தரிசனத்துக்கு வந்தவர்களுடன் பெரியவா பேசும்போது, சற்று ஒதுங்கி நின்று காதைத் தீட்டிக்கொண்டு கேட்டுக் கொண்டிருப்பது. பெரியவா, நான் அங்கு நிற்பதைக் கவனிப்பார். 'விரட்டப் போகிறார்' என்று எதிர்பார்த்து, ஓடி மறைவதற்குத் தயாராயிருப்பேன். ஆனால், 'இருக்கக் கூடாது' என்று நானே அங்கிருந்து நகர்ந்திருக்கிறேனே தவிர, 'நீ ஏண்டா இங்கே நின்னுண்டிருக்கே... உன் வேலையைப் போய்ப் பார்' என்று பெரியவா ஒருமுறை கூடக் கூறியதில்லை.

வேதாந்தத் தாகத்துடனும் ஆன்மீகப் பிரச்னைகளுடனும் வெளிநாட்டினர் வருவார்கள். பல கேள்விகள் கேட்பார்கள். பெரியவா கூறும் பதில்களை மிகக் கவனமாகக் கேட்பேன். ஒரு சமயம், யாரோ ஒருவர் சந்தேகங்களையெல்லாம் தீர்த்துக் கொண்டு கடைசியாக, 'நான் சுவாமிகளை மறக்கவே கூடாது. நான் நினைச்சப்பெல்லாம் நீங்க எனக்கு வந்து அனுக்ரஹம் பண்ணணும்...' என்று ஆங்கிலத்தில் கேட்டுக் கொண்டார். அதற்குப் பெரியவா, 'இவரைத் தினம் ஒரு நல்ல காரியம் பண்ணச் சொல்லு. அப்பல்லாம் நான் அங்கே இருப்பேன்னு சொல்லு' என்றார் மொழிபெயர்ப்பாளரிடம்.

சில சமயங்களில் மொழிபெயர்ப்பாளர், பெரியவா கூறியதைத் தவறாக மொழிபெயர்த்துச் சொல்வார். 'நான் சொன்னது அது இல்லே...' என்று கூறி, அதற்குச் சரியான ஆங்கில வார்த்தையைப் பெரியவா எடுத்துச் சொல்வார். சில நேரங்களில் முழுக் கருத்தையும் அவர் ஆங்கிலத்திலேயே சொன்னதையும் கேட்டிருக்கிறேன்.





பக்தர்களின் தரிசனங்கள் முடிந்த பின்னர் பெரியவா, மடத்துச் சிப்பந்திகளை அழைத்து ஸ்ரீமடத்து விஷயங்களைப் பற்றி விசாரிப்பார். அன்றோ, முதல் நாளோ நடைபெற்ற நிகழ்ச்சியைப் பற்றி விசாரணை தொடங்கும். உண்மையை மறைக்கப் பார்ப்பவர்களின் சாமர்த்தியத்தையெல்லாம் அறிந்து கொண்டு, மாறி மாறிக் கேள்விகள் கேட்டு, அந்த நபரின் வார்த்தைகளாலேயே அவரை மடக்கி, உண்மையை ஒப்புக்கொள்ள வைத்து, கண்ணீர் சிந்தி அவர் மன்னிப்புக் கேட்டதும் அன்புத்தெய்வம், ''இனிமே அப்படிச் செய்யாதே, போ...'' என்று கூறியதையும் கேட்டிருக்கிறேன்.

இரவு மணி பத்து, பதினொன்று ஆகிவிடும். பெரியவா உள்ளே சென்று படுத்துக் கொண்டுவிடுவார். சில நாட்களில் பேசிக்கொண்டிருந்த இடத்திலேயே வஸ்திரத்தை விரித்துச் சயனித்து விடுவார். சில நாட்கள், மேனாவில் (சிறு பல்லக்கு) அமர்ந்து யாருடனாவது தனிமையில் பேசிக்கொண்டிருந்து விட்டுக் கதவைச் சாத்திக்கொண்டு அதிலேயே படுத்துக்கொள்வதும் உண்டு.

சில நாட்கள் பெரியவா படுத்துக்கொள்ளும்போது பன்னிரண்டு, ஒரு மணிகூட ஆகிவிடும். அந்த நேரத்தில்கூட கண்ணன், பாட்டு ராமமூர்த்தி இருவருடன் நானும் நின்று கொண்டிருப்பேன். நல்ல கோடையில், இலைகூட அசையாமல் 'கணகண'வென்றிருக்கும். நாங்கள் பெரிய விசிறியை எடுத்து மாறிமாறிச் சேவை புரிவோம். சில சமயம் ''நாழியாறது, படுத்துக்கப் போங்கோ...'' என்று கூறுவார். சிலசமயம் பேசிக்கொண்டிருக்கும்போதே உறங்கிவிடுவார். நாங்கள் சற்றுத் தள்ளி, துண்டை விரித்துப் படுத்து விடுவோம்.

ஆனால், எந்தக் கணமும் நாம் எழுந்திருக்கத் தயாராயிருக்க வேண்டும். திடீரென்று ஸ்ரீமடத்தின் நிசப்தத்தைக் கிழித்துக்கொண்டு, கட்டைவிரலையும் நடுவிரலையும் மடித்துச் சொடுக்கும் ஒலி எழும்பும். ஆழ்ந்த உறக்கத்திலிருப்பவர்களையும் அந்த ஒலி எழுப்பிவிடும்.

பழக்கப்பட்டவர்களுக்கு 'யாரையோ பெரியவா எழுப்புகிறார்' என்பது தெரிந்துவிடும். இவ்வாறு நானும் சில நாட்கள் எழுப்பப்பட்டிருக்கிறேன். மணி இரண்டரை, மூன்று இருக்கும். அந்நேரத்திலும் பெரியவா செய்திகள் கூறுவார்.

'கொட்டகை'க்குச் செல்லும்வரை அந்தப் பேச்சு நீடிக்கும். பின்னர், மறைவிடத்தில் பல்துலக்கும் போதும் கைங்கரியம் செய்பவர்களிடம் ஏதாவது கேள்விகள் கேட்டுக் கொண்டிருப்பார். வெளியே நிற்பவர்களுக்கு, அந்தப் பிரும்ம முகூர்த்த வேளையில் அந்தச் சன்னமான – இனிமையான குரல் கேட்கப் பிரும்மானந்தமாக இருக்கும்.

'ஒரு மணி ஜப'த்துக்கு அமரும்வரைகூட, விடியற்காலை விச்வரூப தரிசனத்துக்கு வருபவர்களுடன் சுவாமிகள் பேசிக்கொண்டிருப்பதை நான் பார்த்திருக்கிறேன். அந்தச் சமயங்களில், சில மகத்தான திட்டங்கள் உருவாகியிருக்கின்றன. செயல்முறைகள் பற்றிய ஆலோசனைகளும், ஆட்சேபங்களும் முடிவான தீர்ப்புகளும் இடம் பெற்றிருக்கின்றன.

**அ**ன்று உற்சவமூர்த்தியாய், நெருங்குதற்கு எளியவராய், கண்டும் கேட்டும் பேசியும் மகிழ்ந்த அந்தப் பொன்னான நாட்களை, நினைத்தாலே புளகாங்கிதம் பொங்கும் நேரங்களை, மாணிக்கப் பேச்சுகளின் மகோன்னதங்களை அசைபோட்டுக் கொண்டிருக்கும்போதே, இன்று காஞ்சியில் மௌனத்தாலேயே கடாட்சித்தருளும் ஸ்ரீதட்சிணாமூர்த்தியாய், அன்புக்கோர் அமுதக்கடலாய், கருணைக்கொரு கருவறை மூலவராய் எழுந்தருளும் திருக்கோலத்திலும், அலகிலா திருவிளையாட்டின் மகிமையிலும் மெய்ம்மறந்து, மெய்யுருகி நம் தனித்தன்மை கரைந்து, அகிலமெங்கும் ஒரே பொருளாய் நிரம்பி, ஏகப்பிரும்மமாய் நிறைந்து...

மீண்டும் சம்ஸ்கிருதக் கல்லூரிக்குச் செல்வோம்.

ஸ்ரீமடம் உறங்கிவிட்ட நேரம்... பெரியவா எதிரில் நான் மட்டும்...

"நான் பட்டத்துக்கு வந்த புதுசு... மடத்துல பணமே இல்லே... கடன்ல இருந்தது. நான் ஒரு நாள் சந்திரமௌலீச்வரர் பூஜைக்காக ஒக்கார்ந்தேன். பூஜை ஆரம்பிக்கப் போற சமயம், 'ஓய்.. பிராம்மணா'ன்னு ஒரு குரல் கேட்டுது. திரும்பிப் பார்த்தேன். வயசான அம்மா ஒருத்தி நின்னுண்டிருந்தா. 'என்ன?'ன்னு கேட்டேன். 'என் பணத்தைக் கீழே வெச்சுட்டுப் பூஜை பண்ணுங்கோ'ன்னா... ரொம்பக் கோவமா இருந்தா.

'என்ன பணம்?'

'நான் மடத்துக்குக் கடனா குடுத்த பணம். எத்தனை மாசமா காத்திண்டிருக்கிறது? கேட்டுக் கேட்டு எனக்கு அலுத்துப் போயிடுத்து. இன்னிக்கு விடப்போறதில்லே... சால்ஜாப்பு சொல்லிப் பிரயோஜனமில்லே... பணத்தை எண்ணிக் கையிலே குடுத்துட்டுப் பூஜைக்கு ஒக்காருங்கோ...' – பெரிசா சத்தம் போட்டா.

எனக்கு என்ன பதில் சொல்றதுன்னே புரியலே... அந்த அம்மா, என்னை பூஜை பண்ண விடமாட்டாப்போலத் தோணித்து. 'பணத்துக்கு ஏற்பாடு பண்றேன்... நீங்க கடன் குடுத்ததுக்குப் பத்திரம், தஸ்தாவேஜு ஏதாவது இருக்குமில்லையா? அதை எடுத்துண்டு அப்புறம் வாங்கோ'ன்னு சொல்லி வெச்சேன்... பதில் பேசாம அந்த அம்மா புறப்பட்டுப்போயிட்டா..."

**வே**றொரு நாள்... இரவு வேளைதான். பெரியவா பட்டத்துக்கு வந்த அடுத்த வருடம் (*1908*)... திருவானைக்கா அகிலாண்டேச்வரி ஆலயத்தின் தாடங்கப் பிரதிஷ்டை – கும்பாபிஷேகம் நடந்தேறிய அசாதாரணச் சூழ்நிலையை, நேரில் காண்பது போல் விவரித்தார்.

"நான் ஒரு சின்னப் பல்லக்கில் போயிண்டிருந்தேன்... ரொம்பப் பக்கத்துலேயே சிருங்கேரி மடம் ஸ்ரீநரசிம்மபாரதி சுவாமிகளும் பெரிய பல்லக்கில்

வந்துண்டிருந்தார். நான் இத்துனூண்டு பையன். சுவாமிகளோ பெரியவர். அவர் எப்படியிருக்கார்னு பார்க்கணும்னு எனக்கு ஆசையாயிருந்தது. மெள்ளத் திரும்பிப் பார்த்தேன். அதே சமயம், அவரும் என்பக்கம் திரும்பினார். பார்க்க ஜோரா, கம்பீரமாயிருந்தார். அவரை அவ்வளவு கிட்டே பார்த்த காட்சி எனக்கு இப்பக்கூட நன்னா ஞாபகம் இருக்கு..."

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் நடந்த அந்த நிகழ்ச்சியைத் தத்ரூபமாக நடித்துக்காட்டினார். மேலும் தொடர்ந்தார்:

"அப்புறம் மடத்துலே இருந்த பெரியவர்கள் என்னை உள்ளே அழைச்சுண்டுபோய் அகிலாண்டேச்வரிக்குப் பக்கத்துல ஒரு மூலைலே ஒக்கார வெச்சுட்டா. ஒரே இருட்டு... அந்த இடத்தை விட்டு நகரவே கூடாதுன்னுட்டா... ரொம்ப நாழி ஒக்காந்திண்டிருந்தேன். காற்றோட்டமே இல்லே... வேர்த்து வேர்த்துக் கொட்டித்து... ஒரே பசிவேற... எப்பக் கும்பாபிஷேகம் முடிஞ்சு, எப்ப வெளியே வரப்போறோம்னு ஆயிடுத்து எனக்கு..." – சொல்லி விட்டுக் கடகடவென்று சிரிக்கிறார்.

மற்றொரு நாள்... நடுநிசி.

"சாக்கியார் கூத்துன்னு கேள்விப்பட்டிருக்கியோ?"

"இல்லே..."

ஒரு நிமிஷம் மௌனம். சிறு வெண்தாடியை வருடியவாறு யோசித்தபடி அமர்ந்திருந்தார். நான் ஆவலோடு காத்துக் கொண்டிருந்தேன்.

**சா**க்கியார் கூத்தைப் பற்றி தொடர்வதற்குள் ஓர் பிரளய கால ஊழிக் கூத்தே நடந்து முடிந்து விட்டது.

நூற்றாண்டு பிறந்த தின வைபவமாக கடந்த மே மாதம் கனகாபிஷேகக் காட்சியருளி, கோடிக்கணக்கான பக்தர்களின் நெஞ்சங்களைக் குளிர்வித்த பெரியவா, ஒரே நொடியில் தமது சரீர உடையை உதறிவிட்டு நம் கண்களிலிருந்து மறைந்து விட்டார்.

1994-ம் ஆண்டு ஜனவரி 8-ம் தேதி – சனிக்கிழமை – பிற்பகல் 2.58 மணிக்கு, உத்தராயண புண்ணியகாலத்தில், சர்வ ஏகாதசிகூடிய புனிதநாளில் – பெரியவா மகா சமாதியடைந்துவிட்ட செய்தி ஊரெங்கும், நகரங்கள் எங்கும், கிராமங்கள்தோறும், நாடு முழுவதும், உலகம் பூராவும் எட்டிவிடுகிறது. கோடிக்கணக்கானவர்களின் நெஞ்சங்கள் பதறித் துடித்தன. கண்ணீர் பொங்கிப் பொங்கிப் பெருகியது. பாசத்தை வளர்த்துக்கொண்டு விட்ட பக்தகோடிகள் குமுறிக் குமுறி அழுதார்கள்.

"பெரியவா என்னை அநாதையா விட்டுட்டுப் போயிட்டாளே..."

"திடீர்னு இப்படி ஏமாத்திட்டுப் போயிட்டாரே..."

''இனிமே பெரியவாளைத் தரிசனம் பண்ண முடியாதே... அந்தக் கருணை வடிவத்தைக் காண முடியாதே... அன்புச் சிரிப்பைப் பார்க்க முடியாதே... அமுதப் பேச்சைக் கேட்க முடியாதே...''

''அப்பா அம்மா போனப்ப, ஆறுதலுக்குப் பெரியவாகிட்டே ஓடிவந்தேன். இப்ப பெரியவாளே போயிட்டாளே, யாருகிட்டே போவேன்?''

''பெரியவாளுக்கு முன்னாலே நான் போயிடணும்னு பிரார்த்தனை பண்ணிண்டிருந்தேன். என்னாலே யாருக்கு என்ன பிரயோஜனம்? பெரியவா இருந்தா உலகத்துக்கே க்ஷேமமாச்சே...''

''நான் கொடுத்து வெச்சவன் சார்... பெரியவா மௌன விரதம் ஏற்பதற்கு முன்னே, ஒரு நாள் தரிசனத்துக்குப் போயிருந்தேன். நிறையப் பேசினா, அமோகமா அனுக்கிரகம் பண்ணினா... இப்படியே பேசாம ரொம்ப நாள் உட்கார்ந்திருப்பானு நினைச்சேனே, மோசம் போயிட்டேனே...''

''பெரியவாளைத் தவிர எனக்கு வேறு யாரையும் தெரியாதே... நாற்பது வருஷமா பெரியவா கூடவே இருந்து தொண்டு பண்ணினேன்... எவ்வளவு பேசியிருக்கா... ஒரு தரம் என்னைக் கோவிச்சுண்டுட்டா... 'ஏண்டா, உன்னை ரொம்பக் கோவிச்சுண்டுட்டேனா? வருத்தமா இருந்ததா?'ன்னு அடுத்த நிமிஷமே குழந்தை மாதிரி விசாரிச்சாளே... என்னைக் கோவிச்சுக்க இப்பப் பெரியவா இல்லியே...''

''பெரிய எசமான் உள்ளே படுத்துண்டிருக்காங்கன்னு ஒரு தைரியம் இருந்தது்க.. எட்டிப் பார்த்தா அவங்க இருக்க மாட்டாங்களே...''

''தெய்வம் என்னைத் தனியா விட்டுட்டுப் போயிடுச்சுங்க... உலகமே இருளோன்னு இருக்குதே...''

– இப்படிப் பலவாறு பல்வேறு தரப்பட்ட பக்தர்கள் கதறிக் கதறித் தீர்த்து விட்டனர். தன் தாய், தந்தை, குழந்தை, நெருங்கிய உறவினர் – இவர்களை இழந்து விட்டவர்கள் போல் என்னிடம் தேம்பித் தேம்பி அழுதனர். என் சொந்தத் துயரத்தை உள்ளடக்கி, பொங்கிய கண்ணீரைத் தேக்கி நிறுத்தி, அவர்களுக்கு ஆறுதல் வார்த்தைகள் சொல்லித் தேற்றிக் கொண்டிருந்தேன்.

என்னால் தேற்ற முடியாமல் போனது – அந்த ஆறு வயது சிறுமியைத்தான்.

''எனக்கு மூணு வயசு இருக்கிறப்போ பெரியவா கல்கண்டு கொடுத்தா. அதுக்கப்புறம் நான் பெரியவாளைப் பார்க்கவேயில்லை. அழைச்சுண்டு போன்னு அப்பாகிட்டே எத்தனையோ தரம் சொன்னேன். அழைச்சிண்டே போகலே. இப்போ சாமிகிட்டே போயிட்டாரே... நான் இனிமே பெரியவாளை எப்படிப் பார்க்கறது?'' என்று அந்தச் சிறுமி கண்கலங்கியபோதுதான், எப்படி அவளைத் தேற்றுவது என்று கலங்கிப் போனேன்.

ஜனவரி முதல் தேதியன்று பத்து நிமிடங்கள் மட்டுமே பெரியவா தரிசனம் இருந்திருக்கிறது. அதற்குப் பிறகு பொது தரிசனமே இல்லை. உடல்நிலை சரி இல்லை. வைத்தியர்கள் அருகிலேயே இருந்து தேவையான சிகிச்சைகள் அளித்துக் கொண்டிருந்தனர்.

8-ம் தேதி, சனிக்கிழமையன்று உடல்நிலை தேறியது. ஈச்சங்குடியில் வாங்கி உள்ள பெரியவாளின் பூர்வாச்ரம தாயாரின் இல்லத்தில் வைப்பதற்காகத் தயாரான அப்பா – அம்மா படங்கள் அவரிடம் காட்டப்பட்டது. அதைச் சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்.

பாலுவிடம், "நீ கலவையைப் பார்த்திருக்கியோ... அங்கே போயிருக்கியோ?" என்று கேட்டிருக்கிறார்.

எதற்குத் திடீரென்று கலவையை நினைத்துக் கொண்டாரோ?

யாரோ ஒருவர் தரிசனத்துக்கு வந்தார். "சௌக்கியமா இருக்கேளா?" என்று உரத்த குரலில் கேட்டிருக்கிறார். "பெரியவாளோட பழைய குரல் மாதிரி இருந்தது. எங்களுக்கெல்லாம் ஆச்சரியமாகப் போய்விட்டது..." என்றார் திருக்களாவூர் ராமமூர்த்தி.

'பிரும்மஸ்ரீ சாஸ்திரிகள்' என்று பெரியவா பெயரிட்ட வேதபுரியைப் பார்த்து, "கையில் என்ன?" என்று கேட்டாராம். "பெரியவாளோட மரக் குவளை... அலம்ப எடுத்துண்டு போறேன்..." என்று பதில் கூறிவிட்டுப் போயி இருக்கிறார்.

பெரியவா சாதாரணமாக இருப்பதை அறிந்து எல்லோருக்கும் மகிழ்ச்சி. பிட்சையை ஏற்றுக் கொண்டிருக்கிறார். பிறகு படுக்க வைத்திருக்கிறார்கள். அரை நொடியில்... அநாயாசமாக... அப்போது மணி 2.58...

அல்லும் பகலும் ஒவ்வொரு கணமும் கண்ணிமை போல் பாதுகாத்து வந்த திவ்ய சரீரத்தைப் பார்த்துக் கதறித் தீர்த்து விட்டார்கள் அந்தப் புண்ணிய சாலிகள். மகா சுவாமிகளுக்குக் கைங்கர்யம் செய்தவர்கள் அத்தனை பேரும் பாக்கியசாலிகள். யார் பெயராவது விட்டுப்போய்விடுமோ என்று அவர்களது பெயர்களை நான் இங்கு குறிப்பிடவில்லை.

அன்று மதியம் இரண்டரை மணியளவில் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள், பாலசுவாமிகளுடன் தாம்பரம் நிகழ்ச்சியொன்றுக்குச் சென்றுவர, பெரியவாளிடம் உத்தரவு பெற்றுச் சென்றதைக் கண்கலங்கியவாறு கூறினார். சென்னைக்குச் செய்தி சென்று, தாம்பரத்தை அடைவதற்கு முன்பே தெரிவிக்கப் பட்டு, இரு சுவாமிகளும் மாலை ஐந்து மணியளவில் ஸ்ரீ மடத்துக்கு வந்திருக் கிறார்கள்.

துறவியேயாயினும் நாற்பது ஆண்டு காலத் தொடர்பின் பின்னணியும், பல்வேறு நிகழ்ச்சிகளும் நினைவில் அலைமோத, ஸ்ரீ ஜயேந்திரர் நெஞ்சம் குமுறிக் கண்ணீர் வடித்ததில் வியப்பென்ன? 'ஒப்புயர்வற்ற குருவின் உபதேசம் பெற்றதற்கும், பிரும்மஞானியிடம் பாடம் பயின்றதற்கும், மகானிடம் அறிவுரை கேட்டதற்கும் முற்பிறவியின் நற்பேறு அன்றோ காரணம்' என்ற நன்றிக்கண்ணீர் அல்லவா அது! அத்தருணம் உள்ளத்தில் எழுந்த சிந்தனைகளையெல்லாம் கூற முடியாமல் துயரமே உருவாக, சோகமே வடிவாக அவர் அமர்ந்திருந்தாலும் – மறுநாள் நடக்க வேண்டிய சடங்குகளில் தீவிரக் கவனம் செலுத்தி, ஆணைகள் பிறப்பித்துக் கொண்டிருந்தார்.

பாலசுவாமிகள் அங்கும், இங்கும், எங்கும் காணப்பட்டார். ஒரு கணம் தரிசித்து ஆறுதல் பெறக் காத்திருக்கும் பக்தர்களைச் சந்தித்தவாறே, தேவையான ஏற்பாடுகளில் கவனம் செலுத்திக்கொண்டிருந்தார். என்னைக் கண்டதும் தனியே அழைத்துச் சென்று, "ஏமாந்து போயிட்டோம்.. இன்னிக்கு நன்னா தான் இருந்தா, பேசினா, சிரிச்சா, பிட்சை பண்ணினா... தைரியமாயிருந்தது. தாம்பரம் போயிட்டு வந்துடலாம்னு புறப்பட்டோம்... எதிர்பார்க்காம சேதி வந்தது..." என்று நடந்தவற்றைக் கூறத் தொடங்கினார். நடந்து சென்றவாறே ஒருவருக்குக் கையசைப்பு, ஒருவரை அருகில் வரச்சொல்வது, இன்னொருவரைப் பார்த்து 'ஓ! வந்திருக்கேளா?' என்று கேட்பது, 'உங்களுக்கு எப்போ தெரியும்?' என்று வேறொருவரிடம் பரிவுடன் விசாரிப்பது... 'பிருந்தாவன வேலை

வேகமாக நடந்து கொண்டிருக்கிறதா?' என்று பார்வையிடுவது... பம்பரமாகச் சுற்றிச் சுழன்று கொண்டிருந்தார்.

பக்தர்கள் கூட்டம் பெருகிக் கொண்டேயிருந்தது. வேகமாக நகர்ந்த 'க்யூ' இரண்டு கிலோ மீட்டர் வரை நீண்டது. வெகுவிரைவில் நேர்த்தியான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. காவலர்கள் பணி போற்றத்தக்கதாயிருந்தது.

மேடையில் பெரியவாளின் திருமேனி ஒளிர்ந்து கொண்டிருந்தது. நான்கு ஆண்டுகளாக நாம் கண்ட தரிசனம். ஒரே ஒரு வித்தியாசம்... எவ்வித அசைவும் இல்லை. மூலவராகிவிட்ட நிலையில், தெய்வீகச் சாந்நித்யம் நிலவியது. சுற்றிலும் மடத்துச் சிப்பந்திகள். அவ்வப்போது, இரு சிஷ்ய சுவாமிகளும் வந்து உடனிருந்தார்கள்.

எதிரில் நகர்ந்த 'க்யூ'வில் கும்பிட்டவர்கள், குமுறியழுதவர்கள், கன்னத்தில் போட்டுக் கொண்டவர்கள், கண்ணீர் அஞ்சலி செலுத்தியவர்கள், இஸ்லாமியப் பெருமக்கள், கிறிஸ்தவ சகோதர - சகோதரிகள், வெளிநாட்டினர், பல சமயத்தினர், பல மொழியினர், பொதுவாழ்வின் பல துறையைச் சேர்ந்தவர்கள், பெரும் செல்வந்தர்கள், பரம ஏழைகள், தள்ளாடும் முதியவர்கள், ஆண்கள், பெண்கள், சிறுவர் - சிறுமியர்...

ஒருபுறம் ஒலிபெருக்கியில் 'ஜய ஜயசங்கர... ஹர ஹர சங்கர...' கோஷம், நாம சங்கீர்த்தனம், பக்திப் பாடல்கள், தேவாரம், திருப்புகழ், சகஸ்ரநாமப் பாராயணம், வேத முழக்கம்... மேடை நிரம்ப மணம் பரப்பும் மலர்க்கொத்துகள், வாசனைத் திரவியங்களின் புகைமண்டலம்... தேவலோகச் சூழ்நிலை...

பன்னிரண்டு மணிக்கு மேல் மகாபிஷேகம் தொடங்கியது. பிரதம சீடர் ஸ்ரீ ஜயேந்திர சுவாமிகள், குருவின் திருமேனிக்கு முறைப்படி அபிஷேக, அர்ச்சனைகள் செய்வித்து, தூப தீப, கற்பூர ஆரத்தியெடுத்து வழிபட்டது, ஆலயம் ஒன்றில் சிவ பூஜை நடைபெற்றது போன்ற உணர்வைத் தோற்றுவித்தது.

இறுதியாக, நான்கு மணியளவில் பிருந்தாவனப் பிரவேச ஊர்வலம் புறப்பட்டு அருகிலிருந்த மாளிகைக்குள் சென்றது.

**ப**ல நூற்றாண்டுகளுக்கு முன் தமிழகத்தில் 'சாக்கியார் கூத்து' என்ற நாடகக் கலைவடிவம் புகழ் பெற்றிருந்தது. கதையினூடே நாட்டு நடப்புகளும் உள்ளூர் விவகாரங்களும் சமூக வம்புகளும் இடம்பெற்றிருக்கும். சில நேரங்களில், அந்தத் தெருவில் தனிப்பட்டோர் இல்லங்களில் நடந்த நிகழ்ச்சிகளும் கூட 'இலைமறைவு காய்மறைவாக' கையாளப்படும். தனி நபர்களின் தவறுகளும் பலவீனங்களும் விமரிசிக்கப்படும். அதில் சம்பந்தப்பட்டவர்கள் தங்களைப் பற்றித்தான் நையாண்டியாகக் கூறுகிறார்கள் என்று தெரிந்து கொண்டுவிடுவார்கள். 'சுருக்'கென்று மனத்தில் தைக்கும். ஆனால், ஒருவர் மனமும் புண்படாது. கூட்டத்தினருக்கு நகைச்சுவை விருந்து படைக்கப்படும். அதே நேரத்தில் சில உண்மைகள் மறைமுகமாக எடுத்துக் கூறப்படும். அந்தக்

கூத்துக்கு அரசனும் மாறுவேடத்தில் வந்து, தன் ஆட்சியைப் பற்றிக் கூறப்படும் விமரிசனங்களைக் கேட்பான். மாற்ற வேண்டியவற்றைத் திருத்தியமைத்துக் கொள்வான்.

சாக்கியார் கூத்து தற்போது கேரளத்தில்தான் இருக்கிறது: ஆனால், அதன் Form, Content எல்லாம் பெரும்பாலும் மாறிவிட்டிருக்கிறது.

இந்தக் கூத்தைப் பற்றிப் பெரியவா கூறித்தான் முதல் முதலில் நான் அறிந்து கொண்டேன். "இப்போ சோ போட்டுண்டிருக்கான் பாரு, அதுமாதிரி 'சோஷல் ஸட்டையர்' நாடகம்தான் சாக்கியார் கூத்து. ரெண்டாயிரம் வருஷத் துக்கு முன்னேயே நம்ம நாட்டில் பிரபலமாயிருந்தது" என்று சுவாமிகள் கூறிய போது அதன் சமூகத்தாக்கத்தைப் புரிந்துகொள்ள முடிந்தது.

"சாக்கியார் கூத்துச் சிற்பம் ஒண்ணு திருவொற்றியூர் கோயில்லே, ஒரு தூண்லே இருக்கு. போய்ப்பாரு..." என்று முடிவுரையாகக் கூறினார் பெரியவா.

'இதையெல்லாம் எதற்குப் பெரியவா என்னிடம் கூறுகிறார்' என்று புரியாமல்தான் அன்று நான் அதைக் கேட்டுக் கொண்டேன். முக்காலமும் அறிந்த மகான், என் பிற்கால நாடக ஆர்வத்துக்கு அருள் வித்திடுகிறார் என்று நான் எப்படி அறிவேன்?

பத்து ஆண்டுகள் கழித்து, 'மெரீனா' என்ற பெயரில் நான் விகடனில் எழுதிய 'வடபழனியில் வால்மீகி' என்ற நெடுங்கதையை, 'கலாநிலையம்' குழுவினர் நாடகமாக்கி மேடையேற்றிப் புகழ்பெற்ற போது, 'நானே ஒரு நாடகம் எழுதினால் என்ன' என்ற உந்துதலால் தோன்றிய நாடகம்தான் 'தனிக் குடித்தனம்'. எளிமையான வீட்டுத் தமிழில் எழுதப்பட்ட புதுமையான குடும்ப நாடகமாக அது வரவேற்கப்பட்டு, லட்சக்கணக்கான விகடன் வாசகர்களால் ஆர்வத்துடன் படிக்கப்பட்டு, பின்னர் மேடையேறியபோது, தமிழ் நாடக மேடையில் ஒரு திருப்புமுனையாக அது அமைந்தது நாடறிந்த செய்தி. (இருபத்



தைந்து வருடங்கள் கடந்த பின்னரும் நடிகர் - நடிகைகள் பலமுறை மாற்றப் பட்டும்கூட இன்றும் 'தனிக்குடித்தனம்' பழைய பொலிவு குன்றாமல், மக்களால் ரசிக்கப்படுவது கண்டு எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது) பின்னர் சமூக 'ஸட்டையர்' நாடகங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்தன.

ஆனால், நான் நாடகம் எழுதுவது குறித்தோ, அது மேடை நாடகமாக நடைபெற்றுக் கொண்டிருப்பது குறித்தோ, நான் சுவாமிகளிடம் பேசியதே இல்லை. பெரியவாளும் என் ஆலயப் பயணக் கட்டுரைகள் குறித்தும், அரசியல் கார்ட்டூன்கள் பற்றியும் பேசுவாரே தவிர, என் நாடகங்கள் பற்றி ஒன்றுமே கேட்டதில்லை.

தேனம்பாக்கம் ஆலயத்தில் சுவாமிகள் தங்கியிருந்தபோது, ஒரு நாள் ஜன்னலையொட்டிய மேடையில் நான் துண்டை விரித்துப் படுத்திருந்தேன். விடியற்காலை நாலு நாலரை இருக்கும். ''யார்ரா அது?'' என்று விரல் சொடுக் குடன் பெரியவா எழுப்பினார்.

பெயரைச் சொல்லி, எழுந்து வந்தனம் செய்துவிட்டு நின்றேன். அமரும்படி சைகை காட்டினார். அமர்ந்தேன்.

''தரிசனத்துக்கு வர்றவாள்லே ரொம்ப பேர் எங்கிட்டே தங்களோட குடும்பக் கஷ்டத்தையெல்லாம் சொல்லி ரொம்ப துக்கப்படறா... 'பணமே போறலே, குடித்தனம் நடத்தறதே கஷ்டமாயிருக்கு, இதுலே கல்யாணம் கார்த்திகைன்னு வந்துட்டா திண்டாடிப் போயிடறது'ன்னு அழமாட்டாக் குறையா சொல்றா... இத்தனை வருஷமா நானும் யோசிச்சு யோசிச்சுப் பார்த்தேன்.. இவாள்லாம் ஏன் பணத்துக்கு இவ்வளவு கஷ்டப்படறாங்கிறதுக்கு எனக்கு மூணு காரணங்கள்தான் தோண்றது... காபி குடிக்கிறது, பட்டுப்புடவை வாங்கறது, சினிமாவுக்குப் போறது இது மூணையும் அடியோட விட்டுட் டாலோ, இல்லே ரொம்ப குறைச்சுண்டுட்டாலோ அநாவசியச் செலவுகள் குறைஞ்சுடும். அப்புறம் குடும்பம் நடத்த இவாளுக்குப் பணத் தட்டுப்பாடு ஏற் படாதுன்னு நினைக்கிறேன். இதை நீ ஆனந்த விகடன்லே எழுதறயா?''

நான் பேசாமல் இருந்தேன்.

''என்ன பேசாமல் இருக்கே?''

''இது மூணும் கூடாதுன்னு ஆனந்தவிகடன்லே எப்படி எழுதறதுன்னு...''

''ஏன்?''

''விகடன்லே முதல் பக்கத்துலேயே காபி விளம்பரம் வருது. கடைசி அட்டைலே பட்டுப்புடவை விளம்பரம் வருது. எங்க எடிட்டரே சினிமா எடுக் கிறார்... இதுக்கெல்லாம் எதிரா நான் எப்படி எழுத முடியும்னுதான் யோசிக் கிறேன்...''

''ஓஹோ... சரி, சரி... உனக்கு எப்போ முடியறதோ, எதுலே எழுத முடியறதோ அப்ப இதைப் பத்தி நாலு வரி எழுது'' என்று அந்தப் பேச்சை அதோடு நிறுத்திவிட்டு, எழுந்து உள்ளே சென்றுவிட்டார் சுவாமிகள்.

இது நடந்து பல மாதங்கள் கழித்து, விகடனில் 'ஊர்வம்பு' என்ற நாட கத்தை எழுதத் தொடங்கினேன்.

ஒரு நாள் வீட்டில் எட்டாவது காட்சியை எழுதிக் கொண்டிருந்தேன். சங்கர நாராயணன் என்பவர் தமது நான்காவது பெண்ணுக்கு ஜாதகம் வாங்கு வதற்காக கமலாம்பாள் வீட்டுக்கு வருகிறார். இருவருக்கும் இடையே உரை

யாடல் சுவாரஸ்யமாக நடக்கிறது. கடைசியில், ஒரே கோத்திரம் என்று தெரிந்ததும் மிகுந்த ஏமாற்றத்துடன் சங்கரநாராயணன் வெளியேறுகிறார்.

காட்சி முடிந்ததும் வழக்கம்போல் படித்துப் பார்த்தேன். முன்பு சுவாமிகள், தேனம்பாக்கத்தில் விடியற்காலை என்னிடம் கூறிய கருத்து அவர்கள் உரையாடலில் இடம்பெற்றிருந்ததைக் கண்டு நான் ஆச்சரியப்பட்டுப் போனேன்.

*கமலாம்பாள்:* "பாவம், சுவாமிகளும்தான் என்னென்னமோ சொல்லிண்டு இருக்கார், நாம கேட்டான்னா தேவலே! பட்டுப்புடவை கட்டிக்காதேங்கிறார். நம்ம மனுஷ்யா என்னடான்னா, கல்யாணத்துக்குப் பட்டுப்புடவை வாங்கக் காஞ்சீபுரம் வந்தோம்... அப்படியே பெரியவாளையும் தரிசனம் பண்ணிட்டுப் போகலாம்னு வந்தோம்னு அவர்கிட்டேயே போய் வாய்கூசாம சொல்றா..."

*சங்கரநாராயணன்:* "நீங்க சொல்றது ரொம்ப சரி.: இன்னிக்கு இந்த காபியும் பட்டுப்புடவையும் சினிமாவும் இல்லாட்டா நம்ம குடும்பங்களெல்லாம் இன்னும் எவ்வளவோ நன்னாயிருக்கலாம்..."

உண்மையைச் சொல்கிறேன். இந்தக் காட்சியை எழுதத் தொடங்கியபோது, சுவாமிகள் அன்று தேனம்பாக்கத்தில் கூறியது என் நினைவிலேயே இல்லை. பாத்திரங்களின் உரையாடல் நடந்து கொண்டிருக்கும்போது, Conscious-ஆக இந்த வரிகளைச் சேர்க்கவில்லை. 'எப்போ முடியறதோ, எதுலே எழுத முடியறதோ அப்போ எழுது'ன்னு அனுக்கிரகித்தது, ஒரு காட்சியிலே மட்டும் வந்துவிட்டுப் போகிற, நாடகத்துக்கு முக்கியமில்லாத ஒரு பாத்திரத்தின் மூலம், தாம் நினைத்தபடியே விகடனிலே தமது கருத்துகளை சுவாமிகள் வெளிப்படுத்திய ஆச்சரியத்தை நினைக்கும்போதெல்லாம் நெஞ்சம் நெகிழ்கிறது.

'ஊர்வம்பு' நாடகத்தின் ரிகர்சல் தொடங்கிய புதிதில் கலாநிலையம் குழுவினர் சுவாமிகளைத் தரிசிக்க விருப்பம் தெரிவித்தனர். காஞ்சீபுரத்தில் அவர்களுடைய நாடகம் ஏற்பாடாகியிருந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, பஸ்ஸில் சென்ற குழுவினரை தேனம்பாக்கம் அழைத்துச் சென்று, அவர்களது விருப்பத்தைப் பெரியவாளிடம் விண்ணப்பித்துக் கொண்டேன்.

அப்போதுதான் இக்குழுவினர் ஊரெங்கும் என் நாடகங்களை நடத்திக் கொண்டிருப்பதைப் பற்றி பெரியவாளிடம் முதன்முறையாக நான் சொல்லிக் கொண்டேன்.

குழுவினர் ஒவ்வொருவரையும், தங்கள் ஊர் பெயர், தந்தையின் பெயர், தங்கள் பெயர் மூன்றையும் கூறித் தரிசனம் செய்யும்படி சுவாமிகள் பணித்தார். நடிகர், நடிகைகள் அத்தனை பேரும் அவ்வாறே கூறிவிட்டு, ஒவ்வொருவராகத் தரிசனம் செய்து, சுவாமிகளின் அருளாசியைப் பெற்று மகிழ்ந்தனர்.

பின்னர் 1979-ல் நானும் நண்பர்களும் சேர்ந்து 'ரசிக ரங்கா' என்ற நாடகக் குழுவைத் தோற்றுவித்து என் நாடகங்களை மேடையேற்றத் தொடங்கினோம். அச்சமயத்தில், சுவாமிகள் அருளாணைப்படி நாங்கள் நாலைந்து பேர் ஓர் அறக்கட்டளை நிறுவி, சின்னக் காஞ்சீபுரத்தில் ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகள் வசித்து வந்த இல்லத்தை மாற்றியமைத்து, ஒரு மணிமண்டபம் எழுப்பும் பணியில் ஈடுபட்டிருந்தோம். மண்டப நிர்மாணத்துக்காக நன்கொடை வசூலிப்பது என்று முடிவானபோது, சுவாமிகளை ஹம்பியில் தரிசித்து "நாடகங்கள் போட்டுக் கொண்டிருக்கிறேன். அதில் பணம் மிச்சம் பிடித்து, ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகள் நினைவு அறக்கட்டளைக்கு அவ்வப்போது நன்கொடைகள் அளிப்பதற்கு அனுமதி வேண்டும்" என்று கோரினேன். 'அப்படியே செய்' என்று ஆசி வழங்கினார். அதன் பலனாக, எங்களுக்கு வெளியூர்களிலிருந்து தொடர்ந்து

அழைப்புகள் வரத்தொடங்கின. ஏழெட்டு ஆண்டுகளில் அறக்கட்டளைக்கு 'ரசிக ரங்கா' ஏறத்தாழ எழுபத்தைந்தாயிரம் ரூபாய் நன்கொடையாக அளித்தது.

1988-ல் காஞ்சியை அடுத்த ஓரிக்கையில் தங்கியிருந்த சுவாமிகளின் தரிசனத்துக்குச் சென்றிருந்தேன். கூட்டமே இல்லை. கைங்கர்யம் புரியும் நாலைந்து இளைஞர்கள் மட்டுமே அருகில் இருந்தனர். நமஸ்காரம் செய்தேன். அருகில் வரும்படி அழைத்து உட்காரச் சொன்னார்.

''இப்ப என்ன நாடகம் போட்டுண்டிருக்கே?'' என்று பெரியவா கேட்டதும் ஒரு கணம் நான் திகைத்துப் போனேன்.

அதுவரை என் நாடகங்களைப் பற்றி சுவாமிகள் நேரடியாக என்னிடம் விசாரித்ததில்லையாதலால், சற்றும் எதிர்பாராத வகையில் திடீரென்று, பெரியவா அப்படிக் கேட்டதுதான் எனது ஒரு கண நேரத் திகைப்புக்குக் காரணம்.

''நாத்தனார் கலகம்'' என்றேன் நான்.

''என்ன கதை? அதுலே என்ன சொல்லியிருக்கே?''

இக்கட்டான நிலைமை. 'கதையை விரிவாகச் சொல்வதா? சுருக்கமாகக் கூறுவதா? எப்படித் தொடங்குவது... எங்கே தொடங்குவது... எதைச் சொல்வது? எதை விடுவது... இதற்கு முன் பெரியவாளிடம் கதை சொல்லிப் பழக்கமில்லையே' இவ்வாறு சிந்தித்தபடியே, கதையை விட்டுவிட்டு நாடகத்தின் மையக் கருத்தைக் கூறிவிடலாம் என்ற முடிவுக்கு வந்தேன்.

''இப்பல்லாம் பிள்ளைகள் அப்பா அம்மாவைச் சரியா கவனிச்சுக்க மாட்டேங்கிறா... நிறையச் சம்பாதிக்கிறா... அப்பாவோட பணமும் வேண்டி இருக்கு. ஆனா, அன்பா இருக்க மாட்டேங்கிறா... பெத்தவா வீட்டை விட்டுட்டு, விருத்தாச்ரமங்களைத் தேடிண்டு போக வேண்டியிருக்கு... இதை வெச்சுண்டு கதை எழுதியிருக்கேன்...'' என்று கூறினேன்.

''வாஸ்தவம்தான். என்கிட்டேகூட அப்பப்போ சில பேர் வந்து, 'பையன் வெளிநாட்டுலே உத்தியோகத்துலே இருக்கான். ஆயிரம் ஆயிரமா சம்பாதிக்கிறான். நாங்க இங்கே தனியாத் திண்டாடறோம்; சாப்பாட்டுக்கே வழி இல்லே... மடத்துக்கு வந்து கைங்கர்யம் பண்ணிண்டு இங்கேயே இருந்துடறோம்'னு சொல்றா... பாவமாயிருக்கு...'' என்று கூறிவிட்டு ''இதுக்கு நாடகத்துலே என்ன 'ஸொல்யூஷன்' சொல்லியிருக்கே?'' என்று பெரியவா கேட்டார்.

''நான் பரிகாரம் ஒண்ணும் சொல்லலே. பொதுவா இந்தக் காலத்துலே பசங்களோட மனோபாவம் எப்படியிருக்குன்னு காண்பிச்சிருக்கேன்... இந்த நாடகத்தில், பணத்தாசை பிடிச்ச பொண்ணு ஒருத்தி, தம்பிகளை அப்பாவுக்கு எதிரா தூண்டிவிட்டு கலகம் பண்றா'' என்று கதையையும் இரண்டு வரிகளில்



கூறினேன். அப்போது, நாடகத்தின் இறுதிப் பகுதியில் வலியுறுத்தியுள்ள கருத்தையும் பெரியவாளிடம் சொல்ல வேண்டும் என்று தோன்றியது.

''அப்பாக்களும் எல்லாப் பணத்தையும் தூக்கிப் பையன்கள்கிட்டே குடுத்துட்டு கடைசி காலத்துலே திண்டாடாமே, சம்பாதிச்ச பணத்துலே தங்களுக்குன்னு கொஞ்சம் சேர்த்து வெச்சுக்கணும்னு சொல்லியிருக்கேன். எல்லாத்துக்கும் பசங்க கையையே எதிர்பார்க்காம, அவாளுக்குத் தொந்தரவா இல்லாம, குடும்பப் பொறுப்புகளெல்லாம் முடிஞ்சப்புறம் பந்த பாசங்கள்லேருந்தும், இதர வசதிகள்லேருந்தும் கொஞ்சம் கொஞ்சமா விலகி வாழக் கத்துக்கணும்... முன்காலத்துலே வானப்பிரஸ்தம்னு இருந்ததே, அதுமாதிரி...''

''இவாளையும் காட்டுலே போய் வாசம் பண்ணச் சொல்றயா...? இப்போ காடு எங்கே இருக்கு... அதான் இருக்கிற காடெல்லாத்தையும் அழிச்சிண்டிருக்காளே..?'' என்று கூறி பெரியவாளுக்கே உரிய சிரிப்பொன்று சிரித்தார். தாறுமாறான சமூகப் போக்குகளைக் கண்டு மனம் வெதும்பி, ஆற்றாமையால் விமரிசனம் செய்யும்போது பெரியவா சிரிக்கும் சிரிப்பு, ஆயிரம் செய்திகள் கூறும்.

''நான் காட்டுக்குப் போகச் சொல்லலே. வீட்டுலேயே, எல்லாத்திலேருந்தும் மனசாலே ஒதுங்கி வாழப் பழகிண்டா நல்லதுன்னுதான் எழுதியிருக்கேன்.''

''சரி... சரி...'' என்று அந்தப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்தார் பெரியவா...

திரும்பி வரும்போது, பெரியவா கூறிய கருத்து என் மனத்தில் எதிரொலித்துக் கொண்டேயிருந்தது. ''இருக்கிற காடெல்லாத்தையும் அழிச்சிண்டிருக்காளே...''

மனிதன் சுயநலத்துக்காக அசுரனாக மாறி, தன்னைப் பெற்று வளர்க்கும் இயற்கை அன்னையையே கொடுமைப்படுத்தி சின்னாபின்னமாக்கிய பாவத்துக் கான துன்பத்தையல்லவா தற்போது அனுபவித்துக் கொண்டிருக்கிறான்! சுற்றுப் புறச் சூழலின் தூய்மை கெடுவதற்கும் அதன் தொடர்பான பிற இன்னல் களுக்கும், இருக்கும் தாவரச் செல்வங்களை அழித்துவருவதுதான் காரணம் என்று தற்போது உலகெங்கும் எதிரொலிக்கும் கூக்குரலை அன்றே, அந்த ஒரு வரியில் பெரியவா வெளிப்படுத்தியதன் தாக்கம் என்னை வெகுவாகப் பாதித்தது. அந்த 'வசனம்' நாடகத்தில் இடம் பெற்றேயாக வேண்டும் என்று தீர்மானித்தேன்.

அதுவரை 'நாத்தனார் கலகம்' இரண்டு மூன்று முறைதான் மேடையேறி இருந்தது. இந்த 'வசனம்' பொருத்தமான இடத்தில் சேர்க்கப்படுவதற்காக இறுதிக் காட்சிகளைச் சற்று மாற்றியமைத்து, மீண்டும் ஒத்திகை பார்த்து, அடுத்த நிகழ்ச்சியின்போது, பெரியவாளின் கருத்து ஒலிக்கும்படி செய்தேன். அன்று நாடகத்தில் சங்கரராமன் என்ற பாத்திரம் "அதான் இருக்கிற காடெல்லாத் தையும் அழிச்சிண்டிருக்காளே" என்று கூறியதும், கொட்டகையில் பலத்த கை தட்டல் கேட்டது. அத்தனை பேர் உள்ளங்களிலும் பெரியவாளின் 'வசனம்' எதிரொலித்ததைக் கேட்க முடிந்தது. அன்று மட்டுமல்ல, அதன் பிறகு எங்கெல் லாம் இந்த நாடகம் நடைபெற்றதோ, அங்கெல்லாம் இந்த 'வசன'த்துக்குப் பார்வையாளரின் கரவொலி வானை முட்டியது. என்னைப் பொறுத்த வரையில், 'நாத்தனார் கலக'த்தில் இந்த 'மெஸேஜே' மணிமகுடச் சிகரமாகத் திகழ்கிறது.

என் நாடக வாழ்க்கை தொடங்கி கடந்த ஆண்டோடு இருபத்தைந்து ஆண்டுகள் முடிவடைந்தன. அந்த வெள்ளிவிழா ஆண்டில் தமிழ்நாடு இயல், இசை, நாடக மன்றம் எனக்கு 'கலைமாமணி' விருது அளித்துக் கௌரவித்தது. இந்த மாதிரி விருதுகளையோ, பொன்னாடைகளையோ, புகழுரைகளையோ, பாராட்டு விழாக்களையோ என்றுமே நான் விரும்பியதில்லை. இவற்றுக்காக எவ்வித முயற்சியும் செய்ததில்லை. மாறாகத் தவிர்க்கவே முயற்சித்திருக்கிறேன். இதற்குமுன் ஓராண்டு 'கலைமாமணி' பட்டியலில் என் பெயர் இடம் பெற்று இருப்பதை அன்பர் ஒருவர் முன்கூட்டியே என்னிடம் மகிழ்ச்சியுடன் தெரிவித்த போது, அதை எப்படியாவது பட்டியலிலிருந்து நீக்கும்பொருட்டு மேலிடத் துக்குச் சிபாரிசு செய்யும்படி அவரிடம் வேண்டிக் கொண்டேன். அந்த நண்பர் என் உள்ளம் அறிந்து அச்சமயம் உதவி புரிந்தார். அதற்காக அவருக்கு என் நன்றியையும் தெரிவித்தேன்.

கடந்த ஆண்டு, விருதுக்குச் சிபாரிசு செய்யப்பட்டிருக்கும் செய்தி லேசாகக் காதில் விழுந்தபோது இரண்டாம் முறையும் அதில் குறிக்கிடுவது பண்பாகாது என்று கருதியதால், விருப்பு வெறுப்பின்றி விழாவுக்குச் சென்று, விருதுப் பத்திரத்தையும் தங்கப் பதக்கத்தையும் பெற்றுவந்தேன்.

பின்னர் பெரியவாளின் திருப்பாதங்களில் அந்த விருதைச் சேர்த்துவிட வேண்டும் என்று பதக்கத்துடன் காஞ்சிக்கு விரைந்தேன்.

*1993*-ம் ஆண்டு, மார்ச் *20*-ம் தேதி. நெஞ்சம் மறக்க முடியாத தினங்களில் ஒன்று. என் விருப்பத்தை அங்கிருந்த அன்பர்களிடம் விண்ணப்பித்துக் கொள்ள, பெரியவா அருகில் செல்லும் வாய்ப்புப் பெற்றேன். முப்பத்தைந்து ஆண்டு களுக்கு முன், சம்ஸ்கிருதக் கல்லூரியில் கிட்டிய நெருக்கத்தை நினைப்பூட்டிய தரிசனம் அது. மனதில் உள்ளதைக் கூறிவிட வேண்டும் என்ற துடிப்பு. பேசலாமா, கூடாதோ என்ற தயக்கம்.

சந்திரா, என் சார்பில் பெரியவா காதருகில் ஏதோ சொல்லத் தொடங்கினார். 'நீ பேசாமல் இரு... அவனே சொல்லட்டும்...' என்பது போல் சைகை காட்டினார். நம் மனத்துடிப்பு பெரியவாளுக்குத் தெரியாதா?

''1958-லே எனக்கு ஒரு நாள் சாக்கியார் கூத்து பற்றிப் பெரியவா சொன்னபோது, அதை ஒரு சாதாரணத் தகவலாக நினைத்தேன். வருடங்கள் ஆக ஆக, சமூக நடப்புகளையும் குடும்பப் பிரச்னைகளையும் நகைச்சுவையோடும் ஸட்டையராகவும் எடுத்துக் கூறும் நாடகங்களை எழுத எனக்குப் பெரியவா உபதேசம் செய்து ஆசி வழங்கியதாகப் புரியத் தொடங்கியது. நாடகம் எழுதத் தொடங்கிய இருபத்தைந்து ஆண்டு நிறைவின்போது, 'சிறந்த நாடக ஆசிரியர்' என்று சர்க்கார் அங்கீகரிக்கும் வகையில் 'கலைமாமணி' விருது அளித்திருக்கிறார்கள். இதில் எனக்குச் சம்பந்தமில்லை. எல்லாம் பெரியவா அனுக்கிரகம். இந்தப் பதக்கத்தைத் தங்கள் திருப்பாதங்களில் சேர்த்துவிடுகிறேன்'' என்று கூறி அவ்வாறே சமர்ப்பித்தேன்.

பெரியவா புன்னகை புரிந்தவாறே 'என் கையில் கொடு' என்பது போல் கையை நீட்டினார். எடுத்துத் திருக்கரத்தில் வைத்தேன். மகிழ்ச்சியோடு பதக்கத்தை இருபுறமும் திருப்பிப் பார்த்துவிட்டு, என் கையை நீட்டச் சொல்லி, அவரது புனிதப் பொற்கரத்தால் அதை எனக்குத் தந்தார். பெற்றுக் கண்களில் ஒற்றிக்கொண்டேன். பெரியவாளின் குறிப்பறிந்து, ஒருவர் சால்வை ஒன்று கொண்டுவந்து எனக்குப் போர்த்தினார். முன்னர் விருது பெற்றுக்கொண்டதால் கலங்கிக் குழம்பியிருந்த என் மனம் தெளிவடைந்து நிறைவுபெற்றது.

அரியதொரு இந்த நல்வாய்ப்பை நழுவவிடக்கூடாது என்று தோன்றவே, ''பெரியவாள் ஆசியால் இதுமாதிரி எனக்குப் பல தரிசனங்களும் அனுபவங்களும் ஏற்பட்டிருக்கு... அதையெல்லாம் எழுத வேண்டும் என்று ஒரு வருஷமாகவே தோன்றிக் கொண்டிருக்கிறது. பெரியவா அனுமதி தந்து, அனுக்கிரகம் பண்ணினா எழுதலாம்னு நினைச்சுண்டிருக்கேன்...'' என்று கூறி, கைகட்டிக் காத்திருந்தேன்.

பெரியவா வதனத்தில் அன்புப் புன்னகை ஒன்று அரும்பி, மந்தஹாஸமாய் மலர்ந்தது. அருட்கரம் அருகில் இருந்த மாதுளம்பழத்தை எடுத்து எனக்கு அளித்துவிட்டு, அபயஹஸ்தமாக உயர்ந்து, பரிபூரணமாக வாழ்த்தியது.

அந்த அருளாசியின் பலனாகத்தான் விகடனில் 'அன்பே... அருளே...' வெளியாகத் தொடங்கி, வாரம்தோறும் வளர்ந்து வந்தது.

**ஸ்ரீ** காஞ்சி மாமுனிவரின் பரமபக்தன் நாகராஜன். எனக்கு இளைய தோழன். காஞ்சீபுரம் சென்று தரிசனம் செய்துவிட்டு வந்து தன் அனுபவங்களை உணர்ச்சி பொங்கும் உற்சாகத்துடன் விவரிப்பான். அடுத்த முறை செல்லும் போது அவனுடன் என்னையும் வரும்படி வற்புறுத்துவான். அவரைத் தரிசிக்காமல் இருப்பது மகாபாவம் என்று என்னுடன் வாதாடுவான். அவன் விருப்

பத்தை நிறைவேற்றாமலே நாட்களைக் கடத்தினேன்.

1957-ல் பெரியவா சென்னைக்கு வருகை தந்த பின்னர்தான் அவர் புனித தரிசனம் எனக்குக் கிட்டியது. நானும் நாகராஜனும் சேர்ந்தே பலமுறை பல பேட்டைகளுக்குச் சென்று தரிசனம் செய்திருக்கிறோம். நுங்கம்பாக்கத்தில் பெரியவா தங்கியிருந்த பதினெட்டு நாட்களும் இரவும் பகலும் ஸ்ரீ மடத்திலேயே தான் வாசம். நுங்கம்பாக்கம் இளைஞர் சங்கத்தின் செயலாளர் நான். அவன் துணைச் செயலாளர். பெரியவாளின் நுங்கம்பாக்கம் விஜய வைபவத்தை யொட்டி சுவாமிகளின் புகைப்படத்தை ஈராயிரம் பிரதிகள் அச்சடித்து ஸ்ரீ மடத்துக்கு வருபவர்களுக்கு விநியோகிக்க வேண்டும் என்று விரும்பி விஞ்ஞா பனம் செய்துகொண்டோம். அந்தத் திட்டத்தைச் சற்று மாற்றியமைத்து எங்களிடம் ஒரு பணியை ஒப்படைத்திருந்தார் பெரியவா. அதை நிறைவேற்றி வைத்ததில் அவனுக்குப் பெரும் பங்கு உண்டு.

நுங்கம்பாக்கத்திலுள்ள அத்தனை தெருக்களுக்கும் வீடு வீடாகச் செல்ல வேண்டும். குடும்பத் தலைவரின் பெயரையும் உத்தியோகத்தையும் ஒரு நோட் புத்தகத்தில் குறித்துக் கொண்டு, அவரிடம் ஒரு புகைப்படத்தைக் கொடுத்து விட்டு வரவேண்டும் என்பதுதான் பெரியவாளின் ஆணை. அதன் பிறகு என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றி இப்பணியைச் செய்து முடித்த பின்னர் எங்களிடம் கூறுவதாகச் சொல்லியிருந்தார்.

தினமும் காலையும் மாலையும் இந்தப் பணி தொடர்ந்தது. இரவில், 'எத்தனை தெருக்களுக்குச் சென்றீர்கள், எத்தனை நபர்களைப் பார்த்தீர்கள்?' என்று பெரியவா விசாரித்துத் தெரிந்து கொள்வார். பின்னர் பெரியவா நுங்கம் பாக்கத்தை விட்டுப் புறப்பட்டு வேறு பேட்டைகளுக்குச் சென்ற பிறகும், நாங் களிருவரும் அங்கு சென்று, புகைப்பட விநியோகப் பணியைப் பற்றிக் கூறுவோம். இறுதியாக, அந்தப் பணியை நிறைவேற்றி விட்டு, நோட்புத்தகத் துடன் பெரியவாளிடம் எடுத்துச் சென்று காட்டினோம். சந்தோஷப்பட்டார். பிறகு அதைப் பற்றிப் பேசுவதாகக் கூறினார். அதன்பிறகு, இரண்டு முறை நாங்கள் நினைவுபடுத்தியும்கூட ஏதும் கூறாமல் இருந்து விட்டார்.

சென்னை நகரைவிட்டுப் பெரியவா புறப்பட்டுச் செல்லப் போகிறார் என்ற செய்தி பரவத் தொடங்கியது. அப்போது வடசென்னையில் இருந்தார். நுங்கம் பாக்கத்திலிருந்து நாங்கள் தரிசனத்துக்குச் சென்றோம். இரவு பத்து மணி யிருக்கும். தரிசனம் முடிந்து எல்லோரும் திரும்பி விட்டார்கள். கதவும் தாழிடப் பட்டுவிட்டது. கடைசி பஸ் சென்று விட்டதால், நாங்களிருவரும் அங்கேயே தங்கிவிட்டு, மறுநாட் காலை திரும்புவதென்று முடிவு செய்தோம். ஆனால், இரவு யாருமே அங்கு தங்கக் கூடாது என்று உத்தரவாகியிருப்பதாகக் கண்ணன் கூறினார். வெளித் திண்ணையில் படுத்துக்கொள்வதாக நான் கெஞ்சிக் கேட்டுக் கொண்டிருந்தேன். கண்ணன் மிகவும் கடுமையாக மறுத்துக் கொண்டிருந்தார்.

"யார்ராது கண்ணா? நுங்கம்பாக்கம் குழந்தைகளா?" என்று உள்ளேயிருந்து பெரியவா கேட்டார். "ஆமாம்" என்றார் கண்ணன்.

"அவாளை உள்ளே வந்து படுத்துக்கச் சொல்லு" என்று மறுகணம் அன்பு உத்தரவு பிறந்தது. உள்ளே சென்றோம். மேனாவில் பெரியவா படுத்துக் கொண்டிருந்தார். நானும் நாகராஜனும் பத்தடித் தொலைவில் துண்டை விரித்துப் படுத்து விட்டோம்.

விடியற்காலை நான்கு மணிக்கு எழுந்து பெரியவா எங்களுடன் பேசத் தொடங்கினார். சுமார் ஒரு மணி நேரம் பேசியிருப்பார். அன்று கன்னிகாதான

டிரஸ்ட்டைப் பற்றி மிக விரிவாக எடுத்துக் கூறினார். ஏழைப் பெண்களின் திருமணத்துக்கு உதவுவதற்காகத் தொடங்கப்பட்டுள்ள அந்த அறக்கட்டளைக்கு இளைஞர் சங்கத்தார் தொண்டுபுரிய வேண்டும் என்று அறிவுரை வழங்கினார். அதற்கான வழிமுறைகளையும் காட்டியருளினார்.

வீடுகளுக்குச் சென்று பெரியவாளின் படத்தைக் கொடுத்துவிட்டுப் பெயர்ப் பட்டியல் தயாரித்து வைத்திருந்தோம் அல்லவா? அவர்கள் ஒவ்வொருவரிடமும் அவரவர் சக்திக்கு ஏற்றவாறு மாதந்தோறும் ஒரு ரூபாயோ, ஐம்பது காசோ, இருபத்தைந்து காசோ வசூல் செய்ய வேண்டும். மொத்த வசூலில் கால் பங்கு இளைஞர் சங்கத்துக்கும், கால் பங்கு நுங்கம்பாக்கத்தில் நடைபெறும் நற்பணிகளுக்கும், அரைப் பங்கு கன்னிகாதான டிரஸ்ட்டுக்கும் கொடுக்கும்படி உத்தரவாயிற்று.

இரண்டு மூன்று ஆண்டுகள் இப்பணியை நிறைவேற்றி வந்தோம். பின்னர்,



இளைஞர் சங்கம் இயங்க முடியாமல் போகவே, மாதாந்திர வசூல் முழு வதையும் உள்ளூர் கைங்கர்ய சபாவுக்கும் கன்னிகாதான டிரஸ்ட்டுக்குப் பொறுப்பேற்றுக் கொண்ட முதியவர் திரு தத்தாஜியிடமும் ஒப்படைப்பது வழக்கமாயிருந்தது. நாளடைவில் அவரே வீடு வீடாகச் சென்று வசூல் செய்யத் தொடங்கி, தமது இறுதிக் காலம்வரை கருமமே கண்ணாக அப்பொறுப்பை நிறைவேற்றி வந்தார்.

எதுவுமே பெரியவா முதலில் சொல்லும்போது மிகச் சாதாரணமாகத்தான் தோன்றும். அதைச் சிரத்தையுடன் செயல்படுத்தும் போதுதான் அந்தத் திட்டத்தின் வீச்சும் பரிமாணமும் ஓரளவு புரியத் தொடங்கும். பொது நலத் தொண்டு புரியும்போது நம் மனமும் தூய்மை பெறுமாறு, நம்மை நற்பணியில் ஈடுபடுத்தும் பரமதயாளப் பிரபுவன்றோ ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்.

இணைபிரியாத் தோழன் நாகராஜனை முப்பது ஆண்டுகளுக்கு முன் திடீரென்று ஒரு நாள் நான் இழக்க நேர்ந்தது. அது ஒரு துன்பவியல் நிகழ்ச்சி.

அவனது தந்தையின் மறைவுக்கு துக்கம் விசாரிக்க அருகிலிருந்த அவன் வீட்டுக்குச் செல்ல முடியாமல் நேர்ந்தது கொடுமையிலும் கொடுமை. தந்தை வைசூரியால் குளிர்ந்து போனார். அந்த வீட்டுக்கு யாருமே செல்லக்கூடாது என்ற சமூகக் கட்டுப்பாடு என்னை போகவிடாமல் தடுத்து நிறுத்தி விட்டது. என்மீது உயிரையே வைத்துக் கொண்டிருந்தவன், நான் வீட்டுக்கு வர வில்லையே என்று எத்தனை வேதனைப்பட்டிருப்பானோ என்று நான் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தபோது, அதே வைசூரி அவசர அவசரமாக அவனையும் கொண்டு போய்விட்டது. அவனது தந்தையார் மறைந்த பத்தாவது நாள் இவனும் உயிர் துறக்க நேர்ந்தது. செய்தி அறிந்து துடித்துப் போனேன். மருத்துவமனைக்குச் சென்று பார்த்துவிட்டு வந்தேன்.

அடுத்து ஒரு வாரம் நான் நடைபிணமாக அலைந்து கொண்டிருந்தேன். எதிலுமே மனம் நாட்டம் கொள்ளவில்லை. வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. அலுவலகத்தில் இயந்திரமாகக் கடமையாற்றிக் கொண்டிருந்தேன். உணவு செல்லவில்லை. உலகமே பிடிக்கவில்லை. தூக்க மாத்திரையில் துக்கத்தை தற்காலிகமாக மறக்க முயன்றேன். விழித்துக் கொண்டதும் மீண்டும் துக்கமும் துன்பமும் துயரமும் என்னைச் சூழ்ந்துகொண்டு சித்திரவதை செய்தன. பித்துப் பிடித்தவன் போல் தெருவில் அலைந்து கொண்டிருந்தேன்.

'இந்த மனநிலை மாறவே மாறாதா, என் துயருக்கு முடிவே கிடையாதா?' என்ற கேள்விகளுக்கு விடை காண முடியாமல் ஒரு நாள் காஞ்சீபுரம் பயண மானேன். வேறு எங்கு செல்வேன்?

கண்ணனிடம் எல்லாவற்றையும் கூறினேன். கண்ணன் பெரியவாளிடம் சொன்னார். தோட்டத்துக்குச் சென்று ஒரு மரத்தடியில் அமர்ந்து, என்னை அருகில் வரும்படி அழைத்தார் பெரியவா. அமரும்படி சைகை காட்டினார். அங்கு வேறு யாருமில்லை.

"நாகராஜனுக்கு என்னடா ஆச்சு?"

துக்கம் தொண்டையை அடைக்க, நடந்ததை அழுது கொண்டே கூறினேன். அந்தத் துயர நிகழ்ச்சி அவரையும் வெகுவாகப் பாதித்ததை அவரது முகபாவம் காட்டியது. புண்ணான என் இதயத்துக்கு அதுவே ஒத்தடமாக அமைந்தது.

"எனக்கு அந்தத் துக்கம் ஆறவே மாட்டேங்கிறது" - கண்ணீர் பொங்கி வழியக் கதறினேன்.

''அவன் போனப்புறம் உனக்கு உலகம் ஒரே சூன்யமா இருக்கா?''

''ஆமா... ஒண்ணுமே பிடிக்கலே. எதுலேயும் இன்ட்ரஸ்ட் இல்லாம இருக்கு.''

''இனிமே எதுக்கு வாழணும்னு தோண்றதா?''

''ஆமா...''

''தூக்குப் போட்டுண்டு செத்துப் போயிட்டா என்னன்னுகூட தோணித்தா?''

பதில் பேச முடியாமல் கேவிக்கேவி அழுதேன்.

பெரியவா சற்று நேரம் மௌனமாயிருந்துவிட்டு, லேசாகச் சிரித்துக் கொண்டே,

''நீ இப்ப எங்கிட்டே எல்லாத்தையும் சொல்லி அடக்க முடியாம அழுது தீர்த்துட்டியோன்னோ, இதோட உன் துக்கமெல்லாம் போயிடுத்து. போய் உன் ஆபீஸ் வேலையைக் கவனி'' என்று கூறி கண்ணனிடம் விபூதி குங்குமப் பிரசாதம் கொண்டு வரச் சொல்லி, எனக்களித்து, உத்தரவு தந்து அனுப்பினார்.

அதுவரை நிஜமாக இருந்த துக்கமும் வேதனையும் மெள்ள மெள்ளக் குறைந்து, இதயம் லேசாகி, இயல்பு வாழ்க்கைக்குத் திரும்பினேன்.

அடுத்து... மூத்த மகனை விபத்தொன்றில் பறிகொடுத்துவிட்டு பதறித் துடித்த தாய் ஒருத்தி தேனம்பாக்கம் கிணற்றடியில் பெற்ற உபதேசத்தைக் கூறுகிறேன்.

என் அத்தை மகளின் மூத்த மகன் எழில் திருமேனியன். குணத்தில் தங்கக் கம்பி. படிப்பில் ரத்தினச்சுடர். ஐ.ஏ.எஸ். தேறினான். பயிற்சி முடிந்து, அரசு உயர் அதிகாரியாகப் பதவியேற்றான். சுற்றமும் நட்பும் அவனைக் கண்டு பூரித்தது; பெருமையாகப் பேசியது.

அந்தோ, எந்தக் கொடூரக் கண்பட்டதோ! அந்தச் செல்வமகன் கார் விபத்தொன்றில் சிக்கி, ஒரு கணத்தில் மறைந்து போனான். திருமணமாக வேண்டிய இளம் பருவத்திலேயே எமதர்மன் அவனை அழைத்துச் சென்றுவிட்டான். குடும்பத்தின் மீது வானிடிந்து வீழ்ந்தது; பூமி அதிர்ந்து, பிளந்து, சிதறியது. அதல பாதாளம் வரை ஒரே கும்மிருட்டு. மீள்வதற்கு வழியேது?

தங்கச் சிலையெனத் திகழ்ந்த தலைச்சனை இழந்த தாய் துடிதுடித்துத் துவண்டு போனாள். அவன் பெருமையைப் பேசிப்பேசி அழுதாள். அழுது அழுது துரும்பானாள். பிறரின் சம்பிரதாயமான ஆறுதல் மொழிகள் சாரமற்றவையாகச் சலித்துப் போயின. ஈரைந்து மாதங்கள் சுமந்து பெற்று, சீருடன் வளர்த்து, கொடிய விதிக்குக் களபலி தந்துவிட்டு, கதறியழும் ஒரு தாயைச் சமாதானம் செய்யும் சக்தி மனிதனுக்கு ஏது? காஞ்சிவாழ் கருணைத் தெய்வத்திடமல்லவா முறிந்த நெஞ்சுக்கு மாமருந்துதேடிச் செல்ல வேண்டும்.

அவள் விரும்பியபடி தேனம்பாக்கம் சிவாஸ்தானத்துக்கு அழைத்துச்

சென்றேன். புனிதக் கிணற்றங்கரையில் எழுந்தருளியிருந்த பெரியவாளிடம் அவள் சோகக் கதையைக் கூறினேன்.

அதைச் செவியுற்று, சற்றே மௌனமாய் நின்ற பெரியவா என்னைப் பார்த்துப் பேசினார்:

''என் பிள்ளை ஆக்ஸிடெண்ட்டுலே போயிட்டானே, உனக்குத் தெரியுமா..?''

நான் ஏதும் புரியாமல் விழித்தேன்..

''அதாண்டா, என் (பூர்வாசிரம) அண்ணாவோட பிள்ளை, மணி சாஸ்திரி... அவனை நீ பார்த்திருக்கியோன்னோ...?''

''தெரியும்... மடத்திலே பார்த்திருக்கேன்...''

''அவன் கொஞ்ச நாளுக்கு முன்னே, பெங்களூர்கிட்டே ஒரு கார் ஆக்ஸிடெண்ட்டுலே போயிட்டான். விடியக்கார்த்தாலே நாலைஞ்சு பேரோட கார்லே வந்துண்டிருந்தான்.. ரயில்வே லெவல் கிராஸிங்லே நுழையறப்போ, ரயில் வந்து மோதி, காரைத் தூக்கியடிச்சுடுத்து. ரெண்டு மூணு பேர் செத்துப் போயிட்டா. அதுலே மணியும் ஒருத்தன். தலை ஒரு பக்கம், கை ஒரு பக்கம், கால் ஒரு பக்கம்னு உடம்பு சிதறிப் போயிடுத்து...''

பேரிழப்பை நெஞ்சுக்குள் அடக்கி, அந்தக் கோர நிகழ்ச்சியைப் பெரியவா விவரித்தபோது, 'பெரியவாளுக்கே பிள்ளையைப் பறிகொடுத்த துயரமா?' என்று உள்ளம் குமுறியது. அந்தக் கணத்தில், புத்திர சோகத்திற்குள்ளான தாயின் துயரம் ஒரு சிறிதாவது குறைந்திருக்கும் என்று நினைத்துக் கொண்டேன். நாகராஜனின் பிரிவுக்காக நான் பெரியவாளிடம் துக்கப்பட்டு அழுதது நினைவுக்கு வரவே, 'நீ ஏதாவது சொல்லணும்னா சொல்லு' என்று அவளிடம் கூறினேன்.

அவள் பெரியவாளிடம் நேருக்கு நேர் பேசிப் பழக்கப்படாதவள். கண்ணீரை உகுத்தவாறே கூறினாள்:

''எங்களாலே இந்தத் துக்கத்தைத் தாங்கவே முடியலே... எதுக்காக இப்படியொரு தண்டனைன்னே புரியலே... என் பசங்க பெரியவா மேலே உசிரையே வெச்சிருக்கா... காமாட்சி மேலே அபார பக்தியும் நம்பிக்கையும் வெச்சிண்டு இருக்கா... இப்படி நடந்ததுக்கு அப்புறம் அவாளுக்கு எல்லாத்துலேயும் நம்பிக்கை போயிடுத்து... 'நமக்கு ஏம்மா இப்படி நடந்தது? சாமியாவது, பூதமாவது'ன்னு ரொம்ப விரக்தியாப் பேசறா. அவாளுக்கு என்ன சமாதானம் சொல்றதுன்னு எனக்குப் புரியலே... பெரியவாதான்...''

பெரியவா ஆழ்ந்த மௌனத்துக்குப் பின்னர் மிருதுவான குரலில் அருளுரை வழங்கினார்:

''நமக்கு ரொம்பத் துக்கமோ கஷ்டமோ வரச்சே அம்பாள் பேர்லே கோபம் வர்றது சகஜம்... அம்பாள் நம்மைத் தண்டிச்சுக் கஷ்டம் குடுக்கிற மாதிரி தோணினாலும், அவ மேல இருக்கிற பக்தியை விட்டுடக்கூடாது. இன்னும் அதிகமா நம்பிக்கை வைக்கணும். சில சமயம் அம்மா குழந்தையைக் கோவிச்சுக்கறா... ரெண்டு அடி கூட வெக்கறா... அப்ப குழந்தை நிஜமா துக்கப்படறது... 'ஓ'னு அழறது... உடனே, எந்த அம்மா அடிச்சாளோ, அவகிட்டேயே தான் அதுபோறது... அடிச்ச கையையே பிடிச்சிக்கிறது. அவ காலையே கட்டிண்டு அழறது... அதுமாதிரி, அம்பாளுடைய குழந்தைகளான நாமும் துக்கம் வந்தா, அம்பாள்தான் அந்தக் கஷ்டத்தைக் குடுத்தானு நினைச்சா, 'எனக்கேம்மா இந்தத் தண்டனையைக் குடுத்தே, என்னாலே தாங்க முடிய

லையே. உன்னை விட்டா எனக்கு வேறே யார் இருக்கா?'ன்னு அவ பாதத்தையே பிடிச்சுண்டு அழணும்... மறுபடியும் அவகிட்டேதான் போயாகணும்... வேறே வழியே இல்லே...''

நாம் எத்தனை தத்துவ உபதேசங்களைக் கேட்டறிந்திருந்தாலும், நூல்களில் படித்துத் தெரிந்து கொண்டிருந்தாலும், பெரியவாளின் எளிமையான மொழியில் அவற்றை நேரில் கேட்கும்போது, அவை சத்தியப் பிரகடனங்களாகவும், வாழ்க்கைக்கு இன்றியமையாத ஞானோபதேசங்களாகவும் அமைந்துவிடுவது அவரது திருவவதார மகிமைகளில் ஒன்றாகும்.

நாகராஜனைப் பிரிந்தபோது துயரமிகுதியால் அழுதபடி பெரியவாளிடம் சென்று ஆறுதலும் அமைதியும் பெற்றேன். ஐந்தாண்டுகள் கழித்து நெஞ்சில் திகில் ஒன்று பற்றிக்கொள்ள, பயந்து நடுங்கிப்போய், அழுதபடியே பெரியவாளிடம் ஓடியவன், பயம் நீங்கித் திரும்பிவந்த நிகழ்ச்சியும் ஒன்று உண்டு.

அவர் ஒரு மாசித்தர். பல்வேறு அற்புதங்கள் நிகழ்த்திக் காட்டக் கூடியவர். நோய்களைக் குணமாக்கிய பெருமைகளும் அவருக்குண்டு. என் சகோதரர் அறுவைச் சிகிச்சைக்குப் பின்னர் வயிற்று வலியால் துடித்தபோது, உடனடி நிவாரணத்துக்காக அந்தச் சித்தரிடம் அவரை நான் அழைத்துச் செல்ல வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. பூஜை செய்து, அண்ணனுக்கு திருநீறுப் பிரசாதம் தந்தார் சித்தர்.

நான் அவரை நாடி வந்துவிட்டதால் நிச்சயமாகத் தன்னைப் பற்றிக் கட்டுரைகள் எழுதுவேன் என்று எதிர்பார்த்தார் அவர். ஆனால், நான் அதில் ஆர்வம் காட்டவில்லை என்று தெரிந்ததும், அவர்பால் என்னை ஈர்ப்பதற்காக எனக்கு அழைப்புகள் விடுத்தார்.

மீண்டும் ஒரு தவிர்க்க முடியாத சூழ்நிலையில் ஒருநாள் அங்கு சென்றேன். நடுநிசி நேரம். அறைக் கதவைத் தாழிட்டுவிட்டு, எனக்குச் சில அற்புதங்களை நிகழ்த்திக் காட்டினார் அந்தச் சித்தர். வடித்த சாதத்தை உள்ளங்கையில் வைத்துத் தேய்த்தார். அது மீண்டும் அரிசியானது. வெந்த பருப்பைத் தேய்த்துத் துவரம் பருப்பாக்கினார். திருச்சானூர் மஞ்சள் வந்தது. பழநி விபூதி, மீனாட்சி குங்குமம் இப்படி எத்தனையோ... நான் அவற்றில் உற்சாகம் காட்டாமல் அமைதியாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தேன்.

''இவ்வளவு செஞ்சு காட்றேன், ஆச்சரியப்படாம இருக்கீங்களே, மனசுலே என்ன நினைச்சுக்கிட்டிருக்கீங்க?'' என்று சற்றுக் கடுமையாகவே கேட்டார்.

''நீங்கள் இவற்றைக் காட்டிலும் பிரமிக்கத்தக்க அற்புதங்கள் செய்துகாட்டும் சக்தி படைத்தவர் என்று எனக்குத் தெரியும். அதனால்தான் எனக்கு எதுவுமே ஆச்சரியமாகத் தோன்றவில்லை'' என்றேன்.

''எழுத்தாளர் ஆச்சே... அதான் சாமர்த்தியமா பேசறீங்க..'' என்றார். இப்போது அவர் பேச்சில் மட்டுமல்ல, முகத்திலும் கோபம் தெரிந்தது. எனக்குச் சற்று பயமாக இருந்தது. மணிபர்ஸில் இருந்த பெரியவா படத்தைப் பற்றிக் கொள்ளும் பொருட்டு கைகட்டி நின்றேன். நான் வழிக்கு வருவதாக நினைத்துக் கொண்ட அவர், ''உங்களுக்கு உபதேசம் பண்றேன், மந்திரத்தை எழுதிக்குங்க'' என்று கூறி பேப்பரும் பேனாவும் எங்கிருந்தோ வரவழைத்தார்.

''பிடிங்க'' என்று இரண்டையும் என்னிடம் தந்தார். வாங்கிக் கொண்டேன்.

''ம்... எழுதிக்குங்க...''

''வேண்டாங்க... எனக்கு உபதேசம் ஒன்றும் தேவையில்லை...''

''என்னாது... என் உபதேசம் கிடைக்காதான்னு அவனவன் காத்துக்கிட்டு இருக்கான். நீங்க வாணாண்றீங்களே...!'' என்று உரக்கச் சத்தம் போட்டார்.

எனக்கு அடிவயிற்றில் கிலி பிசைந்தெடுத்தது.

''மன்னிச்சுடுங்க'' என்று கூறியபடி, பேப்பரையும் பேனாவையும் மேஜை மீது வைத்தேன்.

அவர் இருக்கையிலிருந்து எழுந்தார். எனக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. பெரியவாளையே தியானம் செய்யத் தொடங்கினேன். அவர் காப் பாற்றினால்தான் உண்டு.

சித்தர் என்னருகில் வந்தார். என் வலது தோள்பட்டையைத் தொட்டார். ''இந்தக் கையாலேதானே எழுதறீங்க.. இதை எழுத விடாம என்னாலே செய்ய முடியும்.. பார்க்கறீங்களா?'' என்று கூறி லேசாக அழுத்தினார். அடுத்த கணம், என் கை சற்று கீழே இறங்கி, தொள தொளவென்று ஆடியது. பெரும் திகில் என்னைப் பற்றிக் கொண்டது. கண்களில் நீர் முட்டி நின்றது. உடம்பே நடுங்கியது. என்ன செய்வது என்று புரியாமல் பதறிப்போனேன். அந்நிலையிலும் 'பெரியவா, பெரியவா' என்று நெஞ்சு நினைவுபடுத்திக் கொண்டிருந்தது.

''என்னைப் பற்றி எழுதறேன்னு இப்பவாவது சொல்லுங்க... கையைச் சரி பண்ணிடறேன்'' என்றார் அந்தச் சித்தர்.

அந்நிலையிலும் நான் வாயைத் திறக்கவேயில்லை!

அந்தச் சித்தர் கேட்ட கேள்விக்கு நான் பதில் சொல்லாமல் நின்றிருந்தாலும், என்னுள்ளே நிலவிய அச்ச உணர்வை என் முகபாவம் அவருக்குக் காட்டிக் கொடுத்திருக்க வேண்டும்.

''பாவம், ரொம்பப் பயந்து போயிருக்கீங்க. நான் கையைச் சரி பண்ணிட றேன். என் சக்தி என்னன்னு இப்பவாவது நீங்க புரிஞ்சுக்கிட்டாப் போதும்'' என்று என் வலது தோள்பட்டையைத் தொட்டு, கையைத் தடவி விட்டார். உடனேயே என் கரம் பழையபடி ஆகிவிட்டதை என்னால் உணர முடிந்தது.

அடுத்தபடி ஏதாவது செய்துவிடப் போகிறாரே என்ற பயத்தில், ''நான் போகலாமா?'' என்று சற்றுத் தயக்கத்துடனேயே கேட்டேன். அவர் சிரித்தார்.

''இப்பப் போயிட்டு வாங்க. பயமெல்லாம் முழுக்கத் தெளிஞ்சப்புறம் இன்னொரு நாள் வாங்க, பேசுவோம்'' என்று கூறிக் கதவைத் திறந்து விட்டார். 'இன்றைக்குத் தப்பித்தோம்' என்று எண்ணியவாறு வீட்டுக்கு விரைந்தேன்.

வீட்டுக்குச் சென்ற பிறகு நான் நடந்தவற்றையெல்லாம் ஒன்றுவிடாமல் சாதாரணமாகத்தான் என் வீட்டாரிடம் சொன்னேன். சித்தர் நிகழ்த்திக் காட் டிய அற்புதங்களைக் கூறி, நான் மடித்து வைத்திருந்த பொட்டலங்களைப் பிரித்து காட்டினேன். அவர்கள் ஆச்சரியப் பட்டுப் போனார்கள். அறைக்குள்



நான் அனுபவித்த வேதனையையும் என்னை வாட்டிய நடுக்கத்தையும் சற்று வேடிக்கையாகவே விமரிசித்தேன். ஆனால், படுத்துக் கொண்ட பிறகு நிம்மதி யாகத் தூங்க முடியவில்லை.

சித்தரின் முகபாவமும், பேச்சும், செய்கையும் சிந்தையைக் குழப்பி என்னை அலைக்கழித்துக் கொண்டிருந்தன. மனதின் அடித்தளத்தில் எங்கோ ஒரு மூலை யில் ஒரு கலக்கம், ஒரு திகில், ஒரு பீதி...! புரண்டு புரண்டு படுத்தேன்... அசதி யில் ஒரு நொடி கண்ணயர்ந்தால், கனவு உலகத்தில் அந்த அறையின் சூழ்நிலை சுழன்றது. மறுகணம் அலறிப் புடைத்துக் கொண்டு ஒரு விழிப்பு... இந்த அரட்டல் புரட்டலிலே பொழுதும் விடிந்து விட்டது.

ஏறத்தாழ ஒரு வாரம், என் அன்றாட அலுவல்களில் ஓர் இயந்திரத்தன்மை நிலவியதற்கு மாறிய என் மனநிலைதான் காரணம் என்று என்னால் உணர முடிந்தது.

படுத்தேன், எழுந்தேன், குளித்தேன், படித்தேன், பேசினேன், உணவருந்தினேன், அலுவலகம் சென்றேன். எழுதினேன், திருத்தினேன், மாலை நண்பர்களோடு ஓட்டலுக்குச் சென்றேன், சினிமா பார்த்தேன், சிரித்தேன், அரட்டை அடித்தேன்... ஆனால், அன்று நடுநிசியில் அந்த அறைக்குள் நடந்தவை ஆழ்மனதில் குடியேறி, என் செயல்களுக்குச் செயற்கை முலாம் பூசி, நெஞ்சை நெருடிக் கொண்டிருந்தன. என் எண்ணங்களின் பின்னணியில், இன்னது என்று அடையாளம் காண முடியாத அச்சமும் கலவரமும் எதிரொலித்துக் கொண்டிருக்க, எதையுமே வெளியில் சொல்ல முடியாமல் நான் நரக வேதனை அனுபவித்துக் கொண்டிருந்தேன். என் அகவாழ்க்கை, புறவாழ்க்கையிலிருந்து அந்நியப்பட்டுப் போய், வேறொருவன் என்னை நிரந்தர நிழலாகத் தொடர்ந்து கொண்டிருப்பது போன்ற ஒரு பிரமையில் சிக்கி, அதனின்றும் மீள வழி தெரியாமல் சிதறுண்டு போனேன்.

நான் எத்தனைதான் மறக்க முயன்றாலும், அந்த நள்ளிரவின் அசாதாரண நிகழ்ச்சிகள் மீண்டும் மீண்டும் என் நினைவுக்கு வந்து, என்னை வாட்டி வதைத்தன. நான் சித்தரிடம் நடந்து கொண்டதும் பேசியதும் முறையற்றவையாக இருந்தால், அதன் விளைவுகள் பயங்கரமானதாக இருக்குமோ என்ற தவிப்பு ஒருபுறம்; அவரிடமிருந்து மீண்டும் அழைப்பு வந்து, நான் போகாமல் இருந்தால் விபரீதங்கள் ஏற்படுமோ என்ற மனக்கொந்தளிப்பு மறுபுறம். நாளுக்கு நாள் இதுவே ஒரு மனநோயாகப் பரவி, பேய் பிடித்தவன் போல் தத்தளித்துக் கொண்டிருந்தேன்.

ஒரு நாள், யாரிடமாவது சொன்னால்தான் அமைதி கிடைக்கும் என்ற நம்பிக்கையில் என் அரிய நண்பன் டன்லப் கிருஷ்ணனின் இல்லம் சென்று அழமாட்டாத குறையாக என் மனநிலையை எடுத்துக் கூறினேன்.

"'பெரியவா இருக்கா, பார்த்துப்பா' என்று எல்லாருக்கும் தைரியம் சொல்லும் நீயே இப்படிப் பயந்துண்டிருக்கியே" என்று என்னைப் பார்த்துப் பரிதாபப்பட்ட நண்பன், எனக்குத் தைரியம் சொன்னான்.

"தைரியமாக இருக்கும்படி புத்தி அறிவுறுத்துகிறது. ஆனால், நெஞ்சு குமுறித் துடிக்கிறது. நான் என்ன செய்ய? எனக்கு உடனே பெரியவாளைப் பார்த்து, எல்லாத்தையும் அவர்கிட்டே சொல்லியாகணும். நீ என்னோட வரணும்... நீதான் கார்ர ஓட்டணும்... உடனே புறப்படு... இப்பவே போயாகணும்" என்று அவசரப்படுத்தினேன்.

அப்போது பெரியவா காஞ்சீபுரத்தில் இல்லை. தமிழ்நாடு - ஆந்திரா எல்லைப் பகுதியில் யாத்திரை செய்து கொண்டிருப்பதை அறிந்து புறப்பட்டுச் சென்றோம்.

இரண்டு மூன்று இடங்களில் காரை நிறுத்திப் பெரியவா இருக்குமிடத்தை விசாரித்துக் கொண்டே போனோம்.

இரவு பதினோரு மணிக்கு மேலிருக்கும்... ஒரு சாலையில் வேகமாகப் போய்க்கொண்டிருந்தபோது "கிருஷ்ணா, அதோ சைக்கிள் கூண்டு வண்டி நிக்கறது. பெரியவா இங்கேதான் தங்கியிருப்பா... காரை நிறுத்து" என்றேன்.

கார் நின்றது. நாங்கள் இறங்கிச் சென்றோம். பாராக்காரர் சுப்பையா மற்றும் ஓரிருவர் மரத்தடியில் உறங்கிக் கொண்டிருந்தார்கள். சாலையை ஒட்டினாற்போல் ஒரு பாழடைந்த சிறு மண்டபம். வாசலில் கண்ணன் உட்கார்ந்திருந்தார் (நான் எத்தனைதான் ஞாபகப்படுத்திப் பார்த்தாலும் பெரியவா அப்போது தங்கியிருந்த இடத்தை இப்போது என்னால் நினைவுகூர முடிய

வில்லை. கண்ணனாலும் தெளிவாகக் கூற இயலவில்லை).

எங்களைக் கண்டதும், ''எங்கேடா ரெண்டு பேரும் இந்த அர்த்தராத்திரியில் வந்தேள்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டார் கண்ணன்.

''அதையெல்லாம் அப்புறம் சொல்றேன். பெரியவாளை நான் உடனே தரிசனம் பண்ணனும். ஒரு முக்கியமான விஷயம் சொல்லணும்'' என்று கூறினேன்.

''பெரியவா படுத்துண்டுட்டா... அதோ அந்த சாக்குத் திரைக்குப் பின்னாலேதான் படுத்திண்டிருக்கா... இத்தனை நேரம் தூங்கிப் போயிருப்பா... நீ ராத்திரி தங்கி, விடியற்கார்த்தாலே பார்த்துட்டுப்போ... இங்கே இடமில்லே... கார்லேயே படுத்துக்கோங்கோ'' என்று கண்ணன் கூறியது பெரும் ஏமாற்றம் அளிப்பதாக இருந்தது.

நாங்கள் காரை நோக்கிப் புறப்பட்ட நேரத்தில் ''யார்ராது கண்ணா? ஸ்ரீதர் வந்திருக்கானா?'' என்று திரைக்குப் பின்னாலிருந்து பெரியவாளின் அபயக் குரல் கேட்டது.

''ஆமாம்'' என்றார் கண்ணன்.

''வரச்சொல்லு.''

கண்ணன் என்னை உள்ளே அழைத்துச் சென்றார். சயனித்துக் கொண்டிருந்த ஆபத்பாந்தவன் எழுந்து உட்கார்ந்தார். கண்ணீர் பெருக, வந்தனம் செய்து எழுந்தேன். உட்காரச் சொன்னர்ர். உட்கார்ந்தேன்.

''என்னப்பா?''

வாத்சல்யமும் வாஞ்சையும் அன்பும் பரிவும் கலந்த அந்த அமுதக் கேள்வி, வான்மழையாகப் பொழிந்து, நெஞ்சைக் குளிர்வித்தது.

நடந்தவற்றை ஒரு விவரமும் விடாமல் விவரித்தேன். வெட்கமின்றி என் பயத்தை விளக்கினேன். பெரும் சஞ்சலத்திலிருந்து என்னை மீட்கும்படி வேண்டினேன்.

எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்டவர், ''நீ ஏன் அவரைப் பார்க்கப் போனே?'' என வினவினார். கேள்வி சுருக்கென்று தைத்தது.

''அண்ணா வயிற்று வலியால் துடிச்சதை என்னால் தாங்க முடியலே. டாக்டர் குடுத்த மாத்திரைகள் வலியைக் குறைக்கலே. ஏதாவது அற்புதங்கள் செய்து, உடனடியா வலியைக் குறைக்க மாட்டாரா என்ற ஆசையில் அவரிடம் போனேன். ஆபரேஷனுக்குப் பெரியவாளிடம் ஆசி வாங்கிக் கொண்ட பிறகு வேறொருவரிடம் சென்றது தப்புதான். அந்தப் பாவத்தை நான் ஒரு வாரமா அனுபவிச்சிண்டிருக்கிறதா தோண்றது. அவர் ஏதாவது பண்ணிடுவாரோன்னு பயமாயிருக்கு. பெரியவாதான் என்னைக் காப்பாத்தணும். அதான் ஓடி வந்தேன்'' என்று நெஞ்சு படபடக்க, நா குழறக் கூறினேன்.

''ஏன் பயப்படறே? அவராலே உன்னை என்னடா பண்ண முடியும்?''

நன்றிக் கண்ணீர் ஊற்றெனப் பெருகி வழிந்தது. நெஞ்சில் கனத்த சுமை சட்டென்று குறைந்தது.

''நீ இனிமே இதுமாதிரி பண்றவா யார்கிட்டேயும் எதுக்கும் போகாதே.''

''சரி...''

''போயிட்டு வா.''

''பன்னண்டு மணிக்கு மேலே ஆயிடுத்து. ராத்திரி தங்கிட்டு, கார்த்தாலே போறேன்'' என்றேன் நான்.

''ஒரு பயமும் இல்லே நீ இப்பவே புறப்பட்டு போ...'' என்று மீண்டும் உத்தரவு தந்தார் பெரியவா.

எழுந்து மீண்டும் வந்தனம் செய்துவிட்டுப் புறப்பட்டேன்.

பூர்ண நிலவொளியில், பூர்ண மன அமைதியுடன் நானும் நண்பனும் பயணித்துக் கொண்டிருந்தோம்.

''அவராலே உன்னை என்னடா பண்ண முடியும்?''

நள்ளிரவில் தோன்றிய பயத்தை, நள்ளிரவிலேயே கிள்ளியெறிந்த கேள்வி இது.

கேள்வியிலேயே விடையும் அடங்கியிருந்த பெரியவாளின் இந்தக் கேள்வி 'நான் இருக்க பயமேன்?' என்று என் உள்ளத்தில் மீண்டும் மீண்டும் ஒலித்து, எதிரொலித்தது.

இதுவே எனக்குப் பாதுகாப்புக் கவசமாகவும் தகர்க்க முடியாத அரணாகவும் அமைந்துவிட்டது. இந்தக் கவசமும் அரணும் அச்சமேயற்ற பெரும் நிம்மதியைத் தந்தன. அந்த மன நிம்மதியில் ஆனந்தம் பிறந்தது. மகிழ்ச்சியுடன் சிரித்துப் பேசிக் கொண்டே இரவோடு இரவாகச் சென்னையை அடைந்தோம்.

வீட்டுக்குள் நுழையும்போது, இருள் அகன்று விடியத் தொடங்கிவிட்டது.

உலக நடப்புக்களிலும் நாட்டு அரசியலிலும் அரசியல்வாதிகளின் நடவடிக்கைகளிலும் காஞ்சிப் பெரியவர் அதிக ஆர்வம் காட்டுவார். ஐந்தே நிமிடங்களில் பத்திரிகைகளில் உள்ள முக்கியமான செய்திகளைத் தெரிந்து கொண்டுவிடுவார். நாளேடுகள் மட்டுமல்ல, வாரப் பத்திரிகைகளையும் புரட்டிப் பார்த்து, தேவையானவற்றை ஒரு நொடியில் படித்து விடுவார். வரலாற்றுக் கதைகளை ஊன்றிப் படிப்பார். எதுவரை வரலாறு, எவையெல்லாம் ஆசிரியரின் கற்பனைகள் என்று பிறரிடம் எடுத்துரைப்பார்.

விகடனில் வரும் என் கார்ட்டூன்களை விமரிசனம் செய்வார். பல சமயங்களில் என் கருத்தை ஏற்றுக்கொள்ள மாட்டார். என் கருத்துக்களுக்கான காரணங்களைக் கேட்பார். எந்தச் செய்திகளின் அடிப்படையில் அவ்வாறு வரைந்தேன் என்று வினவுவார். என் கருத்தில் நான் உறுதியாயிருக்கிறேனா, விருப்பு வெறுப்பின்றி அரசியல் நிலைமைகளை ஆராய்கிறேனா என்று என்னைச் சோதிப்பதற்காகத்தான் இவ்வாறு கேட்கிறார் என்று நான் நினைப்பதுண்டு.

''உனக்குக் காமராஜர் ரொம்ப ஒசத்தி. அவர் பண்றது, பேசறது எல்லாம் எப்பவுமே ரைட். அதான் அவரை ஒரேயடியா தூக்கி வெச்சு கார்ட்டூன்

போடறே, இல்லியா?'' என்று ஒரு சமயம் விமரிசனம் செய்தார். என் நிலையை ஆதரித்து தீவிரமாக 'ஆர்க்யூ' பண்ணுவது என் இயல்பு. 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசி'ப் பழக்கமில்லை. ஆரம்ப நாட்களில் பெரியவாளிடம் பேசும்போதும் எனக்கு அந்தப் புத்தி வந்துவிடும்.

''மத்த பாலிட்டிஷன்ஸைப் பார்க்கிறப்ப காமராஜ் ஒரு தனி மனுஷனாகத் தோண்றார். அவர்கிட்டே எனக்குப் பல விஷயங்கள் பிடிச்சிருக்கு...'' என்று என் 'கட்சி'யை எடுத்துக் கூறினேன். சிரித்துக் கொண்டார்.

ஒரு நாள் திடீரென்று ''இந்த வாரம் என்ன கார்ட்டூன் போட்டிருந்தே?'' என்று பெரியவா கேட்டார்.

நான் போட்ட கார்ட்டூனைப் பற்றிக் குறிப்பிட்டேன்.

''இல்லியே... அப்படி ஒரு கார்ட்டூனை நான் பார்த்ததா ஞாபகமில்லியே.. வேறே என்னமோன்னா போட்டிருந்தே...'' என்று மறுத்தார் பெரியவா...

அப்போதுதான் எனக்கு நினைவு வந்தது. நான் குறிப்பிட்டது அன்று வரைந்து கொடுத்துவிட்டு வந்திருந்த, அடுத்த வெள்ளிக்கிழமை வெளிவரவிருக்கும் கார்ட்டூன்! எனது இந்தக் குழப்பத்தைக் கூறியபோது பெரியவா வாய் விட்டுச் சிரித்தார்.

ஒரு சமயம் மயிலாப்பூரிலிருந்து பெரியவா அடையாறுக்கு நடந்து சென்று கொண்டிருந்தார். உடன் சென்றவர்களின் கோஷ்டியில் நானும் இருந்தேன். இம்மாதிரி நடந்து செல்லும்போது பெரியவா ஊர் விவகாரங்கள் குறித்து நிறையப் பேசுவார். எல்லாமே அவருக்குத் தெரிந்திருக்கும். நமக்குத்தான் வியப்பாக இருக்கும், 'இதெல்லாம்கூடப் பெரியவாளுக்குத் தெரிந்திருக்கிறதே...' என்று. இம்மாதிரி நடைப்பயணங்களில் எத்தனையோ பேரிடம் பேசிய எத்தனையோ பேச்சுக்களை நான் கேட்டிருக்கிறேன். நானும் பேச்சுக்களில் கலந்து கொண்டிருக்கிறேன். ஆனால், அவற்றில் பல இப்போது நினைவில் இல்லை. அனைத்தையும் குறித்து வைத்துக்கொள்ளாமல் இருந்துவிட்டோமே என்று இப்போது நினைத்து வருந்துகிறேன். பெரியவாளைப் போன்ற ஒரு 'Interesting and engaging conversationalist'-ஐ யாரும் சந்தித்திருக்க முடியாது. உலகம் கண்டறியாத ஒரு மகான், மாமுனிவர், தவயோகி, பிரும்மஞானி, ஜீவன்முக்தர், தம்மை எளியவராக்கிக் கொண்டு, எப்படி நம் நிலைக்கு இறங்கி வந்து, ஒரு சாதாரண மனிதரைப் போல் பேசிப் பழகி, நம்மிடையே நடமாடிக் கொண்டிருந்தார் என்று நினைத்துப் பார்க்கும்போது உள்ளம் விம்மிப் புடைக்க, ஆனந்தக் கண்ணீர் பெருகுகிறது.

அன்று அடையாறுக்கு நடந்து செல்லும்போதும் காமராஜ் பற்றிப் பேசினார் பெரியவா. ''காமராஜ் என்ன அலாதி? அவரை ஏன் ஒசத்திங்கிறே?'' என்று கேட்டார் திடீரென்று.

''ஒவ்வொருவனும் தூய்மையான மனசோட, நல்லவனா, ஒழுக்கமுள்ளவனா இருக்கணும்னு அவர் நினைக்கிறார் அரசியல்லே இருந்தாலும் பெரியவா சொல்றதைத்தான் அவரும் சொல்றார்...'' என்றேன்.

''ஏன் அப்படிச் சொல்றே?''

''அவர் 'சத்திய சபா'ன்னு ஒண்ணு ஆரம்பிச்சிருக்கார். அதுக்குக் கிருபானந்தவாரியார்தான் தலைவர். போன வாரம் தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் 'இனாகுரேஷன்' ஆச்சு. அப்ப காமராஜ் பேசறப்ப, 'நம்ம இளைஞர்களெல்லாம் நல்ல ஒழுக்கத்தோட வளரணும். அதுக்கு நம்ம நாட்டுப் பழைய கதைங்களை அவங்களுக்கு எடுத்துச் சொல்லணும். புராணங்

களையெல்லாம் தெருக்கூத்து மூலமா எடுத்துச் சொல்லணும். அந்தக் கதைங்கள்லே நல்ல நீதியெல்லாம் எடுத்துச் சொல்லியிருக்காங்க. அரிச்சந்திரன் நாடகத்துலே 'பொய் சொல்லக்கூடாது... என்ன கஷ்டம் வந்தாலும் உண்மையையே பேசணும்'ங்கிற கருத்தை ரொம்ப வலியுறுத்திச் சொல்லியிருக்காங்க... அந்த நாடகத்தைச் சின்ன வயசுலே பார்த்தப்ப மோகன்தாஸ் காந்திக்கு வாழ்க்கைலே உண்மையையே பேசணும்ங்கிற எண்ணம் ஆழமா பதிஞ்சு போச்சு... அதனாலே உலகத்துக்கு ஒரு மகாத்மா கிடைச்சாரு... இதுமாதிரியான நல்ல எண்ணங்களையும் நல்லொழுக்கங்களையும் போதிக்கிற விஷயங்களைச் சின்னவங்க மனசுலே பதிய வைக்கிற மாதிரியான நாடகங்களைப் போட்டுக் காட்டணும்... தெருக்கூத்துக் கலையை நல்லா வளர்க்கணும்...' என்றெல்லாம் பேசினார். பெரியவாளும் நம்ம பழைய கிராமியக் கலைகளெல்லாம் மறுபடியும் செழிக்கச் செய்யணும்னுதானே சொல்றா. அதுக்காக சதஸ்லே புராதனக் கலை நிகழ்ச்சிகளெல்லாம் நடத்தறா...'' என்று நான் உணர்ச்சியுடன் பேசி முடித்தேன்.

''ஓ, அதனாலேதான் காமராஜ் நான் சொல்றதைத்தான் சொல்றார்ங்கறயா?'' என்று கேட்டுப் புன்னகைத்தார்.

**கா**மராஜரை நான் சந்திக்கும்போதெல்லாம், ''பெரியவங்க எப்படியிருக்காங்க... இப்ப எங்கே இருக்காங்க?'' என்று அவர் தவறாமல் விசாரிப்பார். அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, ''நீங்க ஒரு சமயம் வந்து பெரியவங்களைத் தரிசனம் பண்ணுங்களேன்...'' என்று அழைப்பேன். ''எனக்கும் அந்த எண்ணம் இருக்கு... ஆனா, சந்தர்ப்பம் சரியா அமையமாட்டேங்குது...'' என்று கூறுவார்.

ஒரு சமயம் காஞ்சிபுரத்தில் தேர்தலுக்கு நிதி வசூல் செய்யும் கூட்டம் ஒரு சினிமா தியேட்டரில் நடந்தது. அதில் காமராஜ் கலந்துகொண்டார். அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு அவரிடம் சென்று ''இப்பப் பெரியவங்க காஞ்சிபுரத்துலேதான் இருக்காங்க... மீட்டிங் முடிஞ்சதும் வந்தீங்கன்னா, அவங்களைத் தரிசனம் பண்ணலாம்... வாங்களேன்'' என்று ஆர்வத்தோடு அழைத்தேன்.

''இன்னிக்கு வேண்டாம். நான் தேர்தல் விஷயமா வந்திருக்கேன். இந்தச் சமயத்துலே பெரியவரைப் பார்க்கிறது சரியாயிருக்காது. வேறே வேலையா வரச்சே அவரையும் பார்த்துட்டு வந்தோம்னு இருக்கக்கூடாது... அவரைப் பார்க்கறதுக்குன்னு வந்தாத்தான் மரியாதையா இருக்கும்... என்ன சொல்றீங்க?'' என்று கூறி, ஸ்ரீ மடத்துக்கு வராமலே சென்று விட்டார்.

அவர் கூறியதில் நியாயம் இருந்தாலும், ஏதோ ஒரு சாக்குச் சொல்லித் தட்டிக்கழிக்கிறாரோ என்று ஒரு கணம் நினைத்து வருந்தினேன். பெரியவாளிடம் காமராஜ் எத்தனை மதிப்பும் மரியாதையும் வைத்திருந்தார் என்பதை அறிந்துகொள்வதற்கு பின்பு ஒரு சமயம் எனக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது.

காமராஜ் முதலமைச்சர் பதவியைத் துறந்துவிட்டு, காங்கிரஸ் தலைவராக டெல்லிக்குச் சென்றதைக் குறிப்பிட்டு ஒருவர், ''நீங்க பெரிய தியாகம் செய்திருக்கீங்க...'' என்று பாராட்டியிருக்கிறார். அதைக் கேட்ட காமராஜ், ''என்னைப் புகழறீங்களே, தியாகம்னா என்னன்னு தெரியுமா உங்களுக்கு? அது புரியணும்னா காஞ்சிபுரம் போங்க. காஞ்சிப் பெரியவரு மடாதிபதி பதவியைத் துறந்துட்டு, 'தனியாப் போறேன்'னு ஒரு நாள் மடத்தை விட்டுட்டு நடந்து போனாரே, அதுக்குப் பேர்தான் தியாகம். சின்னப் பதவியை விட்டுட்டுப் பெரிய பதவிக்குப் போறது தியாகம் இல்லே. ராமன்கூட சின்னம்மா சொல்லித்

தான் ராஜ்ஜியத்தை விட்டுப் போனான். பெரியவங்களோ யார் சொல்லியும் போகலே. அவராவே எல்லாத்தையும் விட்டுட்டுப் போனாரு...'' என்று பதில் கூறியதாக நான் அறிந்தபோது அவர் பக்தியைக் கண்டு வியந்தேன்.

மறைவதற்கு சில மாதங்களுக்கு முன் காமராஜ், பெரியவாளைக் கலவையில் தரிசனம் செய்துவிட்டு வந்த நிகழ்ச்சி எனக்குப் பெரும் மகிழ்ச்சியை அளித்தது.

காமராஜ் தரிசனத்துக்கு வரப் போகும் செய்தியை அறிந்த பெரியவா உடன் இருந்த பையன்களிடம் ''அவருக்கு உடம்பு சரியில்லே... அவரை ரொம்பத் தூரம் நடக்க வைக்காதீங்கோ... கார் எவ்வளவு தூரம் வர முடியுமோ, அத்தனை தூரம் வர்றதுக்கு ஏற்பாடு பண்ணுங்கோ... நடக்கிற வழிலேயும் கல்லு முள்ளு இல்லாம செதுக்கிச் சீர்பண்ணி வெய்யுங்கோ...'' என்று கூறியிருக்கிறார். அவர் உட்காருவதற்கும் முன்னேற்பாடாக ஒரு ஸ்டூல் போட்டு வைக்கச் சொல்லியிருக்கார்.

திருவண்ணாமலையிலிருந்த காமராஜுக்குப் பெரியவாளைத் தரிசிக்க வேண்டும் என்று தோன்றியிருக்கிறது. உடனே தேசபக்தரும் பெரியவா பக்தருமான அரக்கோணம் ராஜகோபாலனுக்குத் தந்தி கொடுத்தார். அவர் மாலையில் காமராஜரைத் தரிசனத்துக்கு அழைத்து வந்திருக்கிறார். பெரியவா உட்காரும்படி சைகை காட்டியும் காமராஜ் உட்காரவில்லை. நின்று கொண்டேதான் இருந்திருக்கிறார். இருவரும் பேசிக்கொள்ளவில்லை. விடைபெறும் முன் காமராஜ் ''ஜனங்களெல்லாம் கஷ்டமில்லாம நல்லா இருக்கணும்... பெரியவங்க ஆசீர்வாதம் பண்ணணும்...''னு கேட்டுக் கொண்டார். பெரியவாளும் கையைத் தூக்கி ஆசீர்வாதம் செய்தார். கார் பயணத்தின்போது பெரியவா கொடுத்த பிரசாதத்தைக் காமராஜ் சட்டை பாக்கெட்டுலேயோ, கார் ஸீட்டுலேயோ வைக்கவில்லையாம். ராஜகோபாலன் வைத்துக் கொள்வதாகக் கூறியபோதும் தரவில்லையாம். அரும்பெரும் பொக்கிஷமாகப் போற்றி அதை, கையிலேயே வைத்துக்கொண்டு வந்தாராம். ஒரு சமயம் அரக்கோணம் ராஜகோபாலன் இந்த விவரங்களை என்னிடம் கூறினார்.

**வ**ருடம் 1958. நவம்பர் மாதம். நுங்கம்பாக்கத்தில் பெரியவா முகாமிட்டிருந்த நேரம். ஒரு நாள் இரவு பத்து மணிக்குக் கால் பயணமாக மவுண்ட் ரோட்டில் சென்று கொண்டிருந்தார். பத்துப் பதினைந்து பேர் உடன் சென்றோம். பெரியவா 'இந்து' பத்திரிகை அலுவலகத்துக்கு விஜயம் செய்யப் போவதாகவும், இரவில் போக்குவரத்துத் தொந்தரவு அதிகமிராது என்று அந்த நேரத்தில் பயணம் மேற்கொண்டதாகவும் அறிந்தேன்.

எல்.ஐ.சி. கட்டடம் அருகே வந்தபோது – கண்ணன் 'இதுதான் புதுசா வந்திருக்கிற எல்.ஐ.சி. அடுக்குமாடிக் கட்டடம்...' என்று பெரியவாளிடம் கூறினார். சற்று நின்ற பெரியவா, என்னைப் பார்த்து ''இதுலே மொத்தம் எத்தனை மாடிகள்..?'' என்றார். நான் தவறாகச் சொல்லிவிடக்கூடாதே என்பதற்காக, ''சரியாத் தெரியாது...'' என்றேன். ''எண்ணிப் பார்த்துட்டு வா...'' என்று கூறி

விட்டு நடக்கத் தொடங்கினார்.

நான் இரண்டு மூன்று முறை எண்ணிப் பார்த்தேன். பாதி எண்ணும்போதே கணக்கு விட்டுப்போய், மீண்டும் கீழிருந்து எண்ணும்படி நேர்ந்தது. ஓரிரு முறை மேலிருந்து கீழும் எண்ணிப் பார்த்தேன். ஒருமுறை பன்னிரண்டும், அடுத்தமுறை பதின்மூன்றும் வந்தது. திரும்பிப் பார்த்தேன். அதற்குள் பெரியவா வெலிங்டன் டாக்கீஸ் வரை சென்று விட்டிருந்தார்... நான் ஓடிச் சென்று, மூச்சு இரைக்க நின்றேன்.

''எண்ணிட்டியா... எத்தனை..?'' என்று பெரியவா கேட்டார். ''கீழேயிருந்து பதிமூணு, டெர்ரஸைச் சேர்த்தா பதினாலு... ஆனா, மாடிகள் பன்னண்டுதான் வர்றது...'' என்றேன். பெரியவா சிரித்துக் கொண்டார்.

''பன்னண்டு மாடிகளா..? இந்த வாரம் ஆனந்தவிகடன் மேலட்டைலே வந்திருக்கிற இந்த பில்டிங்லே பதினெட்டு மாடிகள் போட்டிருக்கே... நீ பார்த்தயோ...?'' என்று கேட்டார். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. ''நான் எண்ணிப் பார்க்கலே...'' என்றேன். ''அப்புறம் போய்ப் பாரு...'' என்று நடந்தபடியே கூறினார். கண்ணன் என்னைப் பார்த்துச் சிரித்தார்.

நான் சற்றுப் பின்தங்கினேன். அந்த அதிர்ச்சியிலிருந்து மீளுவது அத்தனை எளிதாக இருக்கவில்லை. ஒரு பத்திரிகையைப் புரட்டுவதிலும், அதில் வரும் செய்திகளைப் படிப்பதிலும், படங்களைப் பார்ப்பதிலும் சாதாரண வாசகருக்கும் பெரியவாளுக்கும் எத்தனை வேற்றுமை இருக்கிறது என்று எண்ணி வியந்தேன். மேலட்டையில் பிரசுரமாகியிருந்த அந்த நகைச்சுவையைப் படித்தவர்கள் சிரிப்பு வந்திருந்தால் சிரித்துவிட்டுப் பத்திரிகையைப் புரட்டியிருப்பார்கள்-சிரிப்பு வராதவர்கள், சிரிக்காமலேயே புரட்டியிருப்பார்கள்! எத்தனை பேர், 'அந்தக் கட்டடத்தில் எத்தனை மாடிகள் வரையப்பட்டிருக்கின்றன' என்று பொறுமையாக எண்ணிப் பார்த்திருக்கப் போகிறார்கள்..? பிறரைச் சொல்வானேன்... நானே பார்க்கவில்லை (அந்த 'ஜோக்' என்னுடையது. படம் கோபுலு வரைந்தது!).

எதையுமே ஆராய்ந்து நோக்கும் பெரியவாளின் அபூர்வ சக்தி அதிசயிக்கத் தக்கதென்றால், அவருடைய நகைச்சுவை உணர்வு மிகவும் ரசிக்கத் தக்கதாக - லலிதமாக இருக்கும்.

பெரியவா சென்னையையடுத்த நூம்பல் கிராமத்தில் தங்கியிருந்தபோது, டாக்டர் திருமூர்த்தியின் இளைய மகன் ஸ்ரீநிவாசமூர்த்தி தனது பிறந்த நாளன்று பெரியவாளைத் தரிசிக்கச் சென்றார். என்னையும் அழைத்தார், சென்றேன்.

சுமாரான கூட்டம். ஸ்ரீநிவாசமூர்த்தி தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டு இரண்டு, மூன்று முறை 'எனக்கு இன்னிக்கு பர்த் டே...', 'எனக்கு இன்னிக்கு பர்த் டே...' என்று ஆங்கில வார்த்தையைப் பயன்படுத்திக் கூறிக் கொண்டிருந்தார். சாதாரணமாகத் தரிசனத்துக்கு வருபவர்கள், ஜன்மநட்சத்திரம் என்றோ, பிறந்த நாள் என்றோதான் கூறுவது வழக்கம்.

அன்று ஸ்ரீநிவாசமூர்த்தி விபூதி குங்குமப் பிரசாதம் பெற்றுக்கொள்வதற்கு, ஏறக்குறைய முக்கால் மணிநேரம் காத்திருக்க வேண்டியதாயிற்று. பெரியவா சிலருடன் ஸ்ரீமடத்தைப் பற்றிய முக்கிய விஷயமாகப் பேசிக் கொண்டிருந்தார். வேறு சிலரிடம் அவர்கள் ஊர்ச் செய்திகளைக் கேட்டறிந்து கொண்டிருந்தார். இடையிடையே சிலருக்குப் பிரசாதம் அளித்துக் கொண்டிருந்தார். கடைசியாக ஸ்ரீநிவாசமூர்த்தியைப் பார்த்துச் சிரித்தவாறே, ''இந்தா... உனக்கு என்னோட பர்த்டே ப்ரசென்ட்..'' என்று விபூதி, குங்குமம், கற்கண்டுப் பிரசாதத்தை அளித்து



எடுத்துக்கொள்ளச் சொன்னார்.

நுங்கம்பாக்கத்தில் வீதிவலம் வந்துகொண்டிருந்தார் பெரியவா. ஒவ்வொரு வராக வந்து தங்கள் இல்லத்துக்கு எழுந்தருளும்படி வேண்டிக் கொண்டிருந்த தையும், அவர்களுடைய அழைப்பைக் கருணையுடன் ஏற்றுப் பெரியவா அவர்கள் இல்லங்களுக்குச் சென்று திரும்பியதையும் ஒரு சிறுவன் பார்த்துக் கொண்டேவந்தான். அவனுக்குப் பத்துப் பன்னிரண்டு வயது இருக்கும். வறுமையே துணையாக வளர்ந்து கொண்டிருப்பவன் என்பது தெரிந்தது. பெரியவாளைத் தானும் தன் இல்லத்துக்கு அழைக்க வேண்டும் என்ற அவா அவனுக்கும் பிறந்தது.

''சார், எங்காத்துக்கு வாங்கோ...'' என்று அடிக்கடி அழைத்துக் கொண் டிருந்தான். அருகிலிருந்தவர்கள் அவனைப் பெரியவாளுக்குத் தெரியாமல் விரட்டிக் கொண்டிருந்தார்கள். அவன் விடுவதாக இல்லை. பத்தடிக்கு ஒருமுறை பெரியவாளை நெருங்கி, ''சார், எங்காத்துக்கு வாங்கோ...'' என்று மன்றாடிக் கொண்டிருந்தான். ''சார், சார்...'' என்று பெரியவாளை அவன் விளித்துக் கொண்டிருந்தது எல்லோருக்கும் வேடிக்கையாக இருந்தது.

தெருமுனை வந்தது. பெரியவா வலப்புறமாகத் திரும்பிவிடப் போகிறாரே என்று கவலையடைந்த அந்தச் சிறுவன், ''சார், இந்தப் பக்கம் வாங்கோ... எங்காத்துக்கு வந்துட்டுப் போங்கோ...'' என்று கெஞ்சினான்.

பெரியவர், ''கண்ணா, சார் வீடு எங்கேயிருக்குனு விசாரிச்சிண்டு, அந்தப்

பக்கமா போ...'' என்று கூறினார். அந்தச் சிறுவனின் வீடு பக்கத்துத் தெருவில் தான் இருந்தது. அந்த ஏழைச் சிறுவனின் எளிமையான இல்லத்துக்குச் சென்று, அவன் ஆசையைப் பூர்த்தி செய்துவிட்டு வீட்டிலிருந்தோருக்கு ஆசி வழங்கி விட்டு வந்தார் பெரியவா.

ஓர் இரவு, பெரியவா நகர்ப்புறப் பயணமாக மீனம்பாக்கம் விமான நிலையம் நோக்கிப் போய்க் கொண்டிருந்தார். எனக்கு உடம்பு வலி, கடும் காய்ச்சல். முடியாவிட்டாலும் ஆர்வம் காரணமாக உடன் நடந்து கொண்டிருந் தேன். வீட்டுக்குத் திரும்பிச் சென்றுவிடும்படி கண்ணன் சொல்லியும் நான் கேட்கவில்லை. அவர் பெரியவாளிடம், ''இவனுக்கு ஜுரம்... அவ்வளவு தூரம் நடந்து வராதே, திரும்பிப் போன்னா கேக்கமாட்டேங்கிறான்...'' என்று 'கோள்' சொன்னார். பெரியவா என்னைப் பார்த்தார். ஒன்றுமே சொல்ல வில்லை. நான் நடந்தேன்.

விமானநிலைய வாசலில் நின்றிருந்த அதிகாரிகள் அழைக்க, பெரியவா விமானநிலையத்துக்குள் சென்றார். உடன் வந்த அனைவரும் கூடவே சென் றோம். பெரியவா விமானத்துக்குள் சென்று பார்ப்பதற்கு ஏற்பாடாயிற்று. எங் களை 'இங்கேயே இருங்கோ... என்கூட விமானத்துக்குள் வர வேண்டாம்...' என்று பெரியவா சைகை காட்டினார். நாங்கள் அங்கேயே அமர்ந்து விட் டோம்.

ஆனால், எப்போதும் காமிராவுடனேயே இருக்கும் 'வால்டாஸ்' கிருஷ்ண சாமிக்குப் பெரியவா விமானத்துக்குள் இருப்பதுபோல் படம் எடுத்துவிட வேண்டும் என்று ஓர் அடக்க முடியாத துடிப்பு. புறப்பட்டான். ''பெரியவா சொன்னப்புறமும் போகாதே...'' என்று தடுத்துப் பார்த்தேன். கேட்கவில்லை. போனான். விமானத்திலிருந்து இறங்கி வரும்போது, அழுதுகொண்டே வந்தான்.

நான் காரணத்தை விசாரித்தேன்.

இவன் பெரியவாளுக்குத் தெரியாமல் விமானத்துக்குள் சென்று, அதிகாரி களோடு பேசிக் கொண்டிருந்தபோது பெரியவாளை போட்டோ எடுத்திருக் கிறான். ஃப்ளாஷ் லைட்டைப் பார்த்துவிட்டுப் பெரியவா திரும்பி, 'நான் சொன்னப்புறமும் ஏன் வந்தே?' என்பதுபோல் கிருஷ்ணசாமியைப் பார்த்திருக் கிறார். அப்போதே அவனுக்கு சப்தநாடியும் ஒடுங்கிவிட்டன. ''ஏர்போர்ட் உள்ளே, அதுலேயும் விமானத்துக்குள்ளே பர்மிஷன் இல்லாம போட்டோ எடுக்கக் கூடாதுன்னு உனக்குத் தெரியாதா..?'' என்று பெரியவா கேட்டதும், அவன் அழுதேவிட்டான். ''அப்படி ஒரு 'ரூல்' இருக்கு இல்லியா..?'' என்று அதிகாரிகளிடம் கேட்டுவிட்டு, ''என்கூட வந்திருக்கான்னு பேசாம இருந்தேளா..?'' என்றும் பெரியவா கேட்டதும், அவர்கள் பதில் சொல்ல முடியாமல் சங்கடப்பட்டிருக்கிறார்கள்.

கிருஷ்ணசாமியைப் பார்த்து, ''எக்ஸ்போஸ் பண்ணின ரோலைக் கழற்றி இவாகிட்டே குடுத்துட்டு வா...'' என்று பெரியவா சற்றுக் கடுமையாகக் கூறி யிருக்கிறார்.

கருணை காட்டும் பேரருளாளர், கண்டிப்பும் கறாராகவும் இருந்திருக்கிறார். நான்கு பேர் நடுவில் நமக்கு மானம் போகும். நெஞ்சு குமுறும். அழுகையும் வரும்.

விமானநிலையத்திலிருந்து புறப்பட்டு, அருகிலுள்ள விமான நிலைய வானிலை ஆய்வுக் கூடத்துக்கு பெரியவா விஜயம் செய்தார். நாங்களும் உடன்

சென்றோம்.

அங்கிருந்த அதிகாரிகள் அவரவர்களுக்கு உரிய பகுதிக்குப் பெரியவாளை அழைத்துச் சென்று, பல்வேறு நுணுக்கங்களை விளக்கிக் கொண்டிருந்தனர்.

இளமைத் துடிப்புடன் காணப்பட்ட ஒரு விஞ்ஞானி மேல்நாடு சென்று பயிற்சி பெற்று அண்மையில் சென்னை திரும்பியதாகத் தம்மை அறிமுகப் படுத்திக் கொண்டு ஆர்வமுடன் விளக்கமளிக்க முன்வந்தார். விமானம் விண்வெளியில் உயரச் செல்லச் செல்ல, எதிர்கொள்ளும் தட்பவெப்ப மாற்றங் களை விவரித்துவிட்டு, ஒரு குறிப்பிட்ட சூழலுக்குச் சென்றதும், விமானத்தின் ஒலி பூமியை அடைவதில்லை என்று கூறினார். அப்போது பெரியவா, 'ஏன் அப்படி?' என்று அறியும் பொருட்டு ஓரிரு கேள்விகள் கேட்டபோது, அதை அறிவியல்பூர்வமாக ஆங்கிலத்தில் விளக்கினால் பெரியவாளுக்குப் புரியாது என்று எண்ணியோ என்னவோ, சரியாக விளக்க முடியாமல் மென்று விழுங் கினார். பெரியவா அவரிடம் "நீ குறிப்பிடற உயரம் Stratosphereதானே..?" என்று கேட்டார்.

அந்த இளம் விஞ்ஞானியின் முகம் சட்டென்று வெளிறிப்போயிற்று. "ஆமாம்..." என்று கூறிவிட்டு, அதன் தொடர்பாக பெரியவா சங்கடமான வேறு கேள்விகள் ஏதாவது கேட்டுவிடப் போகிறாரே என்ற அச்சத்தில் அந்த இடத்தைவிட்டு மெள்ள ஒதுங்கிக்கொண்டார்!

**மீ**னம்பாக்கம் வானிலை ஆய்வுக்கூடத்தைச் சுற்றிப் பார்த்து விட்டுப் பெரியவா புறப்பட்டபோது கிட்டத்தட்ட இரவு பன்னிரண்டு மணிக்கு மேலாகிவிட்டது.

அடுத்து எங்கே செல்லப் போகிறார் என்று நான் கண்ணனிடம் கேட்டேன். 'யாருக்குத் தெரியும்?' என்பதுபோல் கையை விரித்துவிட்டார் அவர். இன்னும் எத்தனை தூரம் நடக்க வேண்டியிருக்குமோ என்று கவலைப்படத் தொடங்கி விட்டேன். ஓரடி எடுத்து வைப்பதுகூட எனக்குக் கடினமாயிருந்தது. காய்ச்ச லும் உடல் நோவும் கண்ணெரிச்சலும் என்னை ஒரு நோயாளியாக்கிவிட்டிருந் தன.

நாங்கள் வயல்களுக்குக் குறுக்கே நடந்து கொண்டிருந்தோம். பெரியவா சட்டென்று திரும்பி "இங்கே பழவந்தாங்கல் கிராமம் எங்கே இருக்கு தெரியுமா?" என்று கேட்டார். எங்களில் ஒருவருக்கும் தெரியவில்லை. ஒருவர் முகத்தை மற்றொருவர் பார்த்துக் கொண்டு 'திருதிரு'வென்று விழித்தோம்.

"அதோ ஒருத்தர் வராரே, அவரைக் கேட்டுப் பார்" என்றார். கண்ணன் கேட்டார். "தெரியலீங்க, அதோ விளக்கு வெளிச்சம் தெரியுதே, அதுதான் புதுசா வந்துகிட்டிருக்கிற நங்கநல்லூர் காலனி. அங்கே போய்க் கேட்டுப் பார்க்கலாம்" என்று சொல்லி அவரும் எங்களுடன் சேர்ந்து நடக்க ஆரம்பித்

தார்.

''வயசான கிராமவாசி யாராவது தென்பட்டால் விசாரிச்சுப் பார். அவருக்குத் தெரிந்திருக்கும்'' என்று பெரியவா சொல்லவே, சற்றுத் தொலைவில் தென்பட்ட முதியவர் ஒருவரிடம் சென்று ''இங்கே பழவந்தாங்கல் கிராமம் எங்கே இருக்கு?'' என்று எங்களில் ஒருவர் கேட்டார்.

''தோ, இதான் பழவந்தாங்கல்'' என்று அவர் கூறியதும் நாங்கள் எல்லாரும் நன்றாகவே அசடு வழிந்தோம். சென்னைப் பட்டணத்துக்கு இத்தனை அருகில் இருந்து கொண்டு எங்களில் ஒருவருக்கும் 'பழவந்தாங்கல்' கிராமம் தெரியவில்லை. பெரியவாளுக்குத் தெரிந்திருக்கிறது. எங்களுக்கு அதைத் தெரியப் படுத்துவதற்காகத்தான் தமக்குத் தெரியாதது போல் விசாரித்திருக்கிறார் என்று புரிந்து கொண்டோம். அவருக்கு விமானநிலையத்துக்குரிய கட்டுப்பாடுகள் தெரிந்திருக்கிறது; விண்வெளி அறிவியல் தொடர்பான Stratosphere தெரிந்திருக்கிறது; ஓரிடத்தின் மிகப் பழமையான பெயரும் தெரிந்திருக்கிறது!

அன்று இரவு பெரியவா ஓடுவேய்ந்த ஒரு பழைய இல்லத்தின் தாழ்வாரத்தில் தங்கினார். என் உடல் உபாதையிலும் களைப்பிலும் அசதியிலும் பசியிலும் அது எனக்குச் சொர்க்கமாயிருந்தது. யாரோ பழமும் பாலும் தந்து என் பசியாற்றினார். அங்கு வந்த உள்ளூர்வாசிகளிடம் பெரியவா பேசிக்கொண்டிருந்ததைக் கேட்கும் சக்தியற்றுப்போன என்னை உறக்கம் தழுவிக்கொள்ள, ஓர் ஓரமாகப் படுத்துக் கண்ணயர்ந்துவிட்டேன்.

நான் கண்விழித்தபோது நன்றாக விடிந்து விட்டிருந்தது. உடலும் மனமும் மிகத் தெம்பாக இருந்தன. முதல் நாள் இரவு என்னை வாட்டிய காய்ச்சல் மாயமாய் மறைந்து, தலைவலி நீங்கிப் புத்துணர்வு பெற்றிருந்தேன். பெரியவாளுக்கு வந்தனம் செய்துவிட்டு, உத்தரவு பெற்றுக்கொண்டு ரயிலேறி இல்லம் வந்து சேர்ந்தேன்.

அன்று இரவு அங்கு பெரியவா தங்கியதன் பலனாக நங்கநல்லூர் அதிசயிக்கத்தக்க வளர்ச்சி பெற்றதுடன், அங்கு புதிதாகத் தோன்றிய ரயில் நிலையம் 'பழவந்தாங்கல்' என்ற பழைய பெயரை பெற்றதாகவும் நான் கருதுகிறேன். அந்தப் புனித பூமியில், அடுத்தடுத்து தெய்வச் சிலைகள் கண்டெடுக்கப் பட்டன; புதுப்புது ஆலயங்கள் தோன்றத் தொடங்கின. பழைய கோயில்களும் புதுப்பிக்கப்பட்டன.

பழவந்தாங்கலில் படுத்துறங்கிய அந்த இரவில் என் உடல்நிலையில் ஏற்பட்ட மாற்றத்தை ஓர் அற்புத நிகழ்ச்சியாக நான் எண்ணிப் பார்க்கவேயில்லை. இதுபோன்ற சாதாரண, இயல்பான நிகழ்ச்சிகளைப் பெரிய அதிசயமாகவோ அற்புதமாகவோ நான் பிறரிடம் எடுத்துக் கூறிப் பரவசப் பட்டதுமில்லை.

பின்னர் ஏற்பட்ட ஓர் அனுபவம், அன்பில் விளையும் அருளை எனக்கு அடையாளம் காட்டியது.

ஐந்தாறு ஆண்டுகளுக்குப் பின்னர் கடுமையான வயிற்று வலியால் அவதிப் பட்டேன். சாப்பிடும் முன்பும் வலிக்கும், சாப்பிட்ட பின்னரும் வலிக்கும். என் அலுவல்களில் கவனம் செலுத்த முடியாதபடி அது என்னை வாட்டி வதைத்தது. ரங்கா நர்சிங்ஹோம் டாக்டர் பாலாவிடம் சென்றேன். வழக்கமான பரிசோதனைகள் நடைபெற்றன. நோய் என்னவென்பதைக் கண்டுபிடித்து விட்டார். குடல் புண். சீரியஸ்.

''நெக்லெக்ட் பண்ணக் கூடாது. ஆபரேஷன் செய்தே ஆகவேண்டும்.

அதுவும் உடனடியாக. இந்தச் சனிக்கிழமையே செய்துவிடுகிறேன்'' என்று கூறினார் டாக்டர் பாலா. அவர் மீது எனக்கு பெரும் நம்பிக்கை உண்டு. ''சரி'' என்று கூறிவிட்டேன்.

அன்று தைரியமாக ஒப்புக்கொண்டு வந்துவிட்டேனே தவிர, மனதில் லேசான சங்கடம் குடிகொள்ளத் தொடங்கியது. அறுவைச் சிகிச்சை என்றாலே யாருக்குமே ஒரு பயம் தோன்றத்தானே செய்யும். மனதில் பயம் ஏற்பட்டதும் பெரியவாளை நினைத்துக் கொண்டேன். அவரிடம் சென்று பிரசாதம் பெற்று வந்து ஆபரேஷன் செய்துகொள்ளலாம் என்று முடிவு செய்தேன்.

பெரியவா அப்போது விழுப்புரத்தில் தங்கியிருந்தார். நான் சென்ற அன்று ஸ்ரீசங்கரஜயந்தி.

பெரியவா, அனுமார் கோயில் தெருவிலிருக்கும் தாம் பிறந்த இல்லத்தில் தங்கியிருந்தார். பக்கத்தில் பெரிய பந்தல் போடப்பட்டு, ஜயந்தி பூஜைக்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. ஒரே கூட்டம். கண்ணனிடம் செய்தியைச் சொன்னேன். அவர் பெரியவாளிடம் சென்று கூறினார். இரண்டு மூன்று வீடுகள் தள்ளி ஒரு வீட்டில் என்னை இருக்கச் சொல்லிப் பெரியவா உத்தரவிட்டதாகக் கூறி, என்னை அழைத்துச் சென்று அங்கே உட்கார வைத்தார் கண்ணன்.

அரை மணி அங்கே தனிமையில் அமர்ந்திருந்தேன். ஓர் அதிர்ச்சி. திடீரென்று பெரியவா, கண்ணன் பின்தொடர அந்த வீட்டின் பின்புற வழியாக உள்ளே நுழைந்தார். அவ்வழியே எப்படி வந்தார் என்று எனக்குப் புரியவில்லை. கூட்டத்தைத் தவிர்ப்பதற்காகப் பெரியவா, வீதி வழியாக வராமல் பின்புறம் இருந்த குறுகிய பாதை வழியாக இந்த இல்லத்தில் நுழைந்த தாகப் பின்னர் அறிந்தேன்.

நான் எழுந்து வந்தனம் செய்தேன்.

''உனக்கு என்னடா உடம்பு?''

''ஒரு மாசமா வயிற்று வலி. டாக்டர் ஆபரேஷன் பண்ணணும்னு சொல் றார். சனிக்கிழமை அன்னிக்குப் பண்ணிக்கப் போறேன். பெரியவாகிட்டே பிரசாதம் வாங்கிண்டு போக வந்தேன்'' எனக்காக முதல் முறையாகப் பிரசாதம் கேட்டேன்.

பெரியவா எதுவும் பேசவில்லை. கண்ணன் கொண்டு வந்திருந்த பிரசாதத் தட்டிலிருந்த விபூதி, குங்குமம், திராட்சைப் பிரசாதத்தைத் தொட்டு, என்னை எடுத்துக் கொள்ளச் சொன்னார். வந்தனம் செய்துவிட்டுப் பிரசாதத்தை எடுத்துக் கொண்டேன். பெரியவா வந்த வழியாகவே ஜயந்திப் பந்தலுக்குச் சென்று விட்டார்.

பூஜையைப் பார்த்துவிட்டு, அங்கேயே சிறிது ஆகாரம் செய்துவிட்டு, மதியத்துக்கு மேல் பஸ்ஸில் புறப்பட்டுச் சென்னை வந்தேன். தேனாம்பேட்டை யில் பஸ்ஸைவிட்டு இறங்கிய பின்னர்தான், அதுவரை வயிற்று வலியே இல்லா மல் நான் பயணம் செய்ததை உணர்ந்தேன். கடந்த ஒரு மாதத்தில் முதன்முறை யாகத் தொடர்ந்து நான்கு மணி நேரம் நான் வலியை உணராதது எனக்கு ஆச்சரியத்தை அளித்தது.

மறுநாட்காலை, சற்றும் எதிர்பாராதவிதமாக என்னுள் ஒரு புதிய எண்ணம் தோன்றியது. 'டாக்டர் வைத்தியநாதனை 'கன்ஸல்ட்' பண்ணினால் என்ன?'

அவர் ஆழ்வார்பேட்டையில் இருந்தார். அவரை ஸ்ரீமடத்தில் சந்தித்திருக்கி

றேன். எப்போதும் மகிழ்ச்சியாக இருப்பார். ஏதாவது ஒரு பாட்டை முணு முணுத்துக்கொண்டிருப்பார். சிரித்துச் சிரித்துப் பேசுவார். சுறுசுறுப்பாகக் காண ப்படுவார். நடையில் எப்போதும் ஒரு பரபரப்பு. குட்டையான உருவம். மிக உயர்ந்த பண்பு. விசாலமான இதயம். பெரியவாளிடம் அமைதியான, ஆழ்ந்த பக்தி.

டாக்டர் வைத்தியநாதனிடம் கையிலிருந்த ரிப்போர்ட்டுகள் அனைத்தையும் காட்டினேன். பார்த்தார். சனிக்கிழமை ஆபரேஷன் செய்துகொள்ளப் போவ தையும் அதற்காகப் பெரியவாளிடம் முதல்நாள் பிரசாதம் பெற்று வந்ததையும் கூறினேன்.

''ஆபரேஷன் ஒண்ணும் வேண்டாம். ரெண்டு மூணு மாசம் புளி, காரம் இல் லாமே பொரிச்ச கூட்டு, ரசம் சேர்த்துக்கோ. நிறைய தயிர் சாதம் சாப்பிடு. You will be alright'' என்று கூறி ஒரு மாத்திரையும் எழுதிக் கொடுத்தார்.

ஆபரேஷன் செய்து கொள்வதற்காகப் பிரசாதம் வாங்கி வந்தேன். ஆபரே ஷனே இல்லாமல் ஆகிவிட்டது!

சனிக்கிழமையன்று நான் டாக்டர் பாலாவிடம் செல்லவில்லை. சில மாதங் கள் அவரைச் சந்திக்காமலே இருந்தேன். 'தாம் சொன்னதைக் கேட்கவில்லை என்று என்னிடம் ஒருமாதிரியாக இருப்பாரோ' என்ற தயக்கம் எனக்கு. பின்னர் ஒரு சமயம், நடந்ததைக் கூறியபோது ''பெரியவா பிரசாதம் கொடுத்தா என்ன வேணுமானாலும் நடக்கும்'' என்று அவர் மகிழ்ச்சியுடன் கூறியது எனக்கு நிம் மதியளித்தது. பெரியவாளைச் சாட்சாத் வைத்தீச்வரனாகவே கருதும் எண்ண ற்ற டாக்டர்களில் பாலாவும் ஒருவர்.

மாத்திரையும், புளி, மிளகாய் தவிர்த்த சமையலும் தயிர்சாதமும் என் வயிற் றுவலியைப் போக்கடித்துவிட்டன. ஆனால், இரண்டாண்டுகள் கழித்து அது மீண்டும் தலைகாட்டத் தொடங்கியது. இருப்பினும், நான் எந்த டாக்டரிடமும் செல்லவில்லை. ஆகாரத்தில் முன்னைவிடக் கண்டிப்பாக இருந்தேன்.

ஒரு நாள், அப்போது ஆந்திராவிலிருந்த பெரியவாளைத் தரிசனம் செய்து விட்டு சென்னைக்குத் திரும்பிய திருச்சி நண்பர் ஜே. சடகோபன் என்னைப் பார்க்க வீட்டுக்கு வந்தார்.

''பெரியவாளிடம் உத்தரவு பெற்றபோது, மெட்ராஸில் உங்களைப் பார்ப் பேனோன்னு கேட்டார். 'பார்ப்பேன்'னு சொன்னேன். இந்த விபூதியை என்கி ட்ட குடுத்து தினம் கார்த்தாலே இதுலே கொஞ்சம் காபியிலே கலந்து உங்க ளைச் சாப்பிடச் சொன்னார்'' என்று கூறி விபூதிப் பிரசாதத்தை அளித்தார்.

''என் உடம்பைப்பத்திப் பெரியவாகிட்டே நீங்க ஏதாவது சொன்னேளா?''

''இல்லியே.. உங்களுக்கு மறுபடியும் உடம்பு சரியில்லேன்னு எனக்குத் தெரி யவே தெரியாதே. உடம்புக்கு என்ன?''

''பழைய வயத்து வலி மறுபடியும் லேசா வந்திருக்கு. இது எப்படிப் பெரிய வாளுக்குத் தெரிஞ்சதுன்னு புரியலையே..!''

''யார்கிட்டேயாவது சொல்லியனுப்பிச்சேளா..?''

''இல்லவேயில்லை. உங்ககிட்ட எப்படி விபூதி கொடுத்தனுப்பிச்சார்ங்கிறது ஆச்சரியமாயிருக்கு'' என்றேன்.

அன்று மகாமகத் திருநாள். இடம் விஜயவாடாவை அடுத்துள்ள ஏலூரு. கோதாவரி நதியின் வாய்க்கால் நீரும் கிருஷ்ணா நதியின் வாய்க்கால் நீரும் சங்கமிக்கும் புனித ஸ்தலத்துக்குப் புனிதமே உருவான ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் நடந்து வந்து கொண்டிருக்கிறார்.

அன்று விடியற்காலை வேத பாடசாலையில் பயிலும் இரு மாணவர்கள், கும்பகோணம் மகாமகக் குளத்திலிருந்து மடியாக இரு குடங்களில் புனித நீரை நிரப்பிக் கொண்டு, அவற்றை மடிமீது வைத்துக் கொண்டு காரில் திருச்சிக்கு வருகிறார்கள். அங்கு தயாராகக் காத்துக் கொண்டிருந்த 'இந்து' பத்திரிகைக்குச் சொந்தமான விமானத்தில் ஏறி அமர்கிறார்கள். மகாமகத் தீர்த்தக் குடங்கள் மடியாக அவர்கள் மடிகளில் வீற்றிருக்கின்றன.

விமானம் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள அன்னாவரம் விமான நிலையத்தில் இறங்குகிறது. அவ்விரு வித்தியார்த்திகளும் அங்கு தயாராகக் காத்துக் கொண்டிருந்த காரில் ஏலூரு வந்து சேருகிறார்கள். அதற்குள் ஸ்ரீ காஞ்சி மகான், கோதாவரி – கிருஷ்ணா சங்கமத்துக்கு வந்து சேர்ந்துவிடுகிறார். நாங்களும் பெரியவாளைச் சுற்றிலும் முழங்கால் அளவு நீரில் நின்று கொண்டிருக்கிறோம்.

ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்கு மகாமகத் திருக்குளத்தின் புனிதநீர் அபிஷேகம் செய்விக்கப்பட்டது. தூயவரின் திருமேனியைத் தீண்டி, மேலும் தூய்மையடைந்து அது சுற்றி நின்றிருந்தவர்களின் மீது சிதறியது. அந்நீர்த்துளிகள் அமிருதவாரியாக என்மீதும் பொழிந்ததனால், இப்பிறவியில் பெறற்கரிய பேறு பெற்றேன்.

நான் குடந்தைக்குச் சென்று மகாமக ஸ்நானம் செய்ததில்லை. அக்குறை அன்று ஏலூரில் தீர்ந்துவிட்டது, இரட்டிப்பு புண்ணியத்துடன்!

மேற்கு மாம்பலம் சங்கர மடத்தில் பெரியவா எழுந்தருளியிருந்த நாட்கள்...

மாலை ஆறேழு மணியிருக்கும். பக்கத்து வீட்டு வெளித் தாழ்வாரத்தில் மேல்நாட்டுப் பெண்மணி ஒருவர் அமர்ந்திருந்தார். ஐம்பது வயதைக் கடந்தவர். அன்று அவர் சுவாமிகளைத் தரிசிக்க ஏற்பாடாகியிருந்தது. அழைப்பு வருவதற்காகக் காத்துக் கொண்டிருந்தார். நான் அவரிடம் பேச்சுக் கொடுத்தேன். ஆன்மீகத்தில் அதிகம் ஆர்வமுள்ள அந்தப் பெண்மணி, அதன் தொடர்பாகத் தமக்கு ஏற்பட்டுள்ள சந்தேகங்களுக்கு விளக்கம் பெற்றுத் தெளிவடைவதற்காகச் சுவாமிகளை நாடி வந்துள்ளதாகவும், தரிசனத்தின்போது, தாம் குறித்துக்கொண்டு வந்துள்ள பத்துப் பன்னிரண்டு கேள்விகளைக் கேட்க விரும்புவதாகவும் கூறினார். கேள்விகள் அடங்கிய காகிதத்தையும் காட்டினார்.

பூஜை முடிந்த பின்னர் பெரியவா அந்தப் பெண்மணிக்குத் தரிசனம் தருவதாக ஏற்பாடு. எட்டு மணிக்கெல்லாம் மூன்றாம் கால பூஜை முடிந்துவிட்டது. ஆனால், வழக்கத்துக்கு மாறாகப் பெரியவா மேனாவில் படுத்து உறங்கிவிட்டார். அரை மணி காத்திருந்து பார்த்தோம். பெரியவா விழித்துக் கொள்ள

வில்லை. தரிசன நிகழ்ச்சியை நிச்சயமாகப் பெரியவா மறந்திருக்க மாட்டார். முக்கியமானவர்களை வரச்சொல்லியிருந்தால், தமது இதர அலுவல்களை நேரத்துக்கு முடித்துக் கொண்டுவிட்டு, குறித்த நேரத்தில் தரிசனம் தருவார். ஆனால், இன்று படுத்துறங்கிவிட்டார். அவரை எப்படி எழுப்புவது? எல்லோருக்கும் தர்மசங்கட நிலை. அப்படியும் கண்ணன் ''வெள்ளைக்காரி வந்திருக்கா...'' என்று உரக்கக் குரல் கொடுத்துப் பார்த்தார். பயனில்லை.

இறுதியாக, தரிசனத்துக்கு ஏற்பாடு செய்தவர்கள் ஒரு முடிவுக்கு வந்தார்கள். 'மேனாவைப் பக்கத்து வீட்டில் கொண்டுபோய் வைத்துவிடுவது. பெரியவா எப்போது கண் விழிக்கிறாரோ, அப்போது அந்தப் பெண்மணி கேள்விகள் கேட்டுத் தமது சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ளட்டும்...'

அவ்விதமே, மேனாவைச் சுமந்துவந்து, பக்கத்து வீட்டின் முன்னறையில் வைத்துவிட்டார்கள். அப்போதும் பெரியவா தூக்கம் கலையாமல் படுத்துக் கொண்டிருந்தார். அந்தப் பெண்மணி அருகில் அமர்ந்து, கண்கள் கலங்க, பெரியவாளின் திருமுகத்தையே பார்த்துக் கொண்டிருந்தார். அவர் தமது கைகளில் வைத்துக் கொண்டிருந்த மலர்களை மேனாவில் வைத்துவிடும்படி கூறினேன். திருப்பாதங்களில் சமர்ப்பித்துவிட்டுத் தியானத்தில் அமர்ந்துவிட்டார்.

பத்து நிமிடங்கள் கழிந்தன. பெரியவா லேசாகக் கண்களைத் திறந்து அந்தப் பெண்மணியைப் பார்த்தார். ஒரே ஒரு கணம்தான்... மறுபடியும் கண்களை மூடிக்கொண்டு விட்டார். பெண்மணியின் கண்கள் நீரைச் சொரிந்தன. கண்ணீர், அவர் கையில் வைத்திருந்த காகிதத்தை நனைத்தது.

''சுவாமிகள் விழித்துக் கொண்டுதான் இருக்கிறார். நீங்கள் குறித்துக் கொண்டு வந்திருக்கும் கேள்விகளைக் கேளுங்கள்...'' என்று அவரிடம் கூறினேன். நான் கூறியது அவர் காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. மிகவும் உணர்ச்சி வசப்பட்ட நிலையில் தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தார்.

கேள்விகளைப் பற்றி அவருக்கு மீண்டும் நினைவுபடுத்தினேன்.

கையில் வைத்திருந்த தாளை மடித்துக் கைப்பையில் வைத்தார்.

''என் கேள்விகளுக்கெல்லாம் விடை கிடைத்துவிட்டது. என் சந்தேகங்களெல்லாம் தீர்ந்து போய்விட்டன. குழப்பங்கள் விலகி, மனது தெளிவடைந்து நிம்மதியாக இருக்கிறது. ஒரு வார்த்தைகூடப் பேசாமல், என்னிடம் கூற வேண்டியதெல்லாம் கூறிவிட்டதாக உணர்கிறேன். என் வாழ்க்கையில் மறக்க முடியாத அனுபவம் இது...'' என்று கூறி விடைபெற்றுக் கொண்டார் அந்தப் பெண்மணி.

**கா**ளஹஸ்தியில் ஓரிரவு... இளைஞர் வாசு வீணை வாசித்துக் கொண்டிருக்க, பெரியவா ஏகாந்தமாய்க் கேட்டுக் கொண்டிருந்தார். இரண்டு கீர்த்தனங்கள் முடிந்ததும் பெரியவா படுத்துக்கொண்டுவிட்டார். மூன்றாவது கீர்த்தனம் முடியும் தறுவாயில் நன்றாக உறங்கிப் போய்விட்டார். பெரியவாதான் தான் வாசிப்பதைக் கேட்கவில்லையே என்று, அடுத்துத் தொடங்கிய பாட்டை அவசர அவசரமாக முடித்துவிட்டு வாத்தியத்தை உறையில் போட்டுக் கொண்டு புறப்பட்டுவிட்டார் வாசு. அவருக்கு ரயிலுக்கு நேரமாகிவிட்டது.

ஐந்து நிமிடங்களுக்கெல்லாம் பெரியவா கண்விழித்தார்.

கண்ணனிடம், ''வாசு எங்கேடா?'' என்று வினவினார்.

''பெரியவா தூங்கிப் போயிட்டா. வாசிச்சு முடிச்சுட்டு, ரயிலுக்கு நேரமாற..

துன்னு அவசர அவசரமாப் போயிட்டான்...'' என்றார் கண்ணன்.

''என்னடாது... இத்தனை நேரம் நன்னா வாசிச்சுட்டு, மங்களம் வாசிக்காமப் போயிட்டானே... ஸ்டேஷனுக்குப் போய், அவனை அழைச்சுண்டு வந்து மங்களம் வாசிச்சுட்டுப் போகச் சொல்லு...''

நாங்கள் இருவரும் ஸ்டேஷனுக்கு விரைந்தோம். பிளாட்பாரத்துக்குள் நுழையும் தருணம், ரயில் புறப்படுவதற்கான பரபரப்பு காணப்பட்டது. நான் ஒரு பக்கமும், கண்ணன் ஒரு பக்கமுமாக ''வீணை வாசு... வீணை வாசு...'' என்று பெட்டி பெட்டியாகக் கூவியபடி ஓடினோம். ஒரு பெட்டியிலிருந்து வீணையுடன் வாசு கீழே குதிக்கவும் ரயில் புறப்படவும் சரியாயிருந்தது!

அன்று பெரியவா சந்நிதியில் மங்களம் வாசித்துவிட்டு, மறுநாள்தான் சென்னைக்குச் சென்றார் வாசு!

**தி**யாகராய நகரில் ராதாகிருஷ்ணன் தெரு. ஸ்ரீ அனந்தானந்த சுவாமிகளின் பூர்வாச்ரம மாப்பிள்ளையின் இல்லம், வெளிவராந்தாத் திண்ணையில் பெரியவா அமர்ந்திருக்க, மதுரை மணி ஐயர் தேவகானம் பொழிந்து கொண்டிருந்தார். பெரியவா, சுளை உரிக்கப்பட்ட பெரிய சாத்துக்குடி மூடியொன்றைக் கையில் வைத்துக்கொண்டு பாட்டுக்குத் தாள்ம் போட்டுக் கொண்டிருந்தார்.

பாடி முடிந்ததும் மதுரை மணி ஐயர், ''இத்தனை நேரம் யார் தாளம் போட்டது?'' என்று கேட்டார். ''பெரியவாதான் தாளம் போட்டார்...'' என்று ஒருவர் கூறியதும், ''அப்படியா?! இத்தனை லய ஞானத்தோட யார் அற்புதமா தாளம் போட்டுண்டிருக்கான்னு நினைச்சுண்டேன்... என்ன பாக்கியம் பண்ணியிருக்கேனோ, பெரியவாளே இன்னிக்கு என்பாட்டுக்குத் தாளம் போட்டிருக்கார். பெரியவா எங்கேயிருக்கா?'' என்று மணி ஐயர் கேட்க, ''இதோ, உன் எதிர்லேதான் இருக்கேம்ப்பா...'' என்று பெரியவா அன்பொழுகக் கூறினார்.

''என் தெய்வத்தைத் தரிசனம் பண்ண முடியலையே... பார்வை போயிடுத்தே... பரமேச்வரா, கைலாசபதே, கபாலீச்வரா...'' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டு அவர் கதறியபோது, சுற்றியிருந்தவர்கள் கண்ணீர் விட்டோம்.

**நு**ங்கம்பாக்கத்தில் சிவன் கோயில் மாடவீதியில் வலம் வந்துகொண்டிருந்தார் ஸ்ரீ காஞ்சிப் பெரியவர். மேற்குத் தெருவில் முதியவர் கல்யாணராம ஐயர், தம் இல்லத்தின் முன் நின்று கொண்டிருந்தார். அவருக்கு முழுமையான கண் பார்வை இல்லை. சுவாமிகள் அவர் வீட்டுக்கு எதிரில் நின்றதுகூடப் பிறர் சொல்லித்தான் அவருக்குத் தெரிந்தது. உடனே வந்தனம் செய்துவிட்டு ''பார்வை ரொம்ப மங்கிப் போயிட்டுது. பெரியவாளைக்கூடச் சரியா பார்க்க முடியலே...'' என்று குரல் தழுதழுக்கக் கூறினார்.

பெரியவா நல்ல வெயில் இருக்குமிடத்துக்கு வந்து நின்றுகொண்டு, ''இப்ப என்னைப் பாருங்கோ... கொஞ்சமாவது முகம் தெரியறதா?'' என்று தாயினும் சாலப் பரிந்து கேட்டார்.

''லேசாத் தெரியறது, இதுபோதும்... பெரியவா கருணை என் பாக்கியம்...'' என்று கண்கலங்கக் கூறினார் அந்த முதியவர்.

**மே**ற்கு மாம்பலம் சங்கர மடத்தின் பின்புறம். மாலை நேரம். பெரியவாளுக்கு உடல்நலம் சரியில்லை. தாங்க முடியாத வயிற்றுவலி. சுருண்டு சுருண்டு படுத்து, கைகளால் அடிவயிற்றைப் பிசைந்து பிசைந்து மிகவும் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தார். சுற்றி நின்றிருந்த அத்தனை பேரும் துடிதுடித்துப் போய்

விட்டோம். சிலர் கண்ணீர் விட்டு அழுதனர்.

ஒருவர் ''பெரியவாளுக்குக் கூடவா இப்படியெல்லாம் வரும்... எங்களால தாங்க முடியலையே...'' என்று 'ஓ'வென்று கதறிவிட்டார்.

''பெரியவாளும் மனுஷர்தானே... கர்மாவாலேதானே இந்த உடம்பு வந்திருக்கு. அதுக்குண்டானதை இந்த சரீரம் அனுபவிச்சுத்தானே ஆகணும்...'' என்று கூறினார். சற்றைக்கெல்லாம் வலி நீங்கப் பெற்றுச் சாதாரணமாகி விட்டார்.

அப்போது மடத்து யானை காமாட்சி, தீப நமஸ்காரம் முடிந்து பெரியவாளிடம் வாழைப்பழம் வாங்கிச் சாப்பிட வந்தது. பெரியவா ஒரு குடிலில் அமர்ந்திருந்தார். கையில் பழத்தை வைத்துக் கொண்டு யானையை உள்ளே அழைத்தார். ஆனால், சிறுவாசலில் அத்தனை பெரிய சரீரம் எவ்வாறு நுழைய முடியும்? யானைப்பாகனும் யோசித்தபடி நின்றிருந்தார்.

பெரியவா விடாமல் ''காமாட்சி, உள்ளே வந்து வாங்கிக்கோ...'' என்று மீண்டும் அழைத்தார்.

அடுத்த கணம் நம்பமுடியாத அதிசயம் நடந்தது. அந்தப் பெரிய யானை, தன் உடலை மிகவும் அழகாகச் சுருக்கிக் கொண்டு அந்தக் குறுகிய வாசற்படியில் நுழைந்து, பெரியவாளிடமிருந்து பழத்தைப் பெற்றுக் கொண்டு, பின்னால் நகர்ந்தபடியே வெளியே வந்தது!

பம்பாயில் அவர் ஒரு பெரும் தொழில் அதிபர். பெயர் அகர்வால். அவருக்கு மூன்று பெண்கள். எத்தனை முயன்றும் மூத்தவளுக்கு வரன் குதிரவில்லை. அடுத்தவளுக்கு மாப்பிள்ளை கிடைத்தால், முதலில் அவளுக்குத் திருமணம் செய்துவிடலாம் என்று அவர் எண்ணினார். ஆனால், மூத்தவளின் மனம் துன்பப்படுமே என்று தயங்கினார். அதையறிந்த அவள், ''என்னைப் பற்றிக் கவலைப்படாதீர்கள் அப்பா... தங்கைக்குத் தகுந்த மாப்பிள்ளை கிடைத்தால் திருமணத்தை நடத்திவிடுங்கள்'' என்று ஆறுதல் சொன்னாள். அதன் பிறகும் அவர் மனம் சமாதானமடையவில்லை. ஏராளமான செல்வம் இருந்தும் பெண்கள் கல்யாணம் தட்டிக்கொண்டே போகிறதே என்று புழுங்கினார்.

என் உறவினர் ஒருவர் அகர்வாலுக்கு நெருங்கிய நண்பர். ஒரு நாள் தம் உள்ளக் குமுறலை நண்பரிடம் வெளியிட்டார் அகர்வால். ஸ்ரீகாஞ்சிப் பெரியவரைத் தரிசித்து ஆசி பெறலாம் என்று யோசனை கூறியிருக்கிறார் நண்பர். சுவாமிகளைப் பற்றி அகர்வால் கேள்விப்பட்டிருக்கிறார்... தரிசித்ததில்லை. காஞ்சிபுரத்துக்கு அழைத்துச் செல்லும்படி நண்பரிடம் வேண்டிக் கொண்டார்.

குடும்பத்தோடு சென்னைக்கு வந்த தொழிலதிபரை என் உறவினர் எனக்கு அறிமுகப்படுத்தி விட்டு, அவர்களுடன் காஞ்சீபுரம் வந்து சுவாமிகளைத் தரிசனம் செய்து வைக்கும்படி என்னைக் கேட்டுக்கொண்டார். நான் உடன் சென்றேன். பெரியவாளிடம் அகர்வாலைப் பற்றிக் கூறி, குடும்பத்தோடு அவர் தரிசனத்துக்கு வந்துள்ள காரணத்தையும் எடுத்துரைத்தேன். பின்புறம் ஓரிடத்தைக் குறிப்பிட்டு அவர்களை அங்கு அமரச் செய்யும்படி கூறினார் பெரியவா.

அவர்களை அவ்விடத்துக்கு அழைத்துச் சென்றேன். சற்றைக்கெல்லாம் பெரியவா அங்கு வந்தார். அகர்வால் தம்மைப்பற்றிக் கூறிவிட்டு, தம் குடும்பத்தினரை ஒவ்வொருவராக அறிமுகம் செய்துவிட்டு, பெண்களுக்குக் கல்யாணம் நடைபெற ஆசி வழங்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார்.

அகர்வாலிடம் பெரியவா பேசிவிட்டு, அவர்களுக்கு உத்தரவு கொடுத்து அனுப்பும் முன்னர், எதிரில் நின்றிருந்த இரு பெண்களிடம் ஆளுக்கொரு பழத்தை எடுத்துக் கொடுத்தார்.

''மூணு பொண்கள்னு சொன்னாரே, இன்னொருத்தி எங்கேடா?'' என்று என்னிடம் கேட்டார்.

அந்தப் பெண் சற்று நாணத்துடன், தந்தைக்குப் பின்னால் மறைந்தவாறு நின்று கொண்டிருந்தாள்.



''சுவாமிகள் உங்களை அழைக்கிறார்.. முன்னால் வந்து நில்லுங்கள்'' என்று ஆங்கிலத்தில் கூறினேன். வந்து நின்றாள். மூன்றாவது பழத்தை எடுத்து அவளுக்கு அளித்தார் பெரியவா. அவள்தான் மூத்தவள் என்று பின்னர் அறிந்தேன்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு கிட்டத்தட்ட ஓராண்டுக் காலம் என் உறவினரை நான் சந்திக்க வாய்ப்பில்லாமல் போய்விட்டது. பின்னர் சந்தித்தபோது, பம்பாய் தொழிலதிபர் குடும்பத்தோடு சுவாமிகளைத் தரிசித்த நிகழ்ச்சியைப் பற்றிய பேச்சு வந்தது. ''அந்தப் பெண்களுக்குத் திருமணம் ஆகிவிட்டதா?'' என்று விசாரித்தேன்.

''அது ஒரு பெரிய ஆச்சரியம்!'' என்று கூறத் தொடங்கியவர், முழு விவரங்களையும் உற்சாகத்துடன் விவரித்தார்.

முதலில் இரண்டாவது பெண்ணுக்குத்தான் கல்யாணம் நிச்சயமாயிற்றாம். நல்ல இடம், செல்வம் கொழிக்கும் குடும்பம். முகூர்த்தம் வைத்து, பத்திரிகை கூட அச்சடித்தாகிவிட்டது. மூத்த பெண் வருத்தப்படவில்லையென்றாலும், பெற்றோருக்கு உள்ளூர மனவேதனை இருந்ததாம். ஒரு குறையுடன்தான் அனைத்து ஏற்பாடுகளையும் செய்து கொண்டிருந்தனர். திடீரென்று ஒரு கோடீஸ்வரரின் மகன் மூத்த பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ள முன் வந்திருக்கிறான். பெண்ணுக்கும் அவனைப் பிடித்துவிட்டது. இரு தரப்பினருக்கும் பூரண சம்மதம். நிச்சயம் செய்துவிட்டு, முகூர்த்தம் வைக்க நாள் பார்த்தபோது, ஒரு நல்ல நாள் இருந்தது. அது இரண்டாவது பெண்ணின் திருமணத்துக்காகக் குறிக்கப்பட்ட முகூர்த்தத்துக்கு முன் முகூர்த்தமாகவே அமைந்தது. ஏற்பாடுகள் 'ஜெட்' வேகத்தில் நடைபெற்றன. மூத்தவளின் திருமணம் முதலில் முடிந்து, இரண்டாவது பெண்ணின் திருமணம் பின்னரே நடைபெறும்படி திடீர் திருப்பம் ஏற்பட்டதில் அகர்வால் குடும்பத்தினருக்கு மட்டற்ற மகிழ்ச்சி. சில மாதங்களில் மூன்றாவது மகளின் திருமணத்தையும் நிச்சயம் செய்து கோலாகலமாக நடத்தி வைத்துவிட்டாராம் அந்தப் புண்ணியவான்!

**எ**ன் சகோதரியின் சம்பந்தியம்மாள் ஒரு நாள் என்னிடம் ஐநூறு ரூபாயைத் தந்து, அதைத் தன் தாயாரின் பெயரில் ஸ்ரீமடத்தில் சேர்ப்பித்துவிடும்படி கூறினார். அன்று என் நண்பர் கே.ஆர். விச்வநாதன் (நாதன்) காஞ்சீபுரம் செல்வதாக என்னிடம் கூறவே, அந்தப் பணத்தை அவரிடம் கொடுத்து அனுப்பினேன்.

அவர் பெரியவாளைத், தனிமையில் தரிசித்துப் பேசிக் கொண்டிருந்த போது, நான் ஐநூறு ரூபாய் கொடுத்து அனுப்பிய விவரத்தை சுவாமிகளிடம் யதேச்சையாகக் கூறியிருக்கிறார்.

''எனக்கா?'' என்று பெரியவா கேட்க, ''ஆமாம்'' என்று நாதன் கூறியிருக்கிறார்.

''அந்தப் பணத்தை இந்தப் பையன்கிட்டே குடு'' என்று அருகே நின்றிருந்த ஏழைச் சிறுவனைக் காட்டினார்.

நாதன் ஐநூறு ரூபாயை அந்தச் சிறுவனிடம் கொடுத்தார்.

''டேய், உங்கப்பாவுக்கு ஆஸ்பத்திரிச் செலவுக்குப் பணம் வேணும்னு சித்த முன்னாடி எங்கிட்டே கேட்டியே, இதை எடுத்துண்டு போய்க் குடு'' என்று பெரியவா அச்சிறுவனிடம் கூறினாராம்.

நுங்கம்பாக்கம் உபநிஷத் ஆச்ரமத்தின் தலைவராயிருந்த வயது முதிர்ந்த துறவி முதல் நாள் இரவு ஸித்தியடைந்துவிட்ட செய்தியைப் பெரியவாளிடம் தெரிவித்து, அவரது நல்லடக்கத்துக்கான வழிமுறைகளைப் பற்றிக் கேட்டறி வதற்காக ஸ்ரீமடத்துக்குச் சென்ற உள்ளூர்க் கோஷ்டியில் நானும் இருந்தேன்.

அன்று விடியற்காலை ஆச்ரமத்தின் காவல்காரருக்குத் தோன்றிய கனவைப் பற்றிப் பெரியவாளிடம் எங்களில் ஒருவர் விவரித்தார்.

படுத்துக் கொண்டிருந்த அந்தக் காவல்காரரிடம் பழுத்த சுமங்கலியம்மாள் ஒருத்தி, 'நான் உள்ளே போகணும், நீ குறுக்கே படுத்துண்டிருக்கியே, எழுந்து எனக்கு வழி விடு' என்று கூறியதாகவும் அதைக்கேட்டு காவல்காரர் விழித்துக் கொண்டு விட்டதாகவும் கூறினார்.

அப்போது பெரியவா தரிசனத்துக்கு ஒருவர் வந்தார். அவர் கையில் ஓர் அம்மன் விக்ரகம் இருந்தது. ஒரு துணியைக் கீழே விரித்து அந்த விக்ரகத்தை வைத்துவிட்டு, சில விவரங்களைக் கூறி, ''பெரியவாகிட்டே சமர்ப்பிச்சுடணும்னு விக்ரகத்தைக் கொண்டு வந்திருக்கேன்'' என்று சொல்லிவிட்டு உத்தரவுக்காகக் காத்து நின்றார்.

பெரியவா எங்கள் கோஷ்டியின் தலைவரைப் பார்த்து, ''இந்தக் காமாட்சி விக்ரகத்தை நீங்க எடுத்துண்டு போய் உபநிஷத் ஆச்ரமத்துலே வெச்சுப் பூஜை பண்ண ஏற்பாடு பண்ணுங்கோ'' என்று அருட் கட்டளையிட்டார்.

அவ்வாறே அந்த விக்ரகம் நுங்கம்பாக்கம் எடுத்துவரப்பட்டு உபநிஷத் ஆச்ரமத்தில் பூஜையில் வைக்கப்பட்டது.

காவல்காரரின் கனவுக்கும், காமாட்சியம்மன் விக்ரகத்தின் எதிர்பாராத வரவுக்கும் சம்பந்தம் இருக்குமோ?

பெரியவா 1990-ம் ஆண்டிலிருந்து மௌனவிரதம் மேற்கொண்டு, காலையில் ஒரு மணி நேரம், மாலையில் ஒரு மணி நேரம் என்று தரிசன காலத் தையும் குறைத்துக்கொண்டு விட்டார். இருக்கையில் அமர்ந்தபடி, அங்கங்களை அசைக்காமல், காஷ்ட மௌனத்தில் ஆழ்ந்திருப்பார்.

காஞ்சீபுரம் சென்று வருபவர்கள், ''பெரியவாளுக்கு உடம்பு சரியில்லை... டாக்டர்கள் வந்து பார்க்கிறார்கள். மருந்து குடுக்கிறார்கள். அசக்தமாயிருக் கிறார். எல்லாவிதப் பரிசோதனைகளும் நடந்து வருகின்றன. ஸ்கானிங்கூட பண்ணப் போகிறார்கள்'' என்றெல்லாம் கூறுவார்கள்.

நான் சில வாரங்கள் காஞ்சீபுரம் செல்ல முடியாமல் நேர்ந்துவிட்டது. அதற் கான காரணங்கள் ஏதுமில்லை. தரிசனத்துக்குச் செல்ல வேண்டும் என்று நினைத்தவாறு பயணத்தை ஒத்திப்போட்டுக் கொண்டே வந்தேன்.

ஒருநாள் சென்று, க்யூவில் நின்று தரிசனம் செய்தேன். 'பெரியவாளுக்கு உடல்நிலை சரியில்லை' என்று என் மனசில் தோன்றவில்லை. முகப் பொலிவிலோ, அருட் பார்வையிலோ, சுற்றுப்புற நடப்புக்களைப் புரிந்து கொள்வதிலோ, பக்தர்களின் முறையீடுகளைக் கிரஹித்துக் கொள்வதிலோ எந்தவித மாற்றமும் இருந்ததாகத் தெரியவில்லை.

அதையடுத்து இரண்டு முறை இம்மாதிரியே தரிசனம் செய்துவிட்டுத் திரும் பினேன். ஆனால், மனதில் ஒரு சந்தேகம். 'பெரியவா கையை அசைப்பதுகூட இல்லையே. வஸ்திரத்தால் மறைத்து விட்டிருக்கிறார்களே... ஏன்?' நினைக்கும் போதே எனக்குக் குமுறிக்கொண்டு அழுகை வரும்... 'சே... ஏன் வீணாகக் கற்பனை செய்து கொள்ள வேண்டும்' என்று சமாதானம் செய்து கொள்வேன்.

யாரிடமும் அதைப்பற்றிக் கேட்கும் துணிவு எனக்கு வரவில்லை.

*1991ம் ஆண்டு மார்ச் 12-ம் நாள் நான் க்யூவில் நின்று பெரியவாளைத் தரிசனம் செய்து கொண்டிருக்கிறேன். பெரியவாளும் என்னை உற்றுப் பார்ப்பதை உணர்கிறேன். மனதில் அந்தப் பழைய சந்தேகம்... தாங்க முடியாத தவிப்பு...*

*வஸ்திரத்துக்குள் இருந்த பெரியவாளின் கரம் மெள்ள அசைகிறது... வெளியே வருகிறது... உயர்கிறது. இப்போது கழுத்தைச் சுற்றிப் போகிறது. கழுத்திலிருந்து மாலையொன்றை லாகவமாக எடுக்கிறது. கண்கள் பனிக்கப் பார்த்துக் கொண்டிருந்த என் சந்தேகமெல்லாம் அதே கணத்தில் கரைகிறது.*

*கையில் எடுத்த மாலையை அருகிலிருந்த பையனிடம் தந்து, என் கழுத்தில் போடச் சொல்லி மௌனமாகவே உத்தரவிடுகிறார் பெரியவா. அந்தப் பையன் அதை எடுத்து வரும்போது, நான் கண்ணீரில் கரைந்து போவதுபோல் ஒரு பிரமை. அடுத்த கணம் என் கழுத்தில், அன்புத்தெய்வத்தின் அருட்பிரசாதமாக, பெரிய கிராம்புகள் கோக்கப்பட்ட அந்த மாலை...*

*ஏன்... எதற்கு...? புரிந்து கொள்ள எத்தனை பிறவிகள் எடுக்க வேண்டுமோ?*

**ஸ்ரீ** காஞ்சிப் பெரியவர் மக்களிடையே தெய்வ பக்தியை வளர்ப்பதற்காகவும் ஈச்வர பக்தியின் அவசியத்தை வலியுறுத்துவதற்காகவும் உபந்நியாசங்கள் செய்து வந்ததோடு, ஆலய வழிபாடுகள் சிறக்கப் பல்வேறு திட்டங்கள் வகுத்து, அவற்றைச் செயல்படுத்த நமக்கு நல்வழிகளும் காட்டியருளியுள்ளார். அனைத்துக்கும் மேலாக ஸ்ரீ சந்திரமௌளீச்வரர் – ஸ்ரீ திரிபுரசுந்தரி பூஜையில் ஒன்றிப்போய், தூய பக்திக்கு ஓர் இலக்கணமாகவும், உண்மை பக்தனுக்கு ஒப்புயர்வற்ற ஓர் உதாரணமாகவும் திகழ்ந்திருக்கிறார்.

தெய்வபக்தியைப் போன்றே குருபக்தியும் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதது என்று சொல்லிலும் செயலிலும் வாழ்நாள் முழுவதும் வலியுறுத்தி வந்திருக்கிறார் ஸ்ரீ ஆசாரிய சுவாமிகள். பெரியவா தமது ஆதிகுருவான ஸ்ரீ ஆதிசங்கரரை, 'ஆசாரியாள்' என்றே பெரும்பாலும் குறிப்பிடுவது வழக்கம். அந்தப் பெயரை உச்சரிக்கும்போதும், அவர் பெருமைகளைப் பேசும்போதும், அவரது வாழ்க்கை நிகழ்ச்சிகளை விவரிக்கும்போதும், பணிவே உருவான சீடராக உள்ளம் நெகிழ்ந்து போவார். பாரதம், ஏன் மனித குலமே தம் குருவின் நினைவை நிரந்தரமாகப் பாதுகாத்துப் பயனடையக் கடமைப்பட்டிருக்கிறது என்று உளமார எண்ணிய சீடர். நாடெங்கும் ஸ்ரீ ஆதிசங்கரருக்கு நினைவு மண்டபங்கள் எழுப்பி, அவற்றில் நான்கு பிரதம சீடர்களோடு கூடிய அவரது திருவுருவச்சிலைகளை நிறுவிக் கும்பாபிஷேகம் செய்து வைத்திருக்கிறார்.

**ஆ**ந்திரப் பிரதேசத்திலுள்ள ஸ்ரீசைலத் திருத்தலத்தில் ஸ்ரீ சங்கர மண்டபம் ஒன்று நிறுவப்பட்டு, அதில் சீடர்களோடுகூடிய ஸ்ரீ ஆதிசங்கரர் உருவச்சிலை பிரதிஷ்டை செய்யப்பட்டு, 1967-ம் ஆண்டு மார்ச் மாதம் ஸ்ரீ ஆசாரிய சுவாமிகள் குடமுழுக்கு செய்யப் போகிறார் என்றறிந்து அங்கு சென்றேன். இரண்டு

மூன்று நாட்கள் தங்கிக் காண்பதற்கரிய காட்சிகள் கண்டு, பெறற்கரிய தரிசனங்கள் பெற்று, உள்ளம் பூரித்த நான், அவற்றை விரிவாக விகடனில் எழுத ஆவல் கொண்டு பெரியவாளிடம் விண்ணப்பித்துக் கொண்டேன். அவரது நல்லாசியுடன் 'ஸ்ரீசைலத்தில் ஸ்ரீ சங்கரர்' என்ற தொடரை எழுதத் தொடங்கினேன். ஆனால், பதினான்காவது பகுதியிலிருந்து என்னையும் அறியாமல் அது பெரியவாளின் அவதாரத்தில் பிரவேசித்து, பால்ய லீலைகளில் அமிழ்ந்து, சந்நியாச ஆச்ரமத்தை நோக்கி என்னை அழைத்துச் சென்றது. கட்டுரைத் தொடர் பெரியவாளின் வாழ்க்கைச் சரித்திரத்தின் சுருக்கமாக அமையக்கூடும் என்று கருதிய நான் அதற்கான செய்திகளும் படங்களும் சேர்க்கத் தொடங்கினேன். பெரியவாளிடமும் விஞ்ஞாபனம் செய்து கொண்டேன். பெரியவாளும் அம்முயற்சிக்கு ஊக்கமளித்து, தமது இளவயது நிகழ்ச்சிகளையும் சிதம்பரத்திலும் திண்டிவனத்திலும் பள்ளியில் படித்த நாட்களைப் பற்றியும் அவ்வப்போது விவரிப்பார். முதல் வகுப்புக்கு வந்து பிள்ளைகளைப் பரீட்சை செய்த கல்வியதிகாரி, வயதுக்கு மீறிய இவரது அறிவைப் பாராட்டி "சுவாமிநாதனை மூன்றாம் வகுப்புக்கு 'ப்ரமோட்' செய்து விடுங்கள்" என்று உத்தரவு போட்டதை ஒரு நாள் நினைவு கூர்ந்தார்.

சந்நியாசம் மேற்கொண்டு மடாதிபதியான பின்னர், தனிமையில் சாஸ்திரப் பாடங்கள் கற்பதற்காக, திருச்சியையடுத்த மகேந்திர மங்கலத்தில் தங்கி



இருந்ததை நினைவு கூர்ந்தவர், பாடத்தினிடையே அவ்வப்போது நீச்சல் பழகு வதற்காக காவேரிக்கு ஓடி வந்ததையும், பாடம் கற்பித்த பண்டிதர் அங்கே வந்து ''சுவாமிகளே... போதும் வாங்கோ, நிறையப் பாடம் பாக்கியிருக்கு'' என்று மன்றாடியதையும் சுவைபடக் கூறினார்.

ஒரு சமயம் திண்டிவனம் அமெரிக்கன் மிஷன் ஸ்கூலில் (தற்போது வால்டர் ஸ்கட்டர் ஸ்கூல்) சுவாமிகள் படித்தபோது எடுத்த வகுப்பு குரூப் போட்டோ ஒன்று எனக்குக் கிடைத்தது. அதில் பெரியவா தொப்பி, கோட்டு, நிஜார், பூட்ஸ் அணிந்து கொண்டு கீழ்வரிசையில் கையில் ஒரு பெரிய புத்தகத் துடன் உட்கார்ந்திருப்பார்.

அந்த போட்டோவைப் பெரியவாளிடம் காட்டினேன். அதைப் பார்த்து விட்டுப் பழைய நினைவுகள் மனதில் நிழலாடக் கூறினார்:

''நாலாம் பாரத்தில படிக்கிறச்சே, ஷேக்ஸ்பியரின் 'கிங் ஜான்' நாடகத்தில் ஆர்தர் இளவரசனாகப் பேசிச் சிறப்பா நடிச்சதுக்கு 'ஓல்ட் இங்கிலீஷ்' புஸ்தகம் ஒண்ணு பரிசாத் தந்தா. வேஷமெல்லாம் கிடையாது. வசனங்களை மனப் பாடம் பண்ணிப் பேசி நடிக்கணும். அப்ப ஒரு குரூப் போட்டோ எடுத்தா. அதான் இது. இந்த போட்டோலே நான் கைலே வெச்சிண்டிருக்கிறது, எனக்கு ப்ரைஸ் வந்த புஸ்தகம்தான். இந்தத் தொப்பி, கோட்டு, பூட்ஸெல்லாம் என்னுது இல்லே. என்கூடப் படிச்ச கிருஷ்ணசாமிகிட்டே இரவல் வாங்கிப் போட்டுண்டது'' என்று கூறிச் சிரித்தார். பிறகு, கிருஷ்ணசர்மா என்ற கிருஷ்ண சாமி திண்டிவனத்தில் இருப்பதாகவும் அவரிடம் போய்ப் பேசினால் அந்த நாள் சமாசாரமெல்லாம் சொல்லுவார் என்றும் பெரியவா கூறவே, திண்டி வனம் சென்று அந்த முதியவரைச் சந்தித்துப் பேசினேன். உடல்நலம் குன்றிப் படுத்திருந்த அவர் உற்சாகத்துடன் பள்ளிநாட்களை நினைவுகூர்ந்ததோடு, தம் இல்லத்தில் நடந்த ஓர் அதிசய நிகழ்ச்சியையும் கூறினார்.

கிருஷ்ணசர்மாவின் தந்தை வெங்கடராமய்யாவும் சுவாமிநாதனின் தந்தை சுப்ரமணியசாஸ்திரிகளும் நண்பர்கள். ஒரு சமயம் சாஸ்திரிகள் தம் பிள்ளையின் ஜாதகத்தை எடுத்து வந்து நண்பரிடம் காட்டினார். அதைப் பார்த்துவிட்டு வியந்த வெங்கடராமய்யா, ''உன் பிள்ளை உலகம் போற்றும் ஒரு மகானாக விளங்குவான்'' என்று கூறியதோடு, சுவாமிநாதனை அழைத்து, உள்ளங் காலைக் காட்டச் சொல்லி, ''இந்தச் சக்கரங்களைப் பார்த்தியா? சுவாமிநாதன் தெய்வப்பிறவி. இவன் இந்த லோகத்துக்கே குருவாகப் போகிறான். இவன் பாதம் பட்டு, இந்த மண் புனிதமடையப் போகிறது'' என்று கூறினாராம்.

நான் திண்டிவனம் பள்ளிக்குச் சென்று பெரியவா படித்ததற்கு அடையாள மாக ஏதாவது கிடைக்குமா என்ற ஆர்வத்தில் தலைமை ஆசிரியரின் அனுமதி யுடன் பழைய ரெக்கார்டுகள் வைக்கப்பட்டிருந்த அறையைத் துழாவினேன். அதிசயத்திலும் அதிசயமாக ஒரு வருகைப் பதிவேட்டின் ஒரே ஒரு காகிதம் மட்டும் கிடைத்தது. அது 1904-ம் வருஷம் பெரியவா இரண்டாம் பாரம் படித்தபோது, அந்த வகுப்பின் வருகைப் பதிவேட்டின் ஒரு ஷீட். அதில் 'சுவாமிநாதன்' என்ற பெயரைக் கண்டபோது எனக்கு மகிழ்ச்சி நிலைகொள்ள வில்லை. மறுநாளே, ஆந்திராவிலிருந்த பெரியவாளைத் தரிசிக்கச் சென்றேன்.

நடுநிசி, பூர்ண நிலா. பெரியவா ஓர் ஊரிலிருந்து வேறோர் 'காம்ப்'புக்கு மேனாவில் பயணித்துக் கொண்டிருந்தார். கூடவே ஓடி, திண்டிவனம் சென்ற விவரத்தையும், 'வருகைப் பதிவேடு' காகிதம் கிடைத்த செய்தியையும் கூறினேன். சற்றுத் தொலைவு சென்றதும் மேனா நின்றது. உடன் வந்தவர் களையும், மேனாவைத் தூக்கி வந்தவர்களையும் ஆகாரம் செய்துவிட்டு வரும்

படி பணித்துவிட்டு. பெரியவா அந்த வருகைப் பதிவேடு 'ஷீட்'டை வாங்கி, டார்ச்லைட், லென்ஸ் உதவியோடு அதைப் பார்த்தார். முகம் மலர்ந்தது.

''இது எப்படிடா உனக்குக் கிடைத்தது?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டு விட்டு, அதிலிருந்த பெயர்களை ஒவ்வொன்றாகப் படித்தார். அறுபத்துநான்கு வருடங்களுக்கு முந்தைய நாட்களின் நினைவுகளில் ஒரு கணம் மூழ்கிப் போனார். தம்முடன் இரண்டாம் பாரத்தில் படித்த மாணவர்களை நினைவு கூர்ந்ததுடன், அவர்களில் யார் யார் அப்போது உயிருடன் இல்லை என்பதை யும், மற்றவர்கள் எந்த ஊரில் இருக்கிறார்கள் என்பதையும் சொன்னார். இறுதி யாக, ''என் பேர் எல்லாருக்கும் கடைசியில் இருக்கே, பெரியவா படிப்பிலே 'மக்கு'ன்னு நீ நினைச்சியா?'' என்று சிரித்துக் கொண்டே என்னிடம் கேட்டார்.

''இல்லே, பெரியவா பேர் ஏன் கடைசிலே இருக்குன்னு நினைச்சுண்டேன்'' என்ற உண்மையைச் சொன்னேன்.

''என் பூர்வாச்ரம தகப்பனாருக்கு ஸ்கூல் இன்ஸ்பெக்டர் உத்தியோகம். அடிக்கடி அவரை ஊர் மாத்திடுவா. சிதம்பரத்துலேருந்து திண்டிவனத்துக்கு செப்டம்பர் மாசம் மாத்தலாயி வந்தார். பாதிலே வந்து இந்த ஸ்கூல்லே சேர்ந்தேன். அதனாலேதான் என் பேரு கடைசிலே எழுதியிருக்கு'' என்று விளக்கம் தந்தார்.

இவ்வாறு அபூர்வமான பழைய நிகழ்ச்சிகள் சிலவற்றைக் கூறி, அக் கட்டுரைத் தொடரைத் தொடர்ந்து எழுதுவதற்கு எனக்கு உற்சாகம் அளித்து வந்த பெரியவா, ஒரு கட்டத்தில் திடீரென்று நிறுத்தச் சொல்லிவிட்டார்.

**ஆ**ந்திரப் பிரதேச முகாம் ஒன்றில் பெரியவாளைத் தரிசித்து, அந்த வாரக் கட்டுரைத் தொடர்பாக சில விளக்கங்கள் பெற்றுக்கொண்டு, அன்று காலை தான் சென்னை திரும்பியிருந்தேன். உணவருந்திவிட்டு அலுவலகம் புறப்பட்டுக் கொண்டிருந்தேன்.

ஆந்திராவிலிருந்து ட்ரங்க்கால் வந்தது. ''மடத்து மானேஜர் விசுவநாத ஐயர் பேசறேன். நீங்க எழுதிண்டிருக்கிற 'ஸ்ரீ சைலத்தில் ஸ்ரீ சங்கரர்'ங்கிற கட்டுரையை இந்த வாரத்தோட முடிச்சுடச் சொல்லிப் பெரியவா சொல்லச் சொன்னா...''

''சரி.. அப்படியே முடிச்சுடறேன்னு பெரியவாகிட்டே சொல்லிடுங்கோ'' என்று கூறிவிட்டு, அலுவலகம் புறப்பட்டுச் சென்றேன்.

கடவுளும், முக்காலமும் அறிந்த ஞானியும் ஒன்று. அவர்கள் செய்கைகளுக்கு விளக்கம் பெறவோ, காரணம் அறியவோ இயலாது. 'கடவுட் சித்தம்' போல் மகானின் சித்தமும் நம் அறிவுக்கு அப்பாற்பட்டது. நாம் ஏமாற்றமோ, துயரமோ அடைவதில் பொருளில்லை.

கட்டுரைத் தொடர் முடிந்ததே தவிர, பெரியவா தம் கடந்த கால வாழ்க்கை நிகழ்ச்சிகளை என்னிடம் நினைவுகூர்வது முற்றுப் பெறவில்லை.

கட்டுரைத் தொடர் முடிந்து ஏழெட்டு வருடங்கள் கழித்துக் கலவையில் ஒரு தரிசனத்தின்போது, ''டேய், என் சின்ன வயசுலே, அடுத்த பட்டத்துக்காக, காஞ்சிபுரத்துலேருந்து என்னை ஒருத்தர் வண்டியிலே கலவைக்கு அழைச்சிண்டு வந்தார்னு நான் 'பவன்ஸ் ஜர்னல்'லே எழுதியிருந்ததா நீ சொன்னே பாரு, அவர் இங்கேதான் இருக்கார்... போய்ப் பார்த்துப் பேசிட்டு வா'' என்று அந்த வீட்டைக் காட்டுவதற்காக ஒருவரை உடன் அனுப்பி வைத்தார் பெரியவா.

அவர் பெயர் முனிரத்தினம் முதலியார். அப்போது அவருக்குத் தொண்ணூறு

வயதுக்கு மேலிருக்கும். அறுபத்தெட்டு வருடங்களுக்கு முன் நடந்த நிகழ்ச்சியை மெள்ள மெள்ள நினைவுபடுத்திக் கொண்டு அவற்றைத் தெளிவாகக் கூறினார்:

''கோவேறுக் கழுதை வண்டியைக் கட்டிக்கினு, சாமியை அழைச்சிகினு வர திண்டிவனம் புறப்பட்டேன். நல்லவேளையா, அவரு, அவங்க அம்மா அல்லாரும் அப்ப காஞ்சீபுரத்துலேயே இருந்தது தெரிஞ்சுது. அவங்களும் திண்டிவனத்திலேருந்து கலவைக்குத்தான் வந்துக்கிட்டிருந்தாங்களாம். நான் சாமியை மட்டும் என் வண்டியிலே குந்திக்கச் சொல்லி வேகமா ஓட்டிக்கினு வந்தேன். மத்தவங்க எல்லாரும் பின்னாலே ஒரு வண்டிலே வந்தாங்க..'' என்று கூறி நேரில் பார்ப்பது போல் பின்னர் நடந்தவற்றையெல்லாம் விவரித்தார் முதலியார்.

*1980-ம் ஆண்டு தமது 99 வயதில் முனிரத்தினம் முதலியார் சிவபதம் அடைந்தார்.*

ஸ்ரீ காஞ்சிப் பெரியவர் அவ்வப்போது பக்தர்களின் கனவுகளில் வந்து அவர்களைப் பரவசத்தில் மூழ்கடிப்பது சாதாரணமாக நடைபெறும் நிகழ்ச்சி களாகும். நேரில் தரிசித்தவர்களைத் தவிர, அந்த நல்வாய்ப்பைப் பெறாதவர் களையும் கனவில் வந்து சுவாமிகள் ஆட்கொண்ட நிகழ்ச்சிகளும் நிறைய உண்டு. அத்தகைய கனவுக் காட்சிகளின்போது, அருட்கட்டளைகள் இடுவார்; அருளுபதேசம் செய்வார்; அன்பொழுகப் பேசுவார்; சிரித்து மகிழ்வார். சில நேரங்களில் கனவுகளுக்கே உரிய இயற்கைக்கு மாறான, விநோதமான, விசித் திரமான தரிசனங்களும் இருக்கும்.

தரிசனத்துக்கு வரும்போது சிலர், பெரியவா தங்கள் கனவில் வந்த விவரங் களை அவரிடமே கூறுவதை நான் கேட்டிருக்கிறேன். வேறு சிலரோ, அதற்கான விளக்கத்தையும் அறிய விரும்புவார்கள். பெரும்பாலும் அவர்களுக்குப் புன்ன கையே பெரியவாளின் பதிலாக அமையும்.

பிறரைப் போன்று எனக்கும் பெரியவாளின் கனவு தரிசனங்கள் பல உண்டு. அவற்றில் ஒன்று...

1969-ம் ஆண்டு ஜூன் மாதமோ, ஜூலையோ... அந்த வாரத்துக்கான கார்ட்டூன் ஐடியாக்களை வழக்கப்படி ஆசிரியர் வாசனிடம் காண்பித்து 'அப்ரூவல்' வாங்குவதற்காக ஜெமினி ஹவுஸுக்குச் செல்கிறேன். அவர் உடல் நலமின்றி மாடி அறையில் படுத்துக் கொண்டிருப்பதை அறிந்து, அங்கு செல்ல, மாடிப்படி ஏறிச் செல்கிறேன். Landing-ல் பெரியவா நின்று கொண்டிருக்கிறார்!

''எங்கேடா அவசரமா போறே?'' என்று கேட்டுப் பெரியவா என்னைத் தடுத்து நிறுத்துகிறார்.

''எடிட்டர் கிட்டே கார்ட்டூன் ரஃப் ஐடியாக்களைக் காட்டப் போறேன்.''

''வாசனுக்கு உடம்பு சரியில்லே. இப்ப தொந்தரவு பண்ண வேண்டாம். அதை இப்படிக் குடு, நான் பார்க்கறேன்'' என்று கூறி என் கையில் வைத்திருந்த

காகிதங்களை வாங்கிக் கொள்கிறார். கனவு கலைந்து விடுகிறது.

ஓரிரு மாதங்களில் வாசன் இயற்கை எய்தி விடுகிறார்.

எனக்கு எழுத்துப் பணி அதிகமாகி விட்டதால் கார்ட்டூனில் கான்ஸென்ட்ரேஷன் குறையத் தொடங்கவே, நாளடைவில் நான் கார்ட்டூன் பொறுப்பிலிருந்து விடுபடுகிறேன்.

1970-ம் ஆண்டு திருவண்ணாமலை ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகளின் நூற்றாண்டு ஜயந்தியையொட்டி, அந்த மகானைப் பற்றி எழுதுவதற்காகப் பெரியவாளிடம் ஆசி பெறச் சென்றேன். அந்த அருளாசியின் காரணமாக, 'அருணாசல மகிமை' மலரத் தொடங்கியது. அதையடுத்து, அடுத்தடுத்து பதினைந்து ஆண்டுகள் ஆலய தரிசனப் பயணங்களும் அதன் தொடர்பான கட்டுரைகளும் என் முக்கியப் பணிகளாகிவிட்டன.

என் பத்திரிகை வாழ்க்கையைத் திரும்பிப் பார்க்கும்போது, இப்படியொரு திருப்பத்துக்குப் பெரியவாளின் திருவுளச் சித்தமே காரணம் என்பதையும், அதன் அடையாளமாகத்தான் கனவில் வந்து கார்ட்டூனை என் கைகளிலிருந்து பெற்றுக் கொண்டார் என்பதையும் நான் எப்படி மறக்க முடியும்?

கனவில் தொடங்கிய பயணக் கட்டுரைகள் கனவிலேயே முடிக்கப்பட்ட அதிசயத்தையும் கூற வேண்டும் அல்லவா?

விகடன் தொடங்கிய நாளிலிருந்து எந்த ஒரு தொடரும் தொடர்ந்து இத்தனை ஆண்டுகள் இடம் பெற்றதில்லை. அதற்கு ஓர் இடைவேளை அளிப்பது அவசியமும் பொருத்தமுமாகும் என்று கருதி ஆலயப்பயணக் கட்டுரைகளைத் தற்போதைக்கு நிறுத்திக் கொள்வது என்று 1985-ம் ஆண்டு இறுதியில் விகடன் ஆசிரியர் ஆழ்ந்த சிந்தனைக்குப் பின்னர் ஒரு முடிவுக்கு வந்தார்.

இந்த முடிவைப் பெரியவாளிடம் தெரிவித்துவிட வேண்டும் என்று நாங்கள் இருவரும் காஞ்சீபுரம் சென்றோம். அன்று பெரியவா மௌனவிரதம் மேற்கொண்டிருந்தார். ஆசிரியர் தனது எண்ணத்தைப் பெரியவாளிடம் எடுத்துரைத்து, "பெரியவா என்ன சொல்கிறாரோ அப்படிச் செய்கிறேன்" என்று கூறினார். பெரியவா சற்றுச் சிந்தித்துவிட்டு, 'சரி அப்படியே செய்' என்பது போல் தலையசைத்தார்.

காஞ்சீபுரத்திலிருந்து திரும்பி வந்த பின்னர் வழக்கப்படி பெரியவா தரிசனத்தைப் பற்றி வீட்டில் பேசிக் கொண்டிருந்தேன். அப்போது என் சகோதரர் கோபாலகிருஷ்ணன், பத்து நாட்களுக்கு முன்னர் பெரியவா தன் கனவில் வந்த விவரத்தைக் கூறினார்.

"கனவில் வந்த பெரியவா, 'உன் அண்ணா 'திருமுனையூர்' கோயிலைப் பத்தி எழுதிட்டானா?' என்று ரெண்டு மூணு தரம் கேட்டார்" என்றார்.

"திருமுனையூரா..?! அப்படியொரு ஊருக்கு நான் போனதாகவே நினைவில்லையே" என்று கூறிவிட்டு, இரண்டு வாரங்களுக்கு முன்னர் எழுதிய கட்டுரை நினைவுக்கு வரவே, புரட்டிப் பார்த்தேன். அதில், நன்னிலம் வட்டத்தி உள்ள 'திருப்பனையூர்' திருத்தலத்தைப் பற்றி எழுதியிருந்தேன். நால்வர் பாடிய ஸ்ரீசௌந்தரேச்வரர் எழுந்தருளியிருக்கும் ஆலயம் அது.

திருப்பனையூரைப் பற்றித்தான் பெரியவா கனவில் சகோதரரிடம் விசாரித்திருக்க வேண்டும் என்று உறுதியாயிற்று. என் குறிப்புப் புத்தகத்தை எடுத்துப் பார்த்தேன். திருப்பனையூர்தான் நான் கடைசியாகப் பார்த்த கோயில்!

அத்துடன் அந்தக் குறிப்பிட்ட பயணம் முடிந்து சென்னை திரும்பினேன். ஆசிரியர் முடிவெடுப்பதற்கும் அப்பயணத்தின் போது பார்த்த கோயில்கள் அனைத்தையும் நான் எழுதி முடிப்பதற்கும் சரியாயிருந்தது. கடைசியாகப் பார்த்த திருப்பனையூருடன் 'திருத்தலப் பெருமை' முடிவுற வேண்டும் என்று பெரியவா சங்கல்பித்து விட்டிருந்தது பின்புதான் எங்களுக்குப் புரிந்தது!

பெரியவாளின் சித்தம், ஆசிரியரின் சிந்தனையைத் தூண்ட, நான் செயல் படுத்தினேன். இதுவே உண்மை.

**ப**தினைந்து ஆண்டுப் பயணங்களின்போதும் வாராவாரம் கட்டுரைகளை எழுதியபோதும் பெரியவா தோன்றாத் துணையாயிருந்து எவ்வாறு என்னை வழிநடத்திச் சென்றார் என்பதை என் பயணக் கட்டுரைகளில் அவ்வப்போது ஓரளவு எழுதி வந்திருக்கிறேன். அவற்றில், இமாலயத்தில் எனக்குக் கோமுக தரிசனம் செய்து வைப்பதற்காக, 'கனவா நனவா' என்று அறுதியிட்டுக்கூற முடியாத வகையில் என் முன் பெரியவா தோன்றிய அற்புதத் தரிசனத்தை மீண்டும் நினைவுகூர விரும்புகிறேன்.

இரண்டாம் முறையாக இமாலய யாத்திரை மேற்கொண்டபோது பத்ரி, கேதார், கங்கோத்ரி, யமுனோத்ரியுடன் கங்கை முதன்முதலாகக் கண்ணுக்குத் தோன்றும் கோமுகத்தையும் காண வேண்டும் என்று மிக ஆவலாய் இருந்தேன் நான். பெரியவாளிடம் தேனம்பாக்கத்தில் ஆசிபெற்ற போது, 'கோமுகமும் பார்க்கணும்' என்று சிறு குழந்தையைப்போல் துடித்தேன். நான்கு ஐந்து முறை கேட்டும் பெரியவா பேசாமல் இருந்தார். நான் விடாமல் வற்புறுத்திக் கேட்டுக் கொண்டிருந்தேன். எதிர்ப்புறம் பார்த்துப் படுத்துக் கொண்டிருந்த பெரியவா என்னைப் பார்க்காமலே கையை மட்டும் உயர்த்தி, ஆசி வழங்கினார்.

கோமுகத்துக்கு ஒரு கிலோ மீட்டர் தொலைவில், முதல்நாள் இரவு நான் ஒரு மோசமான நோயாளியாகி, தூக்கமின்றி, ஆகாரமின்றி, ஜன்னிகண்டு, வாயில் வந்ததைப் பிதற்றியபடி ஓரிடத்தில் படுத்திருந்தபோது, கோமுகத்தைக் காணாம லேயே இறந்துவிடப் போகிறேன் என்றே நினைத்துவிட்டேன்.

அப்போது பெரியவா என் முன் தோன்றினார். ''நான் உன்னுடன் வருவதற் கில்லை. பூஜைக்குப் போக வேண்டும். மடத்திலிருந்து ஒரு கடிதம் தரச்சொல் கிறேன். அதை எடுத்துக் கொண்டு கோமுகம் போய் வா'' என்றார். உள்ளத்தில் நம்பிக்கையும் உறுதியும் பிறந்தது. விடிந்ததும் எழுந்து வேகமாக நடக்கத் தொடங்கி, கோமுகத்தைத் தரிசித்து, குகையினின்றும் பெருகிவரும் 'ஐஸ்' கங்கையிலும் நீராடினேன்.

அன்று விடியற்காலை, புனிதரின் உருவத்தை நான் மிகமிகத் தெளிவாகவே கண்டேன். அது ஒரு கனவென்று நான் நம்பத் தயாராயில்லை... பல ஆண்டு களுக்கு முன், பால்பிரண்டனுக்கு ஒட்டல் அறையொன்றில் காஞ்சிப் பெரியவர் ஒளிமயமாய்க் காட்சி தந்து, ரமண பகவானிடம் செல்லும்படி அவருக்கு அருளிய நிகழ்ச்சி, அக்கணம் என் நினைவுக்கு வந்தது...

ஏதோ ஒரு காரணத்துக்காக எனக்குக் கோமுகம் செல்ல ஆசி வழங்க முதலில் தயங்கிய பெரியவா, குழந்தையாகப் பிடிவாதம் பிடித்த என் ஆசை நிறைவேற ஆசி வழங்கிவிட்டு, நான் பெரும் சோதனைக்குள்ளானபோது நேரில் வந்து, நம்பிக்கையும் தைரியமும் அளித்து, கோமுக தரிசனம் செய்வித்து வைத்த கருணைக்கு ஈடு இணையேது?

சென்னைக்குத் திரும்பி, கோமுக தரிசனக் கட்டுரை வெளியான வெள்ளிக் கிழமை நான் காஞ்சீபுரம் சென்றிருந்தேன். உள்ளே ஒருவர் அக்கட்டுரையைப்

பெரியவாளுக்குப் படித்துக் காட்டிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது.

சற்றைக்கெல்லாம், ஜன்னலில் தரிசனம் அளித்த பெரியவா, என்னைக் கண்டதும், ''கோமுகத்தைப் பார்க்காமலேயே அன்னிராத்திரி செத்துப் போயிடுவேன்னு நினைச்சியா.. அப்போ பெரியவாளே வந்து உனக்கு லெட்டர் குடுத்து அனுப்பிச்சு, போய்ப் பார்த்துட்டு வரச்சொன்னாளா..?'' என்று சிரித்தபடியே விசாரித்தார்.

தேனம்பாக்கத்தில் வேறொரு சமயம் முற்றிலும் மாறான ஒரு தரிசனம். நேரில் கண்ட காட்சி, கனவுக் காட்சி போலிருந்தது.

காசியில் பெரியவாளின் அருளாணையோடு எழும்பிய ஸ்ரீ காமகோடீச்வரர் ஆலயத்துக்கு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் அன்று காலை கும்பாபிஷேகம் செய்து வைக்கிறார். அங்கு செல்ல முடியாத நான், பெரியவாளைத் தரிசித்துப் புண்ணியம் பெறலாம் என்று தேனம்பாக்கம் சென்றேன். சற்றும் எதிர்பாராத வகையில் அன்று அதே முகூர்த்தத்தில் அங்குள்ள பிரும்மபுரீச்வரருக்கும் கும்பாபிஷேகம் நடைபெறுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

ஆச்ரமத்துக்குள் அமர்ந்திருந்த பெரியவாளைத் தரிசிப்பதற்காகச் சென்றேன். உள்ளே நுழையும்போது ஜவுளிக்கடை விச்வநாத முதலியார் அண் சன்ஸ்



சங்கரன் ஒரு காமிராவை என்னிடம் கொடுத்து பெரியவாளைப் படம் எடுக்கச் சொன்னார். அதுவரை பெரியவாளை போட்டோ எடுத்திராத நான், தயங்கிய வாறு அதை எடுத்துச் சென்றேன். பெரியவா அசைவற்று, ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்திருந்தார். அவர் ஜாடையே மாறிவிட்டிருந்தது. திருமேனி வண்ணமும் புதுமையாயிருந்தது. அம்மாதிரியான தோற்றத்தில் பெரியவாளை நான் பார்த்ததேயில்லை. பெரியவா தேனம்பாக்கத்தில் இருந்தவாறே, அக்கணம் காசியிலும் இருப்பது போன்றே எனக்குத் தோன்றியது.

கனவு லோகத்தில் காண்பது போன்ற அந்த அமானுஷ்யத் தோற்றத்தை இருமுறை படம் எடுத்துவிட்டுத் திருப்தியுடன் திரும்பி வந்தேன்.

பின்னர், அந்த ரோலை டெவலெப் செய்தபோது, அந்த இரண்டு ஃப்ரேம் கள் மட்டும் வெள்ளையாயிருந்ததாக சங்கரன் கூறினார்!

**ம**யிலை சம்ஸ்கிருதக் கல்லூரியில் 1958-ல் பெரியவா தங்கியிருந்தபோது, தங்கள் இல்லத்துக்கு ஒரு நாள் எழுந்தருள வேண்டும் என்று திருமதி பட்டம்மாள் வாசன் பெரியவாளிடம் கேட்டுக்கொண்டார்.

ஒரு நாள் பெரியவா திடீரென்று வீதிவலம் புறப்பட்டார். ஜெமினி ஹவுஸுக்கும் வரப்போவதாகத் தகவல் வந்தது. ஸ்டூடியோவில் படப்பிடிப்பில் மும்முரமாக ஈடுபட்டிருந்த வாசன் அவர்களுக்கு அது தெரிவிக்கப்பட்டது. சற்றைக்கெல்லாம் இல்லம் வந்து, ஸ்நானம் செய்துவிட்டு, திருநீறு அணிந்து, பஞ்சகச்சம் கட்டி, பூர்ணகும்பத்துடன் வாசலில் தயாராயிருந்தார் வாசன்.

மரியாதைகளைப் பெற்றுக்கொண்டு முன்ஹாலுக்குள் வந்த பெரியவா, அங்கு வைக்கப்பட்டிருந்த ஒரு போட்டோவை உற்றுப்பார்த்தார். புன்னகை அரும்பியது. தம்முடன் வந்திருந்த ஸ்ரீமடத்துச் சிப்பந்தியைப் பார்த்து, "டேய், இந்தப் போட்டோலே நீயும் இருக்கே... பார்த்தியா?" என்று கூறினார். அந்த நபரும் உற்றுப்பார்த்துவிட்டு மகிழ்ந்தார். பின்னர் பெரியவா, அந்த இல்லம் தமக்கு ஏற்கெனவே பழக்கப்பட்டதுபோல், அத்தனை சுவாதீனமாகவும் விறுவிறுவென்றும் நடந்து நேரே பூஜை அறைக்குள் சென்று பார்த்துவிட்டு, அங்கேயே சிறிது நேரம் அமர்ந்து அனைவருக்கும் பிரசாதம் தந்தருளினார்.

பூஜையறையில் வைக்கப்பட்டிருந்த போட்டோவைத்தான் அன்று ஹாலில் எடுத்து வைத்திருந்தார்கள். அதில் பெரியவா நடுநாயகமாக நின்றுகொண்டிருக்க, வலப்புறமும் இடப்புறமும் நின்றிருந்த சிலர், தங்கள் கைகளில் ஆளுக்கு ஐந்தாறு நோட்டுப் புத்தகங்களை வைத்துக்கொண்டிருந்தனர்.

அது நாற்பது வருடங்களுக்குமுன் காஞ்சி மடத்தில் எடுக்கப்பட்ட படம். அத்தனை நோட்டுப் புத்தகங்களிலும் தாரக மந்திரமான ராமநாமா எழுதப் பட்டிருந்தது. ஒரு கோடிக்குமேல் 'ஸ்ரீராமஜயம்' எழுதி அன்று அவற்றைச் சுவாமிகளிடம் சமர்ப்பித்திருந்தவர் திரு. வெங்கடராம ஐயர். படத்தில் பெரியவாளுக்கு வலப்புறம் நிற்கும் பெரியவர். அமரர் வாசன் அவர்களின் சொந்த மாமா.

கோவிந்தபுரம் ஸ்ரீபோதேந்திராள், ஸ்ரீசமர்த்த ராமதாசர், ஸ்ரீபத்ராசலம் ராமதாசர், ஸ்ரீதுளசிதாசர், ஸ்ரீதியாகராஜ சுவாமிகள் போன்று, இருபதாவது நூற்றாண்டில் ஸ்ரீராமநாமத்தின் மகிமையை மக்களிடையே பரப்பி வந்த தோடு, 'ஸ்ரீராமஜயம்' எழுதுபவர்களுக்கு வெள்ளி அம்மன் காசுகள் தந்து அருள் வழங்கியவர் காஞ்சிப் பெரியவர். சுவாமிகளின் இந்த அருளாணையை நிறைவேற்றுவதையே தமது வாழ்க்கையின் ஒரே குறிக்கோளாகச் சிரமேற் கொண்டு, அல்லும் பகலும் அநேக வருடங்கள் ஸ்ரீராமநாமத்தை லட்சோப லட்சங்களாக எழுதிப் பெரியவாளுக்கு அவ்வப்போது அன்புக் காணிக்கை யாகச் சமர்ப்பித்து வந்திருக்கிறார் திரு. வெங்கடராம ஐயர். திருவிடைமருதூர், கோவிந்தபுரம், கும்பகோணம், காஞ்சீபுரம் - எங்கு சென்றாலும் கைகளில் 'ஸ்ரீராமஜயம்' எழுதிய நோட்டுப்புத்தகங்கள் இல்லாமல் செல்லமாட்டார். அன்னாரின் பக்தியையும் ஈடுபாட்டையும் பாராட்டும் வகையில் சுவாமிகள் அளித்த அம்பாள் விக்ரஹமும், தவழும் நவநீதகிருஷ்ணனும் 'ஜெமினி ஹவுஸ்' பூஜை அறையில் இன்றும் ஆராதிக்கப்பட்டு வருகின்றன. வெங்கடராம ஐயர் குழந்தையுள்ளம் படைத்த சுத்தாத்மா. மகா சாது. மாதுஸ்ரீ பாலாம்பாள் அம்மாளின் ஒரே தம்பி. தம் ஒரே மகன் வாசனையும் தம்பியையும் சிரம தசை யிலும் இரு கண்களாகப் போற்றி வளர்த்து வந்தவர் அந்த மாதரசி. இறுதிக் காலம்வரை மருமானுடனேயே தங்கியிருந்தார் வெங்கடராம மாமா.

ஒரு கோடி ராமநாமாக்களைப் பெரியவாளிடம் சமர்ப்பித்துவிட்டு, சில நாட்கள் ஸ்ரீமடத்திலேயே தங்கியிருக்க விருப்பம் தெரிவித்திருக்கிறார் வெங்கட ராம ஐயர். பெரியவா 'சரி' என்றதும் உறவினர்களுடன் மனைவியைச் சென்னைக்குத் திருப்பி அனுப்பிவிட்டு, மடத்திலேயே தங்கிவிட்டார். சில நாட்கள் கழித்துப் பெரியவா அவரை, 'நினைத்தாலே முக்தி கிடைக்கும்' திருவண்ணாமலை கார்த்திகை தீபதரிசனம் காணச் செல்லும்படிப் பணித்திருக் கிறார். புறப்பட்டுச் சென்றவர், வேறு சிவத்தலங்களைத் தரிசித்துவிட்டு, மைசூர் வந்து ஸ்ரீசாமுண்டீச்வரியைத் தரிசனம் செய்தார். பங்களூருக்குச் சென்று உறவினர்களைப் பார்த்துவிட்டுச் சென்னை வருவதாக மனைவிக்குக் கடிதம் போட்டிருக்கிறார். அன்று மாலை மைசூர் விடுதி அறையில், நாற்காலி யில் சாய்ந்தபடியே, அநாயாசமாக ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியின் திருவடியை அடைந்துவிட்டார்.

**ஸ்ரீ** பெரியவாளின் பரிபூரண ஆசியோடும் அருளோடும் விகடனில் ஆலயங் களையும் தெய்வப்படங்களையும் வரைந்து, ஈடு இணையற்ற ஓவியராகத் திகழ்ந்த 'சில்பி', மயிலை சம்ஸ்கிருதக் கல்லூரியில் பெரியவாளைத் தரிசித்த போதெல்லாம் தன் இல்லத்துக்கு வருகை தர வேண்டும் என்று அழைத்துக் கொண்டிருப்பார். பெரியவாளும் 'சரி' என்பதுபோல் புன்முறுவலுடன் தலை யசைப்பது வழக்கம்.

ஒரு நாள் அதிகாலையில் சாந்தோம் கடற்கரையில் சமுத்திர ஸ்நானம் செய்துவிட்டுப் பெரியவா கச்சேரி ரோட்டில் வந்துகொண்டிருந்தார். திடீரென்று அருண்டேல் தெரு திருப்பத்தில் நின்று, "இங்கேதானே 'சில்பி' வீடு இருக்கிறது?" என்று கேட்டு, அதை உறுதி செய்துகொண்டு, அந்தத் தெருவில் திரும்பி, "அவன் வீடு எங்கேயிருக்கு... விசாரி" என்று கூறவே, நாங்கள் ஒவ் வொரு வீடாக விசாரித்துக் கொண்டிருந்தோம். அதற்குள் பெரியவா ஒரு வீட்டுக்கு முன் வந்து நின்று "இதுவா பாரு?" என்றதும், உள்ளே சென்று விசாரித்தேன். ஆம்... அதுவேதான்! அப்போது 'சில்பி'யின் குடும்பத்தினர் மட்டுமே வீட்டில் இருந்தனர். 'சில்பி' வெளியூர் சென்றிருந்தார்.

சில்பியின் அம்மாவுக்குக் கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை.

பெரியவா நேரே பூஜையறைக்குச் சென்றார். பின்னர், கூடத்தில் வந்து அங்கு மாட்டியிருந்த படங்களை ஒவ்வொன்றாகப் பார்த்துவிட்டுப் புறப்பட்டார். அப்போது 'சில்பி'யின் அம்மா, ''எனக்கு ஆஸ்துமா தொந்தரவு அதிகமா இருக்கு... ரொம்பக் கஷ்டப்படறேன்'' என்று கூறினார். பெரியவா உடனே, ''தினம் இரண்டு வில்வ தளம் சாப்பிட்டுண்டு வாங்கோ'' என்று 'வைத்தியம்' சொன்னார்.

'சில்பி' ஊரிலிருந்து திரும்பியதும், 'பெரியவா வீட்டுக்கு வந்தபோது தான் இல்லாமல் போய்விட்டோமே' என்று மிகவும் வருத்தப்பட்டிருக்கிறார். பெரியவாளைத் தரிசித்தபோது, வீட்டுக்கு வந்ததைக் குறித்துத் தனது மகிழ்ச்சியைத் தெரிவித்துவிட்டு, பெரியவா வந்துவிட்டுப் போன சமயம் தான் வீட்டில் இல்லாமல் போனதற்கு வருத்தத்தையும் தெரிவித்தாராம். அப்போது பெரியவா சிரித்துக்கொண்டே, ''நீ 'ஆத்துக்கு வரணும்... ஆத்துக்கு வரணும்'னுதான் கூப்பிட்டுண்டிருந்தே... நீ ஆத்துலே இருக்கிறப்ப வாங்கோன்னு கூப்பிடலையே'' என்றாராம்.

**நு**ங்கம்பாக்கத்தில் தங்கியிருந்தபோது குருமூர்த்தி என்ற பக்தர் தமது இல்லத்துக்கு வருமாறு பெரியவாளை அழைத்தார். திருமூர்த்தி நகரிலிருந்த அவரது இல்லத்துக்குப் பெரியவா ஒரு மாலை நேரம் வந்தார். அப்போது குருமூர்த்தி வெளியே போய்விட்டிருந்தார்.

குருமூர்த்தி தம் தோட்டத்தில் பெரியவாளை வரவேற்பதற்காக ஒரு சிறிய மேடை கட்டி வைத்து, பந்தல் போட்டிருந்தார். சுவாமிகள், அந்த மேடையில் போய் அமர்ந்துகொண்டு ''குருமூர்த்தி எங்கே போயிருக்கார்னு எப்படியாவது கண்டுபிடிச்சு அழைச்சிண்டு வாங்கோ. அதுவரைக்கும் நான் இங்கேதான் உட்கார்ந்திண்டிருக்கப்போறேன்'' என்றார். அவ்வளவுதான். நான்கு கார்கள் நாற்புறமும் பறந்தன. முக்கால் மணி நேரம் கழித்து குருமூர்த்தி வரவழைக்கப்பட்டார். அவர் கண்கள் கலங்கியிருந்தன. உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. சுவாமிகளின் முன்வந்து நின்றவர், ''அபசாரம்... அபசாரம்... நான் பாவி. பெரியவாளை இத்தனை நேரம் காக்க வெச்சுட்டேன். என்னை க்ஷமிக்க வேணும்'' என்று கதறி அழ ஆரம்பித்து விட்டார். சுற்றியிருந்த கூட்டமும் அவருடன் சேர்ந்து ஆனந்தக் கண்ணீர் சொரிந்தது. சுவாமிகளோ புன்னகை புரிந்தவாறே, ''நான் வந்து உட்காரணும்தானே இதைக் கட்டிவெச்சிருக்கே. நான் உட்கார்ந்து நீ பார்க்காட்டா உன் மனசு ரொம்ப வருத்தப்படுமேன்னு தான் நீ வர வரைக்கும் உட்கார்ந்திண்டிருந்தேன்'' என்று கூறினார்.

**எ**ன் சித்தப்பாவின் பேத்தி அனுராதா. பள்ளிப்பருவத்தில் அழகுப் பதுமையாக வீட்டில் வளையவந்து கொண்டிருந்தவளை, அநியாயமாக இளம்பிள்ளை வாதம் தாக்கியது. பெற்றோர் அணுகாத டாக்டர்கள் இல்லை. பார்க்காத வைத்தியமில்லை. குணம் தெரியவில்லை. அந்தக் கால் சூம்பிப் போயிற்று. பெற்றோருக்கு நம்பிக்கை போய்விட்டது. குடும்பத்திலே சோக நிழல் படர்ந்தது. சில ஆண்டுகள் கடந்தன.

அப்போது பெரியவா மேற்கு மாம்பலம் சங்கரமடத்தில் தங்கியிருந்தார். தனிமையில் தரிசித்து, அனுவின் நிலைமையைப் பற்றிக் கூறினேன். ''நாளைக்குக் குழந்தையை அழைச்சிண்டு வா'' என்றார்.

மறுநாள் பெற்றோர் அனுவை காரில் அழைத்து வந்தனர். ஆனால், உள்ளே எப்படிச் செல்வது? அவளால் நடக்க முடியாது. தந்தை தூக்கிக்கொண்டுதான் வரவேண்டும். அத்தனை பேர் நடுவில் அப்படி வர அனுவுக்கு வெட்கம்!

நான் ஸ்ரீமடத்துக்குள் சென்றேன். பெரியவா சாஸ்திர வாக்யார்த்த சதஸில் அமர்ந்திருந்தார். என்னைப் பார்த்ததும் அருகில் வரும்படியழைத்தார்.

''குழந்தை வந்துட்டாளா?'' என்று கேட்டார்.

''வந்துட்டா... ஆனா, நடந்து வரமுடியாது. யாராவது அவளை எடுத்துண்டுதான் வரணும்... வெக்கப்படறா...'' என்றேன்.

''எங்கே இருக்கா...?''

''வாசல்லே கார்லே ஒக்காந்திண்டிருக்கா..''

சட்டென்று பெரியவா எழுந்தார்... மிக வேகமாக நடந்தார். நேரே கார் நிற்குமிடத்துக்கு வந்தார். பெரியவா வருகையைச் சற்றும் எதிர்பார்க்காத பெற்றோர் பதைபதைத்துப் போயினர். எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்த அனு, சட்டென்று திரும்பிப் பார்க்க, எதிரில் பெரியவா பிரத்யட்சமாகியிருப்பதைப் பார்த்து, 'இது உண்மையா... கனவா' என்று சுதாரித்துக்கொள்ள முடியாமல் கண்கள் கலங்க, மலங்க மலங்க விழித்தாள்.

கார் கதவைத் திறந்தேன். பெரியவா உள்ளே எட்டிப் பார்த்தார்.

''எந்தக் காலு?''

சொன்னாள். ஆடையைச் சற்று அகற்றினாள். பெரியவா திருஷ்டி அதன் மீது பதிந்தது. அன்புத் தெய்வத்தின் அபயஹஸ்தம் அருள்மாரி பொழிந்தது.

ஒரு மாதத்துக்குள் ஒரு நற்செய்தி. வேலூர் மருத்துவமனையில் இந்த நோய்க்கு ஒரு நவீன அறுவை சிகிச்சை செய்யும் நிபுணர் வந்திருக்கிறார்



என்றும் அவரிடம் காட்டலாம் என்றும் கேள்விப்படவே, பெற்றோர் அனுவை அங்கு அழைத்துச் சென்றனர். பெருமளவு குணம் தெரிந்தது. காலில் 'ஷூ' பொருத்தப்பட்டது. ஊன்றுகோலுடன் அனு நடக்க ஆரம்பித்துவிட்டாள். 'நடக்கவேமாட்டாள்' என்று நினைத்தவர்களின் நெஞ்சம் குளிர்ந்தது.

முதல் தரிசனத்தையடுத்து அனுவுக்குப் பெரியவாளிடம் அபரிமிதமான பக்தி ஏற்பட்டுவிடுகிறது. சதா சர்வகாலமும் அவர் பற்றிய நினைவுதான்... சுலோகங்களை மனப்பாடம் செய்யத் தொடங்குகிறாள். வீட்டில் இருந்தபடியே படித்து, பரீட்சைகள் எழுதி முதல்தரமாக பாஸ் பண்ணுகிறாள். வாழ்க்கையில் பிடிப்பும் நம்பிக்கையும் ஏற்படுகிறது. குடும்பத்தில் ஒளிபடருகிறது.

ஒரு முறை புத்தூருக்கு அருகிலுள்ள கார்வேட் நகருக்கு அனுவை அழைத்துச் சென்றேன். குளத்தின் கீழ்ப்படியில் அமர்ந்து பெரியவா மாலை அனுஷ்டானங்கள் செய்துகொண்டிருந்தார். நான் கீழிறங்கிச் சென்று "பெரியவாளைத் தரிசிக்க அனுராதா வந்திருக்கிறாள்" என்றேன். நிமிர்ந்து பார்த்தார். மேல்படியில் நின்றிருந்த அனு, "மன்னிக்கணும்... பெரியவாளுக்கு என்னாலே நமஸ்காரம் பண்ண முடியலே" என்று வருத்தத்துடன் சொன்னாள். "பரவாயில்லேம்மா.. நீ இத்தனை தூரம் வந்ததே ஆயிரம் நமஸ்காரங்களுக்குச் சமம்" என்று கூறி ஆசி வழங்கினார்.

பெண்ணுக்குத் திருமணம் செய்ய வேண்டும் என்ற ஆசை வந்தது தாயாருக்கு. எந்தத் தாயாருக்குத்தான் வராது? பெரியவாளிடம் வேண்டிக் கொண்டாள். பவானி படத்தை அனுக்கிரகித்துக் கொடுத்தார் பெரியவா.

டி.வி.எஸ்-ஸில் பணியாற்றிக் கொண்டிருந்த அனுவின் தந்தைக்கு ஐதராபாத்துக்கு மாற்றலாகிவிட்டது. அனுவுக்குப் பெரும் ஏமாற்றம். பெரியவாளைத் தரிசிக்க முடியாதே!

தரிசிக்க முடிந்தது. ஆறேழு மாதங்களில் பெரியவா ஐதராபாத்துக்கு எழுந்தருளினார். தனக்கு ஆசி வழங்கத்தான் தெய்வம் அங்கு தேடிக்கொண்டு வந்திருப்பதாகவே அனு எண்ணினாள். அதை நினைத்து, நினைத்துப் பூரித்துப் போனாள்.

ஸ்ரீமடத்துக்குச் சென்று தரிசனம் செய்தாள். பெண்ணின் திருமணத்தைப் பற்றித் தாயார் பெரியவாளுக்கு நினைவுப்படுத்திக்கொண்டேயிருந்தாள். தினம் பூஜைக்கு வந்து தீர்த்தப் பிரசாதம் பெற்றுச் செல்லும்படி உத்தரவாயிற்று.

ஒரு நாள் ஐதராபாத்தில் வீதிவலம் புறப்பட்டுச் சென்றார் பெரியவா... அப்போது தாங்கள் குடியிருந்த பகுதிக்கு வந்துகொண்டிருப்பதாகச் செய்தி அறிந்த அனு, பெரியவா தங்கள் வீட்டுக்கு வரவேண்டும் என்று கொள்ளை ஆசைப் பட்டாள்.

தொலைவிலிருந்து தரிசனமாவது செய்யலாம் என்று 'கேட்' அருகில் வந்து நிற்கிறாள். பெற்றோரும் அங்கு வருகின்றனர். முதலிலேயே அழைத்திருக்க வேண்டுமோ, அல்லது வரும் வழியில் சென்று வேண்டிக் கொள்ளலாமா என்று அவர்கள் சிந்தித்துக் கொண்டிருக்கும்போதே, அவர்கள் வீட்டிலிருந்து ஐம்பது அடி தொலைவில் ஒரு தெருவில் பெரியவா நுழைகிறார். அப்போது கேட்டருகில் அனு நின்று கொண்டிருப்பதைப் பார்த்துவிடுகிறார். 'சட்'டென்று திரும்பி அந்த 'கேட்'டை நோக்கி வருகிறார். அனுவுக்குப் பரவசம் மேலிடுகிறது. நம்பிய தெய்வம் கைவிடவில்லை. மனமறிந்து வாழ்த்தியருள வீடு தேடி வருகிறது.

பெற்றோர் நமஸ்காரம் செய்ய, அனு கையெடுத்துக் கும்பிடுகிறாள்.

பெரியவா புன்முறுவலோடு ஆசி வழங்கிவிட்டு, பாதயாத்திரையைத் தொடரு கிறார்.

அனுவுக்கு மணமகன் தேடி, தந்தை பத்திரிகையில் விளம்பரம் தருகிறார். அதைப் பார்த்துவிட்டு லண்டனில் பணியாற்றிக்கொண்டிருந்த, ஆசாரமிக்க குடும்பத்தைச் சேர்ந்த நம்ம ஊர்ப்பையன், சென்னையில் வசிக்கும் பெற்றோ ருக்குக் கடிதம் எழுதுகிறார். திருமணம் நிச்சயமாகி, விமரிசையாக நடைபெறு கிறது.

இருபது வருடங்களுக்குமேலாக, இரு செல்வங்களுடன், திரு. வெங்கடேச னும் அனுராதாவும் லண்டனில் வசித்துக் கொண்டிருக்கின்றனர்.

மூத்தவள் ப்ரியா. பிள்ளையின் பெயர் சங்கர். பள்ளியில் அதிபுத்திசாலி என்று பெயர்வாங்கிப் பல பரிசுகள் பெற்றிருக்கிறான்.

**அ**து 1965-ம் ஆண்டு... மயிலை ஸ்ரீகற்பகாம்பாள் கல்யாண மண்டபம்.. விடியற்காலை நாலரை மணி... பெரியவா வெளியே புறப்படுகிறார். இரவு மண்டபத்திலேயே தங்கிவிட்டிருந்த நான், 'ரெடி' பண்ணிக்கொண்டு கூடவே நடக்கிறேன். திரும்பிப் பார்க்கிறார். அருகில் செல்கிறேன். நடந்துகொண்டே பேசுகிறார் பெரியவா:

''நீ திருப்பதியைப்பத்தி எழுதறயா?''

''பெரியவா சொல்றபடி செய்யறேன்...''

''திருப்பதி இருக்கு பார்... அது உலகத்திலேயே மகாசக்தி வாய்ந்த, மிக உயர்ந்த க்ஷேத்திரம். மகேச்வரன், விஷ்ணு, பிரும்மா, வராகர், குமரன் இவாளோட சக்திகளும் சப்தமாதாக்களின் சக்திகளும் ஒண்ணா, ஒரே இடத்திலே சேர்ந்திருக்கிற இடம் அது... மலைமேல இருக்கிற பெருமாள் ரொம்ப ரொம்பச் சக்தி உள்ளவர். நான் முன்னே காசியாத்திரை பண்ணினப்ப ஸ்ரீவேங்கடாசலபதியைத் தரிசனம் பண்ணினேன்... கர்ப்பகிரஹத்துக்குள்ளே போய்ப்பார்க்க அனுமதிச்சா... சுவாமி விக்ரகத்துக்குப் பின்னாலே போய்க்கூட நன்னா பார்த்தேன்...'' என்று பெரியவா பழைய நிகழ்ச்சியைக் கூறிக்கொண்டு இருந்தபோது தீவிர பக்தர் ஒருவர் பெரியவாளுக்கு வீதியிலேயே நமஸ்காரம் செய்து, தங்கள் இல்லத்துக்கு எழுந்தருளும்படிப் பிரார்த்தித்துக் கொண்டார். கவனம் திசை திரும்பியது. திருப்பதியைப்பற்றி ஒரு அரிய பொக்கிஷம் கிடைக் கப்போகிறது என்ற எனது பேராசை நிராசையாயிற்று.

அதன் பின்னர் இரண்டு மூன்று முறை பெரியவாளிடமிருந்து திருப்பதியைப் பற்றி மேலும் விவரங்களை அறிந்துகொள்ள முயன்றேன். இயலவில்லை.

இருமுறை பெரியவாளுடன் திருமலைக்கு நடந்துசெல்லும் நல்வாய்ப்பும் நற்பேறும் எனக்குக் கிட்டியது. முதல் முறை சென்றபோது, திருப்பதி 'டாபிக்' கைத் தொடங்கினேன். எப்போது எழுதத் தொடங்கலாம் என்று அறிய விரும் பினேன். நேரடியான பதில் கிடைக்கவில்லை.

''நான் முதன்முதல்லே மலைக்குப் போனப்ப, சுவாமி விமானகோபுரத் துலே, மார்க்கண்டேயர் சிவலிங்கத்தைக் கட்டிண்டிருக்கிற மாதிரியும் சிவ பெருமான் எமனை விரட்டற மாதிரியும் ஒரு சிற்பத்தைப் பார்த்த ஞாபகம் இருக்கு. ஆனா, அதுக்கப்புறம் விமானத்துக்குப் போட்டிருக்கிற தங்கத் தகட்டுலே அந்தச் சிற்பத்தைக் காணோம்... நீ ஒண்ணுபண்றயா... வி.எஸ். தியாகராஜ முதலியார் தலைமைலேதான் அப்ப ஒரு கமிட்டி திருப் பணி பண்ணி விமானத்துக்குத் தங்கத்தகடு போட்டா... திருப்பணி ஆரம்பிக் கிறத்துக்கு முன்னாலே விமானத்தை ஒரு போட்டோ எடுத்திருப்பா... அது அவர் கிட்டே இருக்கும்... அவர்கிட்டேபோய் அந்த போட்டோவைப் பார்த்து, அதுலே நான் சொன்ன சிற்பம் இருக்கான்னு எங்கிட்டே வந்து சொல்லு'' என்று உத்தரவாயிற்று.

திருமலையிலிருந்து திரும்பியதும், வி.எஸ். தியாகராஜ முதலியாரைப் போய்ப் பார்த்து, பெரியவா கூறிய விவரங்களைச் சொன்னேன். அந்த போட்டோ தம்மிடம் இல்லை என்றும் அப்போது ஜி.கே. வேல்தான் புகைப் படங்கள் எடுத்ததாகவும் வி.எஸ்.டி. கூறினார். ஜி.கே. வேல் அவர்களிடம் சென்று வினவினேன். தேடிப்பார்த்துவிட்டு ''அந்த 'நெகட்டிவ்' கிடைக்க வில்லை'' என்று அவர் கூறிவிட்டார். ஏமாற்றத்துடன் திரும்பிய நான், பின்னர் பெரியவாளிடம் அந்த விவரங்களைத் தெரிவித்தேன்.

*1969*-ம் ஆண்டில் பெரியவாளுடன் இரண்டாம் முறையாக மலை ஏறிச் சென்றேன். இம்முறை ஓரிரு வார்த்தைகள் பேசியதைத் தவிர, பெரியவா மௌனமாகவே நடந்து வந்ததால், நான் திருப்பதி விஷயத்தைப்பற்றி விண்ணப்பிக்கவில்லை.

மறுநாள் கோயிலுக்குச் சென்று, தரிசனம் முடிந்து திரும்பும்போது பெரியவா மீண்டும் 'விமான மார்க்கண்டேயர் சிற்ப'த்தைப் பற்றி நினைவு கூர்ந்து, ''இங்கே இருக்கிற வயசான பட்டாச்சாரிகளைக் கேட்டுப்பாரு. அவாளுக்குத் தெரிந்திருக்கும்'' என்று கூறவே, நானும் பல வீடுகள் ஏறி இறங்கி, பலரிடம் விசாரித்துப் பார்த்தேன். ஓரிருவர் ''அப்படி இல்லையே'' என்று மறுத்தனர். சிலர் ''பார்த்ததில்லை'' என்றார்கள். வேறு சிலரோ ''ஞாபக மில்லை'' என்று கூறிவிட்டார்கள். நான் சேகரித்த விவரங்களைப் பெரியவாளிடம் கூறினேன். அதன்பிறகு திருப்பதி பற்றிப் பெரியவா என்னிடம் ஏதும் பேசவில்லை. நானும் அதைப்பற்றிக் கேட்காமலேயே இருந்து விட்டேன்.

ஆனால், இரண்டாம் முறை திருப்பதி சென்றபோது எனக்கு ஏற்பட்ட சில அனுபவங்கள் நாட்கள் ஆக ஆக... மாதங்கள் செல்லச் செல்ல, வருடங்கள் உருள உருள என்னைப் பெரும் தாக்கத்துக்கு உள்ளாக்கி, என் சொந்த வாழ் விலும் குடும்பச்சூழ்நிலையிலும் ஏற்பட்ட மாறுதல்களை மனத்திண்மையோடு எதிர்கொள்ளவும் பின்னர் நடந்த நிகழ்ச்சிகளைப் பற்றிய அரிய பெரிய விளக் கங்கள் பெறுவதற்கும் துணை நின்றன. இன்றும்கூட அவை எனக்கு ஞான தீபமாக ஒளிவழங்கிக் கொண்டிருக்கின்றன.

தற்போதைக்குத் தேவையில்லாதவற்றைத் தவிர்த்துவிட்டு, நடந்ததை, நினைவில் இருக்குமளவு கூற முயற்சிக்கிறேன்.

**அ**ன்று ஸ்ரீ நரசிம்மஜயந்தி. நான் மதியம் திருப்பதியிலிருந்து சென்னைக்குத் திரும்புவதற்காக பெரியவாளிடம் பிரசாதம் வாங்கச் சென்றேன். பெரியவா பூஜைக்கு அமரும் நேரம்... பிரசாதம் அளித்துவிட்டு, அமர்ந்தார். நான் பக்கத்து விடுதியில் தங்கியிருந்த புதுப்பெரியவாளை நமஸ்காரம் செய்துவிட்டு, விடைபெற்றுக் கொண்டிருந்தபோது, சிம்ஸன் வைத்தா அங்கே வந்து

''உன்னை ராத்திரி இங்கே தங்கிட்டு நாளைக் கார்த்தாலே மெட்ராஸுக்குப் புறப்பட்டுப் போகச்சொல்லி பெரியவா உத்தரவு பண்ணினா'' என்று கூறினார். 'பிரசாதம் கொடுத்துவிட்டு, பயணத்தை நிறுத்தியதற்கு என்ன காரணமோ? பூஜை முடிந்த பின்னர் பெரியவா ஏதாவது சொன்னாலும் சொல்லலாம்' என்று நினைத்துக் கொண்டேன். ஆனால், பெரியவா என்னைக் கூப்பிட்டு அனுப்பவே யில்லை.

விடியற்காலை மூன்று மணிக்கு ஜே. சடகோபன் என்னை எழுப்பினார்.



''உங்க அண்ணா ராதாகிருஷ்ணனும் சி.எஸ். ராமச்சந்திரனும் (அத்தையின் மாப்பிள்ளை) வந்திருக்கா. சுப்ரபாதம் சேவைக்கு கோயிலுக்குப் போயிருக்கா. நீங்க கார்த்தாலே ஊருக்குக் கிளம்பிப்போறதா அண்ணாகிட்டே சொன்னேன். உங்களைக் காத்திண்டிருக்கச் சொன்னார். அவரும் உங்களோட ஊருக்கு வராராம்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

பெரும் அதிர்ச்சி என்னைத் தாக்கியது. அண்ணா எதற்கு இங்கே திடீரென்று வந்தார்?

பெரியவா இருக்கும் இடம் தேடி அண்ணா தரிசனம் செய்ய வந்தது இது தான் முதல் முறை. அண்ணாவின் எதிர்பாராத திருப்பதி விஜயத்தால் மனத்தில் பீதி குடிகொண்டது. அதைப் புரிய வைக்க சிறுவிளக்கம் தேவைப்படுகிறது.

சில நாட்களாக குடும்பத்தில் சச்சரவும் சலசலப்பும் நிலவியது. கூட்டுக் குடும்பத்தின் அடித்தளமே ஆடிக்கொண்டிருந்தது. முந்தைய தினம் அது முற்றிப்போய், பகிரங்கமாக வெளிப்பட்டு வெடித்தது. இதனால் அண்ணர்வின் மனச்சாந்தி குலைந்து, மனம் உடைந்து சுக்குநூறாகிவிட்டிருந்தது. எப் போதுமே குடும்ப விவகாரங்களில் பட்டும் படாமலுமாக வாழ்ந்து, அண்ணா வுக்குப் பக்கபலமாக மட்டுமே இருந்து பழக்கப்பட்ட என்னை அவரது சோகம் வெகுவாகப் பாதித்தது. எனவே, திருப்பதி கிளம்பும் முன் அண்ணாவிடம், ''வீணாகக் கவலைப்படாதே... நான் இன்று பெரியவாளுடன் மலையேறிச் சென்றுவிட்டு, ஸ்ரீ வேங்கடாசலபதியைத் தரிசித்துவிட்டு வருகிறேன். மனச் சாந்தி கிடைக்கும்'' என்று உறுதி கூறிவிட்டுப் புறப்பட்டு வந்தேன்.

'என்னைத் தொடர்ந்து, அண்ணா ஏன் வந்திருக்கிறார்...?' நான் கலவரத் துடன் குழம்பிக் கொண்டிருந்தபோது, ஒருவர் வந்து, 'உத்தரவாறது' என்றார். பெரியவா தங்கியிருந்த இடம் தேடி விரைந்தேன்.

நான் சென்ற சமயம் தரிசனம் செய்துகொண்டிருந்த இரண்டு மூன்று பேருக் குப் பிரசாதம் கொடுத்து அனுப்பிவிட்டு, அங்கு நின்றிருந்த கண்ணனைப் பார்த்து, ''நீ அந்த வாசப்படிகிட்டே போய் நின்னுண்டு, யாரும் உள்ளே வராமப் பார்த்துக்கோ'' என்று சொன்னார்.

அன்று பெரியவா முக்கால்மணி நேரத்துக்குமேலே பேசிக்கொண்டிருந்த போது, கூறிய முக்கிய விஷயங்களில் ஒன்றை மட்டும் தற்போது தெரிவிக்க விரும்புகிறேன். ''இங்கேருந்து நேரே காஞ்சீபுரம் போனதும் பூஜையையும் நிர்வாகத்தையும் புதுப் பெரியவாகிட்டே ஒப்படைச்சிட்டு நான் மடத்தை விட்டுட்டுத் தனியா போயிடப்போறேன்.''

முந்தைய தினமோ அதற்கு முன்தினமோ நான் பெரியவாளிடம் வீட்டின் சூழ்நிலையையோ, அண்ணாவின் மனநிலைப் பற்றியோ ஒரு வார்த்தைகூடக் கூறவில்லை. மனதுக்குள் பிரார்த்தனை செய்துகொண்டதோடு சரி. அப்படி இருக்க, என்னிடம் தாம் தனியாகப் போவதைப்பற்றிப் பெரியவா தற்போது கூறியது எனக்குப் பொருள் பொதிந்ததாகப்பட்டது.

இறுதியில் சி.எஸ்.ஆரும் அண்ணா ராதாகிருஷ்ணனும் வந்திருப்பதாக கண்ணன் வந்து சொல்ல, அவர்களை உள்ளே வரச்சொல்லி, சி.எஸ்.ஆருடன் சற்று நேரம் பேசிவிட்டு, அவருக்குப் பிரசாதம் கொடுத்துவிட்டு, மற்றொரு பிரசாதத்தை எடுத்து வரச்சொல்லி, என்னையும் அண்ணாவையும் சேர்ந்து எடுத்துக்கச் சொன்னார் பெரியவா. 'ராதாகிருஷ்ணா' என்று பெரியவா அழைத்த விதம் காதில் அமுதமாகப் பாய்ந்தது. அது அண்ணாவின் மனச் சஞ்சலத்தையும் நிச்சயம் அகற்றி சாந்திநிலவச் செய்திருக்கும்.

முதல் நாள் எனக்குத் தனியாகப் பிரசாதம் தந்துவிட்டு, பின்னர் இரவு தங்கச்சொல்லிவிட்டு, அன்று எங்கள் இருவருக்கும் சேர்த்து ஒரு பிரசாதம் கொடுத்ததைப் பின்னாட்களில் நான் அடிக்கடி நினைத்துப் பார்த்துக் கொள்வேன். ஆனால், அதன் காரணம் முழுமையாகப் புரிந்து விட்டதாகக் கூற முடியாது.

மறுநாளே ஒன்று மட்டும் புரிந்தது. முதல் நாள், ஸ்ரீநரசிம்ம ஜயந்தியன்று, மதியம் சந்நிதியில் எனக்குப் பிரசாதம் கொடுத்துவிட்டு அடுத்த கணம், இரவு தங்கிவிட்டு மறுநாள் காலை செல்லும்படி உத்தரவான கிட்டத்தட்ட அதே நேரத்தில்தான் சி.எஸ்.ஆர். எங்கள் வீட்டுக்கு வந்து அண்ணாவைத் திருப்பதிக்கு தம்முடன் வரும்படி கூறி அழைத்து வந்திருக்கிறார். அவரை ஒரு கருவியாகக் கொண்டு பெரியவாதான் அண்ணாவைத் திருப்பதிக்கு அழைத்து வந்திருக்க வேண்டும்; வரப்போகும் ஒரு கண்டத்திலிருந்து அவரைக் காப்பாற்றுவதற்காக எங்கள் குலதெய்வமான வேங்கடாசலபதியின் சந்நிதிக்கு அழைத்துப் பிரசாதம் தந்திருக்க வேண்டும் என்று திடமாக நான் நம்புகிறேன்.

திருப்பதி தரிசனம் நடந்து ஓராண்டு கடந்த பின்னர், சி.எஸ்.ஆர். தம்பதியுடன் அண்ணாவும் நானும் சில நாட்கள் குற்றாலத்தில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த போதுதான் அண்ணாவுக்கு, ஜன்மப்பகைவனுக்கும் வரக்கூடாத கொடிய நோயின் முதல் அறிகுறி தோன்ற ஆரம்பித்தது. சென்னைக்கு வந்ததும் உணவு விழுங்க முடியாமல் அவர் அவதியுற்றதையடுத்து குடும்ப டாக்டர் வர்மா, 'எக்ஸ்ரே' மூலம் உணவுக்குழாயில் அடைப்பு இருப்பதைக் கண்டு பிடித்து, மறைந்த மாமேதை டாக்டர் சாதசிவம் அவர்களிடம் அனுப்பிவைத்தார். அந்த வாரமே அறுவை சிகிச்சை செய்தாக வேண்டும் என்று அவர் அவசரப் படுத்த, சின்னக் காஞ்சீபுரம் கோயில் ஒன்றில் தங்கியிருந்த பெரியவாளிடம் ஆசிபெற்றுவந்து அண்ணாவை மருத்துவமனையில் சேர்த்தேன். ஆசி பெறச் சென்றபோது பெரியவாளுக்கு முந்திரி, கற்கண்டு, உலர்ந்த திராட்சை வாங்கிச் சென்றிருந்தேன். 'அதிலிருந்து ஒன்றிரண்டு அவர் பிட்சை பண்ணினால், அண்ணாவின் வயிற்றுநோய் குணமாகி, சாப்பிடுவாரே!' என்ற ஆசை எனக்கு. மூன்றும் தனித்தனியே வைக்கப்பட்டிருந்த மூங்கில்தட்டை அப்படியே ஓர் இலையில் கவிழ்த்து, "இதை சந்திரமௌளீச்வர் பூஜைக்குக் கொண்டு போய்க் குடு" என்றார். பெரியவா சுவீகரித்துக் கொள்ளவில்லையே என்று எனக்குச் சற்றுத் தாபம்தான். ஆனால், மூங்கில்தட்டை பெரியவா கீழே வைத்த போது பார்த்தேன். அதில் மூன்று கற்கண்டு, இரண்டு முந்திரி, ஓரிரு திராட்சைகள் மீதம் இருந்தன! அதைக்கண்ட அக்கணமே, அண்ணா பிழைத்துவிடுவார் என்ற நம்பிக்கைப் பிறந்தது.

அண்ணாவின் அறுவை சிகிச்சைக்கு நேரம் குறித்துவிட்டு, "திருப்பதிக்குப் போறேன். சுவாமி தரிசனம் செய்துவிட்டு வந்து ஆபரேஷன் செய்கிறேன்" என்று டாக்டர் கூறிச்சென்ற அதிசயமும், அறுவை சிகிச்சைக்குப் பின் தாங்க முடியாத வயிற்றுவலிக்கு மருந்து கேட்டபோது "முதலில் அண்ணாவைத் திருப்பதிக்கு அழைத்துச் சென்று தரிசனம் செய்து அழைத்து வாருங்கள்... பிறகு மருந்து சொல்கிறேன்" என்று கூறிய அதிசயமும் நிகழ்ந்தன. டாக்டர் கூறியவாறே, இரவு பூராவும் தாங்க முடியாத வலியோடு க்யூவில் நின்று தரிசனம் செய்வித்து அழைத்து வந்தேன். அதற்குப்பிறகு, என்ன ஆபரேஷன் செய்தார் என்று ரிப்போர்ட் கொடுக்காமலே, அடுத்து என்னென்ன மருந்துகள் தரப்பட வேண்டும் என்று கூறாமலே, ஒரு வாரத்துக்குள் திடீரென்று டாக்டர் சதாசிவம் மறைந்து விட்டார்.

மருத்துவ உலகத்துக்கே பேரிழப்பாகக் கருதப்பட்ட அந்த மேதையின் மறைவு, எங்களையும் பேரிடியாகத் தாக்கியது. ஆபரேஷனின்போது வயிற்றுப்பை முழுவதையுமே அகற்றியிருந்த டாக்டர் சதாசிவம், ''கவலைப்பட வேண்டாம். போகப்போக உன் அண்ணா ஆறு அவுன்ஸ் அரிசி சாப்பிடுவார்'' என்று கூறியிருந்தார். அதைப் பெரியவாளிடம் கூறியபோது ''கொஞ்சங் கொஞ்சமா வயிறு வளரும்னு டாக்டர் சொன்னாரா?'' என்று சின்னதாக விரல்களைக் குவித்து, கொஞ்சம் கொஞ்சமாகப் பெரிதாக்கிப் பெரியவா பரிவுடன் கேட்ட காட்சி, இன்றும் என் கண்முன்னால் நிற்கிறது.

வயிறு வளர்ந்தது. முன்பு போலவே சாதாரணமாகச் சாப்பிட்டு, நோய், நொடியின்றி பத்து ஆண்டுகள் அண்ணா வாழ்ந்திருந்தார். அது பெரியவா இட்ட பிச்சை. சந்தேகமில்லை.

இதை எழுதிக்கொண்டேயிருக்கும்போது எனக்கோர் எண்ணம் தோன்றுகிறது.

ஸ்ரீவேங்கடாசலபதி ஆலய விமானத்தில் மார்க்கண்டேயருக்கு அடைக்கலம் தந்த பரமேச்வரன் காலனைக் காலால் உதைப்பது போன்று ஒரு சிற்பத்தைப் பார்த்தாகக் கூறி, பெரியவா எனக்கு அடிக்கடி நினைவுபடுத்திக் கொண்டிருந்தாரே... அந்தப் பரமேச்வரன்தான், பின்பு என் அண்ணாவின் உயிரைப் பறிக்க வந்த எமனைப் பத்தாண்டுகள் விலகியிருக்கும்படிப் பணித்தாரோ? அதனால்தான் திருப்பதிக்கு அழைத்து அண்ணாவுக்குப் பெரியவா பிரசாதம் அளித்தாரோ...? பெரியவா சொல்லுக்கும் செயலுக்கும் விளக்கங்கள் கொடுக்க முனைந்தால் தோற்றுத்தான் போவோம்... ஆனால், அற்பமானிட அறிவால் சிந்திக்காமல் இருக்க முடியவில்லையே...

**ப**ல வருடங்களுக்குமுன், காஞ்சீபுரம் சர்வதீர்த்தத் திருக்குளத்தில் பெரியவா ஸ்நானம் செய்து கொண்டிருந்தார். நிறையப் பேர் படிகளில் நின்று கொண்டு அந்த ஆனந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தோம். கரைமீது நின்றபடி மெலிந்த உருவத்தில் ஒரு பக்தர் கதறிக்கொண்டிருந்தார்.

''சாட்சாத் பரமேச்வரனே கைலாசத்துலேர்ந்து இறங்கிவந்து ஸ்நானம் பண்ணிண்டிருக்கார்... உங்களுக்கெல்லாம் கண் தெரியலையா? தரிசனம் பண்ணிக்கோங்கோ, கால்லே விழுங்கோ... சர்வவேச்வரா, மகேச்வரா, பரமேச்வரா இவாள்லாம் உங்களை யாருன்னு தெரிஞ்சுக்காம வேடிக்கை பார்த்துண்டிருக்காளே...'' என்று விடாமல் அரற்றி, அவர் கன்னத்தில் போட்டுக் கொண்டதைப் பார்த்து சிலர் அந்தப் 'பைத்தியத்தை' விரட்டுவதில் முனைந்தார்கள். பெரியவா தலையை நிமிர்த்தி அவரைப் பார்த்து, சற்றுநேரம் புன்னகைத்தவாறே இருந்துவிட்டு, ''அவரை ஒண்ணும் சொல்லாதீங்கோ... பேசாம இருங்கோ...'' என்று அந்தப் பக்தரை விரட்ட முற்பட்டவர்களிடம் கூறினார்.

காட்சி தரும் தெய்வத்துக்கும் காட்சியைக் காணும் பக்தருக்கும் அல்லவா ரகசியம் புரியும்?

ஸ்ரீ வரதராஜப் பெருமாள் கோயில் சந்நிதித் தெருவிலுள்ள கல்யாண மண்டபம் ஒன்றில் பெரியவாளுக்கு கண்ணில் 'காட்டராக்ட்' ஆபரேஷன் நடைபெற்றது. 'சங்கர நேத்ராலயா' டாக்டர் பத்ரிநாத் அதை வெற்றிகரமாக நடத்தியதோடு, தினமும் விடியற்காலை சென்னையிலிருந்து சின்னக் காஞ்சீபுரத் துக்குச் சென்று தேவையான சிகிச்சை அளித்து வந்தார்.

ஒரு நாள், பெரியவாளுக்குக் கைங்கர்யம் செய்யும் பிரம்மச்சாரிகளில் ஒருவர் அலுவலகத்துக்கு வந்தார். மறுநாள் விடியற்காலை பெரியவா கல்யாண மண்டபத்திலிருந்து புறப்படப் போவதாகவும், அந்தச் செய்தியை டாக்டர் பத்ரிநாத்துக்கும் எனக்கும் மட்டும் தெரியப்படுத்தும்படியாகவும் உத்தரவான தாக 'அவர் கூறிவிட்டுச் சென்றார். நான் அன்று இரவே சின்னக் காஞ்சீபுரம் சென்றுவிட்டேன்.

விடியற்காலை மூணேமுக்கால் மணிக்குப் பெரியவா வெளியே வந்தார். ஸ்ரீகண்டனைச் சேர்த்து நான்கு பேர் மட்டுமே அவருடன் இருந்தனர். அவர் களோடு நானும் சேர்ந்து கொண்டேன். சந்நிதித் தெரு உறங்கிக் கொண்டிருக்க, மெள்ள, மௌனமாக நடந்து சென்றார் பெரியவா. நாங்கள் நான்கு பேரும் மிக அமைதியாகப் பின்னால் நடந்து கொண்டிருந்தோம்.

ஸ்ரீவரதராஜப் பெருமாள் ஆலய ராஜகோபுரத்தை அண்ணாந்து பார்த்து, முழங்காலிட்டு, சந்நியாசிகளுக்கே உரிய வகையில் தண்டம் ஊன்றி நமஸ்காரம் செய்தார் பெரியவா. பெருமாளையும் பெரியவாளையும் சேர்த்து நமஸ்காரம் செய்து கொண்டேன் நான்.

பெரியவா கோபுர தரிசனம் செய்த பண்பும் பாங்கும் என் சிந்தையைக் கிளறின. கூரத்தாழ்வாருக்குக் கண்பார்வை தந்த தெய்வம் அன்றோ ஸ்ரீவரத ராஜப் பெருமாள். அதனால்தான் பெருமாள் சந்நிதியிலேயே பெரியவா அறுவைச் சிகிச்சை செய்து கொண்டாரோ? அதற்காகத்தான் அங்கிருந்து புறப் பட்டதும் முதன்முதலில் பெருமாளுக்கு நமஸ்காரம் செய்து தம் நன்றியைத் தெரிவித்துக் கொண்டாரோ?

தெற்கு மாடவீதியில் 'ஸ்ரீகாமகோடி சேஷாத்ரி சுவாமிகள் நிவாஸ்'த்தின் வாசலில் திரு கோபால தீட்சிதர், பூர்ணகும்பத்துடன் நின்று கொண்டிருந்தார். அப்போது அங்கு டாக்டர் பத்ரிநாத் தமது துணைவியாருடன் அவசர அவசர மாக வந்தார். பெரியவா பூர்ணகும்ப மரியாதையை ஏற்றுக்கொண்டு, அந்த இல்லத்துக்குள் காலடி எடுத்து வைக்கும் நேரம். நான் ஒரு புறமும் பத்ரிநாத் ஒரு புறமுமாகப் பெரியவாளுக்கு நமஸ்காரம் செய்தோம். பெரியவா சைகை காட்ட இருவரும் பெரியவாளைத் தொடர்ந்து உள்ளே சென்றோம்.

கண் அறுவை சிகிச்சை முடிந்து, பெரியவா கல்யாண மண்டபத்தை விட்டுப் புறப்படும்போது அறுவை சிகிச்சை செய்த டாக்டருக்குச் சொல்லி யனுப்பியதைப் புரிந்துகொள்ள முடிந்தது. ஆனால், நான் உடனிருக்க வேண்டும் என்று உத்தரவானது எதற்காக என்று புரியாமல் அங்கு வந்த

எனக்கு, ஸ்ரீ சேஷாத்ரி சுவாமிகள் வாழ்ந்த இல்லத்துக்கு எழுந்தருளும்போது நானும் உடன் இருக்க வேண்டும் என்று கருணைத் தெய்வம் அருள் பாலித் திருக்க வேண்டும் என்பது அப்போதுதான் புரிந்தது.

ஸ்ரீகாஞ்சி மகான், எவ்வகையிலும் அருகதையற்ற என்னிடம் அன்பு செலுத்தி, அருள்மாரி பொழிந்ததோடு, ஸ்ரீகாமாட்சி தேவியின் தாசராய், மாசித்தராய், பிரும்மஞானியாய்த் திகழ்ந்த ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகளின் பெருமைகளை எனக்கு அடிக்கடி எடுத்துக் கூறி, அம்மகானது சேவையில் எனக்கு ஆர்வம் ஏற்படச் செய்தார். அதன் மூலம், இந்த ஜன்மாவைப் பயனுள்ளதாக்கி, எங்கள் வம்சம் தழைக்க வழிவகுத்துத் தந்தவரும் என் முன்னோர்கள் செய்த தவப்பயனாய் இப்பிறவியில் என்னை ஆட்கொண்டவருமான வள்ளல் பெருமானுக்கு என் உள்ளத்தை உறைவிடமாக்கி உயிருள்ள வரை வழிபடுவதைத் தவிர என்னால் வேறு என்ன கைம்மாறு செய்ய இயலும்..?

*'அருணாசல மகிமை'யை எழுதிக் கொண்டிருந்தபோது, ''சின்ன காஞ்சீபுரத்தில் 1870 முதல் 1889 வரை சுவாமிகள் வாழ்ந்திருந்த வீடு எதுவென்று தெரியவில்லையே'' என்று நான் ஒரு நாள் பெரியவாளிடம் கூறியபோது, ''அதை நீ கண்டுபிடியேன்'' என்று அருளி, அதைக் கண்டுபிடிப்பதற்கான முயற்சிகளில் என்னை ஈடுபடுத்தி, ''இவரைப் போய்ப் பார், அவரிடம் போய்க் கேள்'' என்று என்னைத் தூண்டி, 'இரண்டு மூன்று வீடுகளில் எதுவாக இருக்கும்' என்ற பிரச்னை எழுந்தபோது, அந்த வீட்டைக் கட்டிய கொத்தனார் ஏகாம்பரம் என்ற முதியவர், பழைய நினைவுகளில் மூழ்கி, ''பத்தொம்பது வயசுலே அந்த வீட்டுப் பெரிய புள்ளை பைத்தியம் பிடிச்சு வீட்டை விட்டு ஓடிட்டாரு'' என்று கூறிய விவரத்திலிருந்துதான் அந்த 'ஞானப் பித்த'ரின் வீட்டை இறுதியாகக் கண்டுபிடிக்க முடிந்தது. இந்த விவரத்தை 'அருணாசல மகிமை'யில் குறிப்பிட்டு இருக்கிறேன். அதன்பிறகு, கொல்லவார் சத்திரத்தில் பெரியவா தங்கியிருந்த போது, ஒரு நாள் ''திருவாரூர்லே சங்கீத மும்மூர்த்திகள் வீடுகளை வாங்கியிருக்கிற மாதிரி, நாம இந்த வீட்டை வாங்கிடலாமா?'' என்று கேட்டதும், பின்பு பெரியவா குறிப்பிட்டவர்களைக் கொண்டு ஒரு கமிட்டி அமைத்து, பணம் வசூலித்து, திரு. டி. சிவப்பிரகாசத்திடமிருந்து அந்த இல்லத்தை வாங்கியதும், அதன் பிறகு பெரியவா அங்கு சுவாமிகளின் பெரிய வண்ணப்படம் ஒன்று வைக்கச் சொன்னதும், அங்கு பூஜை செய்ய மூவலூர் கோபால தீட்சிதர் குடும்பத்தைக் குடியமர்த்தியதும், அவரை அங்கு அக்னி ஹோத்திரமும்; இஷ்டி ஹோமமும் செய்யப் பணித்ததும், சுவாமிகளின் திதியான மார்கழி மாதம் நவமியன்று ஆராதனை தொடங்கி வைத்ததும், பின்னர், தேனம்பாக்கம் சிவாஸ்தான மண்தரையில் 'ப்ளான்' போட்டுக் காட்டியபடி, அந்த இல்லத்தை மாற்றியமைத்து, மண்டபம் ஒன்று எழுப்பும்படி அருளாணையிட்டதும், அதை நிர்வகிக்க ஓர் அறக்கட்டளையை நிறுவச்செய்து, நல்லி குப்புசாமி செட்டி, 'சங்குபாணி' சிவராஜ முதலியார், கே.ஆர். விசுவநாதன் இவர்களுடன் என்னையும் இணைத்து அறங்காவலர்களாய் நியமித்ததும், 1985-ல் தை மாத ஹஸ்த நட்சத்திரத்தன்று சுவாமிகளின் ஜயந்தியைக் கொண்டாடும்படி கூறி, அதை வருடாந்தர விழாவாக நடத்த அருளியதும் விளம்பரமின்றிப் பெரியவா சாதித்துள்ள நூற்றுக்கணக்கான அறப்பணிகளில் ஒன்றாகும்.*

*1987-ம் ஆண்டு, ஜனவரி 21-ம் தேதி ஸ்ரீசேஷாத்ரி சுவாமிகளின் ஜயந்தி நாள் (தை மாதம் ஹஸ்தம்), வழக்கப்படி அன்று காலை பெரியவாளுக்கு ஜயந்திப் பத்திரிகை சமர்ப்பிக்கச் சென்றிருந்தேன். அப்போது, இரண்டு நாட்களுக்கு முன் நான் திருவையாறு ஸ்ரீதியாகராஜ சுவாமி ஆராதனைக்குச் சென்று*

வந்ததையும் அங்கு கண்ட காட்சிகளையும் பெரியவாளிடம் விவரமாகக் கூறினேன். அங்கு நடைபெறும் உஞ்ச்சவிருத்தியைப் பற்றி நான் கூறியபோது, பெரியவா, "சேஷாத்ரி சுவாமிகளின் ஜயந்தியிலும் உஞ்ச்சவிருத்திக்கு ஏற்பாடு பண்ணிடு" என்றார். "அடுத்த வருடத்திலிருந்து தொடங்குகிறேன்" என்றேன் நான். "அடுத்த வருஷம் என்ன..? இந்த வருஷமே, இன்னிக்கே ஆரம்பிச்சுடு" என்றார் பெரியவா.

"உஞ்ச்சவிருத்திக்கு எப்படி ஏற்பாடு பண்ணணும்னு எனக்குத் தெரியாது. யாரையாவது கேட்டுத்தான் பண்ணணும்.. திடீர்னு எப்படி..?"

"ஏன்.. என்ன கஷ்டம்.. உஞ்ச்சவிருத்தி பிராம்மணரைத் தேடிண்டு எங்கே போறதுன்னு யோசிக்கிறியா? இதோ, இவருக்கு ஒரு தலைப்பாவைக் கட்டி, ஒரு சொம்புலே கயிறைக் கட்டித் தோள்லே தொங்கவிட்டு, வீதிலே போனா, பொண்டுகள் வந்து அட்சதை போடுவா. அதை வாங்கிண்டு வரவேண்டியது தானே" என்றார் பெரியவா.

பெரியவா எனக்குக் காட்டிய முதியவர் சேதுராமன் அவர்கள். உயரமாக, எலும்பும்தோலுமாக, படத்தில் பார்க்கும் தியாகராஜ சுவாமிகள் போன்றே இருந்தார்!

"பஜனைக்கு ஏற்பாடு பண்ணணுமே" என்றேன்..

"யார் சொன்னா? இவரை அழைச்சுக்கோ, நீ ஏதாவது நாமாவளி சொல்லிண்டு கைலே தாளம் போட்டுண்டே முன்னாலே போ.. போறும்.. இன்னும் யாராவது வந்தா அவாளையும் சேர்த்துக்கோ.. இல்லாட்டா நீங்க ரெண்டு பேரும் மட்டும் மாடவீதியைச் சுத்திண்டு வாங்கோ.."

"என்ன சொல்லிண்டு போறது.."

பெரியவா யோசித்துவிட்டு, கையில் தாளம் போட்டபடி,

"'*ஜய ஜய ஜய ஜய காமாட்சி*
*ஜய ஜய ஜய ஜய காமகோடி*
*ஜய ஜய ஜய ஜய சேஷாத்ரி*'ன்னு

சொல்லிண்டே போ... வெயில் ஏர்றதுக்கு முன்னாலே போங்கோ" என்று கூறி எங்களை அனுப்பி வைத்தார்.

அன்று பெரியவா சொல்லிக் கொடுத்த மாதிரியே உஞ்ச்சவிருத்தி நடைபெற்றது. அதற்கு அடுத்த ஆண்டிலிருந்து பாபநாசம் ஸ்ரீகுஞ்சுமணி பாகவதரின் பஜனைக் கோஷ்டியினர் உஞ்ச்சவிருத்தியில் கலந்துகொள்ளத் தொடங்கினர். அவர்கள் பின்னால் பாடிக்கொண்டுவர, நாங்கள் ஐந்தாறு பேர் முன்னால் பெரியவாள் உபதேசித்த

*'ஜய ஜய ஜய ஜய காமாட்சி*
*ஜய ஜய ஜய ஜய காமகோடி*
*ஜய ஜய ஜய ஜய சேஷாத்ரி'*

என்ற நாமாவளி மந்திரத்தைச் சொல்லிக்கொண்டு போவோம். அவ்வப்போது பஜனைக் கோஷ்டியினரும் இந்த நாமாவளிக்கு சங்கீத மெருகேற்றி உள்ளம் உருக இசைப்பார்கள்.

என் நண்பரும் நானும், சுவாமிகளின் இல்லத்தைப் பதிவு செய்யும் விஷயமாக ஒரு நாள் பெரியவாளிடம் பேசிக் கொண்டிருந்தோம். நண்பரின் பெயர் சேஷாத்ரி! அப்போது பெரியவா சிரித்துக் கொண்டே, "அன்னிக்கு ஒரு நாள்

பேசிண்டிருந்தோமே, மொத்தம் எத்தனை 'சேஷாத்ரி'கள்?'' என்று கேட்டார். நாங்கள் மனக்கணக்குப் போட்டுக்கொண்டிருந்தபோது ''மொத்தம் அஞ்சா, நாலா?'' என்று கேட்டார். நாங்கள் ''நாலு'' என்றோம். பெரியவா ''அஞ்சு'' என்று சொல்லிவிட்டு விரல்விட்டு எண்ணத் தொடங்கினார். ''முதல்லே சேஷாத்ரி சுவாமிகள். (நண்பரைக் காட்டி) இவன் ஒரு சேஷாத்ரி. டாக்குமென்ட்ஸெல்லாம் சரிபார்த்தாரே வக்கீல், அவர் ஒரு சேஷாத்ரி. ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ் கிளார்க் ஒரு சேஷாத்ரி... அப்புறம் – உங்கப்பாவும் சேஷாத்ரியாச்சே...''

ரொம்ப புத்திசாலியைப் போல் ''சேஷாசலம்'' என்று திருத்தினேன் நான்..

''ரெண்டும் ஒண்ணுதாண்டா'' என்றார் பெரியவா..

அதன்பிறகு சேஷாத்ரி சுவாமிகளைப் பற்றிக் குறிப்பிடும்போதெல்லாம், என் தந்தையின் நினைவு வரத் தொடங்கியது. அதேபோன்று, அப்பாவை நினைக்கும்போதெல்லாம் அவர் பெயரைக் கூறும்போதெல்லாம், எனக்கு சேஷாத்ரி சுவாமிகளின் பெயரும் நினைவுக்கு வரத் தவறுவதில்லை.

சேஷாத்ரி சுவாமிகளின் பெரிய உருவப்படம் ஒன்றைத் தயார் செய்து தேனம்பாக்கம் எடுத்துச் சென்றிருந்தேன். அப்போது கண் ஆபரேஷன் ஆகாததால், படத்தின் மிக அருகில் போய் உட்கார்ந்து பெரியவா உன்னிப்பாகக் கவனித்துப் பார்த்தார். பின்னர், படத்திலுள்ளது போலவே கால்களை மடித்து, இடக்கையை முகவாயில் வைத்துக் கொண்டு புன்சிரிப்புடன் காட்சி தந்து, ''இந்த மாதிரிதானே சுவாமிகள் உட்கார்ந்திருக்கார்?'' என்று கேட்டார். எனக்கு ஒரு கணம் சேஷாத்ரி சுவாமிகளுக்கும் பெரியவாளுக்கும் வித்தியாசமே தெரியவில்லை. இந்த அபூர்வக் காட்சியைக் கண்டு நெகிழ்ந்துபோய், ஆனந்தக் கண்ணீர் பொங்க, இருவருக்கும் சேர்த்து நமஸ்காரம் செய்து எழுந்தேன்.

பின்னர் ஒரு நாள், சேஷாத்ரி சுவாமிகளின் ஞான சித்தராய்த் திகழ்ந்த பரப்பிரும்ம நிலையை எனக்கு உணர்த்தவும், அவர் மீது எனக்கு மாறாத பக்தி ஏற்படவும் என்னிடம் ஒரு கேள்வியைக் கேட்டார் பெரியவா... இன்றும் நினைவிலும் கனவிலும் அந்தக் கேள்வி என் இதயத்தில் எதிரொலித்துக் கொண்டேயிருக்கிறது...

''டேய்... நான் சேஷாத்ரி சுவாமிகள் போல ஆவேனா.. அந்த நிலை எனக்கு வருமா...?''

எந்த மகானை ஒவ்வொரு கணமும் நான் தெய்வமாகத் தரிசித்துப் பரவசப்பட்டுக் கொண்டிருக்கிறேனோ, அந்தப் பரிபூரணனே, சேஷாத்ரி சுவாமிகள் அடைந்த நிலையை அடைய விரும்புகிறார் என்றால்.. சேஷாத்ரி சுவாமிகள் எந்த நிலையிலிருந்தார் என்பதை இதற்கு மேல் தெளிவாக விளக்கிச் சொல்ல முடியுமா?

இந்த ஆண்டு ஜனவரி மாதம் 6-ம் தேதி சேஷாத்ரி சுவாமிகளின் ஆராதனை நாள். அதற்கான சில ஏற்பாடுகளைச் செய்வதற்காக டிசம்பர் மாதம் 29-ம் தேதி ஸ்ரீமடத்துக்குச் சென்றிருந்தேன்... பெரியவா இரண்டு மூன்று நாட்களாகத் தரிசனமே தராமல் உள்ளேயே படுத்திருப்பதாகக் கூறினார்கள். தொந்தரவு செய்ய வேண்டாம் என்று நான் சிம்ஸன் வைத்தாவிடம், சேஷாத்ரி சுவாமிகள் ஆராதனை 6-ம் தேதி வருகிறது. அதைப் பெரியவா காதில் போட்டுவிடும்படி கூறினேன். ''வேண்டாம், வருஷா வருஷம் வந்து சொல்லுவியே.. அதேமாதிரி உள்ளே வந்து நீயே பெரியவாகிட்டே சொல்லிட்டுப் போயிடு'' என்று என்னை உள்ளே அழைத்துச் சென்றார் வைத்தா.

பெரியவா படுத்துக் கொண்டிருந்தார். ''சேஷாத்ரி சுவாமிகள் ஆராதனை



6-ம் தேதி. பெரியவாகிட்டே விஞ்ஞாபனம் செய்து கொள்றேன்'' என்றேன்.

அதைக் கேட்டுக் கொண்ட பெரியவா 'சரி' என்பது போல் தலையசைத்தார்.

அதுதான் சரீரத்துடன் கூடிய பெரியவாளின் கடைசி தரிசனம் எனக்கு.

ஜனவரி 8-ம் தேதி – மதியம் பெரியவா சரீரத்தை மறைத்துக்கொண்டு விட்டார்.

சேஷாத்ரி சுவாமிகளின் ஆராதனை மார்கழி மாதம் நவமி. பெரியவாளின் ஆராதனை மார்கழி மாதம் துவாதசி.

எங்கும் நிறை அகண்ட பிரும்மமாய், அன்பாய், அருளாய், பேரறிவாய், பேரொளியாய் என்றென்றும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் பிரபஞ்ச மகாசக்திக்கு எனது இந்த நீங்கா நினைவுகளைக் காணிக்கையாக சமர்ப்பிக்கிறேன்.





**செ**ன்னை, லயோலா கல்லூரியில் பி.காம். பயின்று, 1948-ல் பட்டம் பெற்று, 1949-லிருந்து ஆனந்த விகடனில் அரசியல் கார்ட்டூன்களும் நகைச்சுவைத் துணுக்குகளும் வரைந்து வந்த 'ஸ்ரீதர்', 1956-ல் விகடன் ஆசிரியர் குழுவில் சேர்ந்து கார்ட்டூனிஸ்ட்டாகப் பணியாற்றத் தொடங்கினார். 'மெரீனா' என்ற பெயரில் நாடகங்களும் 'பரணீதரன்' என்ற பெயரில் ஆலயப் பயணக்கட்டுரைகளும் எழுதி, தமிழ் வாசகர்களுக்கு நன்கு அறிமுகமானவர். விகடனின் இணை ஆசிரியராகப் பணியாற்றி 1985-ல் ஓய்வுபெற்றார்.

விகடனில் இவர் எழுதியுள்ள பல்வேறு தொடர் கட்டுரைகள், பதினான்கு நூல்களாக வெளிவந்துள்ளன. இவர் இதுவரை எழுதியுள்ள பதினெட்டு நாடகங்களில், பதினாறு மேடையேறியுள்ளன. பதினான்கு நூல்வடிவம் பெற்றுள்ளன.

PRINTED BOOKS